ஸ்ரீ

# கல்கி

விவசாய இதழ்

## பொருளடக்கம்

சோபகிருது, மார்கழி 28 ★ ஜனவரி 12



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

பட விளக்கம் 23ம் பக்கம் பார்க்க

# பொங்கலோ பொங்கல்!

செந்நெல் கதிர்கள் பொன்னொளியாய் மெருகிட
கன்னலும் காய்கறியும் களஞ்சியமாய்த் தழைத்திட
நன்றுணர்வாம் இந்நாள் நன்றியுடன் நினைக்கின்றோம்
இன்னருள் பொழிந்த நம் இந்திய மண்வளத்தை!

எல்லா அன்பர்களுக்கும் இந்நாள்
நல்லாசி வழங்குகிறோம்!






கோல்டன் டுபாக்கோ கம்பெனி ப்ரைவேட் லிட்.,
பம்பாய்-56.
பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. (Sp.) 26 Tam. Greens' Advtg.



மலர் 23 | இதழ் 24

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# வீட்டைக் கவிழ்க்கும் மாற்றம்

பொங்கல் திருவிழா பூதேவியின் சுபமங்களப் பிரஸவத் திருவிழா. மனிதனுக்குத் தோழர்களாக வாழும் பட்சிகள், கால்நடைகள் அனைத்துடனும் மக்களுக்கு வேண்டிய மகிழ்ச்சியைத் தரும் பூமாதேவியின் மங்களோற்சவம்.

இது, விவசாயம் செய்யும் சுதந்திரக் குடியானவர்களும் அவர்களுக்குத் துணையும், தோழமையும் தந்து உதவும் அனைவரும் கூடிச் சந்தோஷமாக ஆணும் பெண்ணும் சம மகிழ்ச்சியுடன் கொண்டாடும் திருவிழா.

இந்தச் சமயத்தில் ஒரு பேய் நமக்குப் பின்னால் கரேலென்று நிற்கிறது. அதுவே பதினேழாவது அரசியல் சாஸன மாற்றம். ஒன்றன் பின் ஒன்றாகப் பதினேழாவது மாற்றத்துக்கு வந்து விட்டோம். வீட்டைக் கவிழ்க்கும் மாற்றம் இது.

இந்த மாற்றம் ஏதோ ஒரு நிபந்தனையை மட்டும் மாற்றுவதல்ல; அரசியல் அடித் தத்துவத்தையே மாற்றுகிற மாற்றம் என்று ஒருவர் சரியாகச் சொன்னார்.

சாஸனத்தின் முதல் பாகத்திலே மக்களுக்கு இன்றியமையாத சுதந்திரங்களை ஆணித்தரமான வாசகத்தில் எழுதி, இவை அடிப்படை உரிமைகள் என்று ஊர்ஜிதமாகப் பதிய வைத்து, அந்த அஸ்திவாரத்தின் மேல் பாரத சுபிட்ச ராஜ்யம் கட்டுவோம் என்று பிரமாணம் செய்து அரசியல் சட்டத்தைப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் ஆக்கினோம்.

இப்போது ஒரு புதிய கற்பனையைக் கொண்டு அந்த அடிப்படை ஆதாரத்தை வெட்டித் தள்ளி அரசியல் நடத்துவோம் என்கிறார் நேரு அவர்கள். இதுவே வழி என்கிறார்.

பொங்கல் பொங்குவதைத் தடியைக் கொண்டு அடித்துத் தள்ளுவது போல் ரயத்துகளின் வாழ்க்கையைக் கலைத்துப் பயத்தில் மூழ்கச் செய்கிறார்.

இது வருந்தத் தக்கது. கூடாது என்று குடியானவர்கள் அனைவரும் கூக்குரலிட வேண்டும். செவிடர்கள் காதில் ஏறும் விதத்தில் கூக்குரலிட வேண்டும். பொங்கல் சபதமாக இதைக் கொள்ள வேண்டும். தேவி நம்மைக் காப்பாள்.

சக்ரவர்த்தி ராஜகோபாலாசாரி

# அழிவுப் பாதையில் இன்னுமோர் அடி

பொங்கல் திருநாளை முழு மகிழ்ச்சியுடன் கொண்டாட இயலாமல் புண்ணியம் கட்டிக் கொண்டிருக்கிறது காங்கிரஸ். பாங்கிகளைச் சர்க்கார் எடுத்துக் கொள்ள வேண்டும்; அரிசி மில்களைச் சர்க்கார் நடத்த வேண்டும்; சொத்துக்களுக்கும், வருமானங்களுக்கும் வரம்பு கட்ட வேண்டும் என்றெல்லாம் யோசனைகள் உருவாகியிருக்கின்றன. சர்க்கார், சர்க்கார் என்று சொல்லுவதெல்லாம் ஒரு கட்சித் தலைவர்களின் பிடிவாதங்களும் யதேச்சாதிகாரமுமே என்பதை நினைவில் வைத்துக் கொண்டு பார்க்க வேண்டும். சோஷலிஸ நாடுகள் எல்லாம் தனியாரின் ஊக்கத்தினாலேயே பொருளாதாரம் செழிக்கும் என்ற விழிப்பைப் பெற்று வருகிற நாளில் காங்கிரஸ் மட்டும் கண்மூடித்தனமாகக் கம்யூனிஸக் கொடுங்கோன்மையை நோக்கிச் செல்கிறது. 'தனியாரின் ஏகபோகத்தை ஒழிப்போம்; சொத்துக்களை நாசம் செய்வோம்; ஊழல்களை அழிப்போம்' என்று கூச்சல் போட்டுக் கொண்டு காங்கிரஸ் கட்சியின் ஏகபோகத்தை வளர்க்கவும், காங்கிரஸ்காரர்களிடம் மட்டும் சொத்துக்கள் குவியவும், ஊழல்கள் எல்லாம் காங்கிரஸின் தனி உரிமை ஆவதற்கும் உரிய ஏற்பாடுகளைச் செய்து வருகிறார்கள்.

சர்க்கார் தொழில் நடத்துவதில் லாபமே கிடையாது. இன்று இந்தியாவின் ஒரு சில செல்வந்தர்களுக்குச் சொத்து வரம்பும், வருமான வரம்பும் விதிப்பதால் நாட்டின் நாற்பது கோடி மக்களுக்கு எந்த லாபமும் கிடைக்காது. நியாயமான முறையில் சொத்துக்கள் சேருவதைத் தடுக்காமல் இருந்தால் தான் தொழில் முதலீடுகளுக்கு மூலதனம் கிடைக்கும். லாப நோக்கம் நிறைவேறும் வாய்ப்பிருந்தால் மட்டுமே தொழில்கள் ஊக்கத்துடன் மேற்கொள்ளப்பட்டு, நாட்டின் உற்பத்தி பெருகும். இந்த அடிப்படை உண்மைகளையெல்லாம் புறக்கணித்து விட்டு, செல்வம் உள்ளவர்களைக் கொடுமைப்படுத்தினால் ஏழைகளுக்குத் திருப்தி உண்டாகித் தங்களை ஆதரிப்பார்கள் என்ற எண்ணத்தின் மீதே அநாகரிகமான யதேச்சாதிகாரத் திட்டங்களைப் போட்டு வருகிறார்கள். முதலீடு செய்ய ஊக்கமில்லாத போது ஏழைகளுக்கு எப்படி வேலை வாய்ப்புக்கள் கிடைக்கும்? சோஷலிஸம் என்ற மாயப் பெயரில் செல்வந்தர்களுக்குச் செய்கிற அநீதி இறுதியில் மக்கள்



# ஆவினத்துக்குத் தீவனம்



**மா**ட்டுப் பொங்கல் கொண்டாடுகிறோம். இச்சமயத்தில் மாடுகளுக்குப் பசும் புல் கிடைப்பது எவ்வளவு துர்லபமாகி விட்டது என்ற எண்ணம் தோன்றாமலிராது. எங்கு பார்த்தாலும் ஆலைகளும், கட்டடங்களும் பெருகி வருகிற போது மேய்ச்சல் நிலத்துக்கு எப்படி வழி செய்வது? அப்படியானால் கோமாதாவுக்கு நல்ல உணவு தர இயலாது என்றே விட்டு விடலாமா? இதோ, நடைமுறைக்குச் சாத்தியமான ஒரு யோசனையை ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்து ஆசாரியர்கள் வழங்குகிறார்கள்:

ஒவ்வொரு நகரத்திலும் ஒவ்வொரு கிராமத்திலும் உள்ள புன்செய்த் திடல்களிலும், ஆபீஸ் காம்பவுண்ட்களிலும், பள்ளிக்கூடக் காம்பவுண்ட்களிலும், வீட்டுப் புறக்கடைகளில் ஒரு வேலி போட்டு அதற்குப்பின் உள்ள இடத்திலும் — அந்தந்த இடத்துக்குச் சம்பந்தப்பட்டவர்கள் அகத்தி மரங்களை எவ்வளவு பயிரிட முடியுமோ, அவ்வளவு பயிரிட வேண்டும். ஒவ்வொரு மனிதரும் பத்து அகத்திச் செடிகளுக்குக் குறையாமல் நட்டு வளர்க்க வேண்டும்.

மேய்ச்சல் தரைகள் குறைந்து போன நம் நாட்டில் அகத்திக் கீரையைப் பயிர் செய்து கோஸம்ரக்ஷணத்துக்கும், அதன் மூலம் தானியங்களின் அபிவிருத்திக்கும் எல்லோரும் உதவ வேண்டும்.

யாவருக்குமே இழைத்த அநீதியாகிவிடும். இதைப் பொது மக்கள் உணர்ந்து காங்கிரஸை அழிக்காவிடில் தேசத்தின் வாழ்வே அழிந்து போகும்.

**'ஜ**னநாயக சோஷலிஸம்' என்ற பெயரில் கம்யூனிஸத்துக்குக் காங்கிரஸ் மாறவிருக்கும் இச்சமயத்தில் அக்கட்சியைப் பற்றித் தலைவர் ராஜாஜி வெளியிட்டுள்ள கருத்துக்களை அளிக்கிறோம்:

நாடு சுதந்திரம் பெற்றபின் காங்கிரஸைக் கலைத்துவிட வேண்டும் என்றே காந்திஜி விரும்பினார். ஆனால் சுதந்திரப் போராட்டத்தில் தாங்கள் பெற்றிருந்த புகழைப் பயன்படுத்திக் கொண்டு அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும் என்று விரும்பிக் காங்கிரஸ்காரர்கள் காந்திஜியின் யோசனையை நிராகரித்தனர். அடிகள் இவ்வுலகிலிருந்து மறைந்தவுடன் நேருஜி தலைமையைப் பெற்றார். அன்றிலிருந்து அவர் உருமாறத் தொடங்கினார். தேசத் தலைவர்களில் பெருந்தன்மையும், பண்பும், நல்ல அறிவும், இலட்சியப் பான்மையும் உள்ள ஒருவராக இருந்த நேரு அவர்கள் குறுகிய கட்சி முன்னேற்றமே கருத்தாகக் கொண்ட கட்சித் தலைவராக மாறலானார். கட்சிக்குத் தலைமை தாங்க அவர் தகுதி படைத்திருக்கவில்லை. தமது தலைமையில் அவர் சோஷலிஸம் என்ற பெயரில் பாலியத்தில் தாம் மேல் நாட்டில் மோகங்கொண்ட இலட்சியத்தைப் புகுத்தத் தொடங்கினார். டாம்பீகத்தில் அவருக்குள்ள மோகமும், தம் பெருமையைக் கண்டு தற்காதல் வலையில் சிக்கிய குழப்பமும் பற்பலத் திட்டங்களாக உருவாகின. இதைத் தொடர்ந்து சர்க்காரிடம், அதாவது காங்கிரஸ் கட்சியிடம் அதிகாரங்கள் குவிந்தன. இது காரணமாகவே, தலைமை தாங்குவதில் நேருஜிக்குத் திறமையில்லாதபோதிலும் காங்கிரஸ் கட்சி வலுப் பெற்றது. நேருஜியின் சரித்திர ஜொலிப்பைப் பயன்படுத்திக் கொண்டு, தங்களின் முன்னேற்றத்துக்கு வழி தேடிக் கொள்ளத் தொடங்கினர் காங்கிரஸ்காரர்கள். அவரது டாம்பீக ஆசை, தற்காதல் பிரமை இவற்றுக்கு முழு இடமும் தந்து, அவற்றில் எழுந்த பொருளாதாரத் திட்டங்களால் லாபம் பெறத் தொடங்கினர். இந்தப் போக்குக்குப் புவனேசுவரத் தீர்மானம் முத்தாய்ப்பு வைக்கிறது. கட்சிக்குச் சர்வாதிகாரம் பெற்றுத் தந்து, ஜனநாயகத்தைப் 'போ' என்று சொல்லி விடை தருகிற தீர்மானம் இது.

# போகிற போக்கில்...



அரசியல் சாஸனத்தை அவமதிக்கவேண்டுமென்ற நோக்கமின்றி அதை ஒரு விஷயத்தில் சீர்திருத்த வேண்டும் என்கிற எண்ணத்தில் தோன்றிய திரு அண்ணாத்துரையின் எரிப்பு இயக்கத்தை அவமதிப்புக் குற்றமாகக் கருதிச் சர்க்கார் வழக்குத் தொடர்ந்தது ஒரு விசித்திரம். இப்போது இன்னொரு விநோதம் நடந்திருக்கிறது. தி. மு. க.வின் மதுரைக் கிளைக்காரியதரிசி அரசியல் சாஸனப் பிரதியைக் கொளுத்துவதைப் போலீஸார் தடை செய்யாமல் பக்கத்திலேயே இருந்து பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பிறகு அவரைக் கைது செய்திருக்கிறார்கள். அவர் சதித் திட்டம் எதையும் வகுத்ததாக முகாந்திரம் இல்லாததால் எரிக்கு முன்பே அவரைத் தடுப்புக் காவல் சட்டப்படி கைது செய்ய இயலவில்லை போலும்! என்றாலும் பெருங் குற்றம் எனக் கருதப்படும் ஒரு காரியத்தை ஒருவர் செய்யப் போகிறார் என்று போலீஸார் அறிந்த பின்பும் அதனைத் தடுக்காமல் பார்த்துக் கொண்டிருந்து அவர் குற்றம் செய்ய வேண்டும் என்று காத்திருந்து அவரை 'அசல்' குற்றவாளியாக்கிக் கைது செய்திருப்பது விந்தை! சாஸனப் பிரதியின் எரிப்பு விஷயத்தில் இது சாமானியமாகத் தோன்றலாம். ஆனால் இதையே ஒரு கொலைக் குற்றத்துக்குப் பொருத்திப் பார்க்கலாம். ஒருவர் கொலை செய்யப் போகிறார் என்று அறிந்து போலீஸார் அவரைத் தடுக்காமல் அவர் கொலை செய்வதை உடன் இருந்தே பார்த்துக் கொண்டிருந்து பிறகு கைது செய்தால் எப்படி இருக்கும்? குற்றம் நடக்கக் கூடாது என்பதை விடக் குறிப்பிட்ட சிலர் குற்றவாளியாகிக் கைதாக வேண்டும் என்பதில் போலீஸார் அக்கறை காட்டுவது முறை கேடாகும். குற்றம் நடக்கப் போவதை அறிந்திருந்தும் அதைத் தடுக்காமல் குற்றம் நடப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பவர்களும் சட்டப்படி குற்றவாளிகளே அல்லவா?

ஃ ஃ ஃ

கலகலப்பாகப் பிறந்திருக்கிறது புத்தாண்டு. ஜயபுரி நகரசபைத் தேர்தலைப் பார்க்கிறவர்கள் ஜனநாயகத்தின் எதிர்காலம் சிறப்பாக இருக்குமென நம்புகிறார்கள். அங்கு நடந்த தேர்தலில் காங்கிரஸின் செல்வாக்கு அதளபாதாளத்துக்குப் போய் விட்டது தெளிவாகி யிருக்கிறது. ஜயபுரி மக்களின் எதிர்ப்பை மாற்றுவதற்குக் காங்கிரஸார் எவ்வளவோ முயன்றார்கள். அங்கு காங்கிரஸ் மேளாவைக் கூட நடத்தினார்கள். எந்த விதமான மாறுதலும் ஏற்படவில்லை.

உயர்திரு காமராஜ் தமிழில் உரை நிகழ்த்தப் போகும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த புவனேசுவர மாநாடு ஒரு முக்கியமான திருப்பத்தை ஏற்படுத்தும் என்கிறார்கள்! இந்தத் திருப்பத்தின் எல்லை மாஸ்கோவாக இருக்கும் எனவும் கூறப்படுகிறது! இந் நிகழ்ச்சிக்கு நிலைக்களனாயிருக்கும் ஒரிஸ்ஸா மாகாணத்திலும் நகரசபைத் தேர்தல்கள் நடந்திருக்கின்றன. இவற்றிலும் காங்கிரஸ் முழு வெற்றி பெறவில்லை. உயர்திரு பட்நாய்க்கின் தொகுதியிலேயே காங்கிரஸ் சரிந்திருக்கிறது. புவனேசுவரத்தில் சந்திக்க இருக்கும் தலைவர்கள் இதைக் கவனிப்பார்களோ?

ஃ ஃ ஃ

இலங்கையில் தமிழர்கள் வாழும் பகுதியில் சோகத் திரை படர்ந்திருக்கிறது. சிங்கள மொழியை ஆட்சி மொழியாக ஆக்கி விட்டார்கள். தமிழ் மொழிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படும் என்று பழைய மந்திரி சபைகள் கொடுத்திருந்த வாக்குறுதிகள் எல்லாம் காற்றில் பறந்து விட்டன. ஸ்ரீமதி பண்டார நாயகா அம்மையின் ஆட்சி தமிழர்கள் விஷயத்தில் இப்படி நடப்பதைத் தில்லி சகித்துக்கொண்டு வருவதில் நமக்கு ஆச்சரியமேயில்லை. நம்முடைய ஆட்சி மொழிச் சட்டத்துக்கும் ஈழத்தின் சிங்களச் சட்டத்துக்கும் அதிக வித்தியாசமில்லையல்லவா? ஆயிரமாயிரம் ஊழியர்கள் இலங்கைச் சட்டத்தால் வேலையை விட நேர்ந்திருக்கிறது எனில், அதே கொடுமை நம் நாட்டிலும் மறைமுகமாகத் தொடங்கும் காலம் நெருங்கிக் கொண்டுதான் இருக்கிறது. இடதுசாரி மோகம், சர்க்கார் தொழிலுரிமை எல்லாவற்றிலும் பாரதத்தையே பின்பற்றுகிறது அண்டையிலுள்ள ஈழம். பக்குவமில்லாதவர்களிடம் சுதந்திர அதிகாரம் கிடைத்தால் எப்படியிருக்குமென்பதற்கு இந்தியாவும் ஈழமும் அற்புதச் சான்றுகள்.

ஃ ஃ ஃ

கம்பெனிகளுக்கு அரசாங்கம் தரும் கடன் உதவியைப் பங்காக மாற்றுவது பற்றிப் பாராளு மன்றத்தில் விவாதம் நடந்தபோது, நேரு அவர்கள் முன்பு ஹிட்லர் செய்ததை உதாரணம் காட்டிப் பேசினார். இதுவரை காந்திஜியையும் இதர உலக ஜனநாயகத் தலைவர்களையும் உதாரணம் காட்டி வந்த காங்கிரஸ் பெருந் தலைவர்கள், இப்போது ஹிட்லரை மேற்கோள் காட்டியிருப்பது பாராட்டுதலுக்கு உரியதாகும். உண்மையைப் பேச ஆரம்பித்துவிட்டார்கள்! அடுத்த நகர சபைத் தேர்தல் கூட்டங்களில் இதர மந்திரிகள் டோஜோவையும், முஸோலினியையும், மாசே துங்கையும், ஸ்டாலினையும் உதாரணம் காட்டிப் பேசினால் ஆச்சரியப்படுவதற்கில்லை!

—சிட்டுக்குருவி

**பிழை திருத்தம்**

சென்ற டிசம்பர் 29ந் தேதி இதழில் "கெட்ட எண்ணம் இல்லாமல் குற்றம் உண்டா?" என்ற ராஜாஜியின் கட்டுரையில் இரண்டாவது பத்தியில் குறிப்பிட்டுள்ள "திரு முனுசாமிப் **பிள்ளை**" என்பது "திரு முனுசாமி **நாயுடு**" என்று இருக்க வேண்டும். இத் தவறு நேர்ந்துவிட்டதற்கு வருந்துகிறோம்.




## 40

கார்காலத்து வானிலே மேகங்கள் தோன்றி மின்னலும் முழக்கமுமாக வருகின்றன. அந்தத் தோற்றம் ஆகாயத்தில் திருமாலின் ஸ்வரூபமாகவே காணப்படுகிறது. அதாவது மேக வர்ணம் மின்னலைப் போன்ற எழில், பாஞ்சஜன்ய முழக்கம் இவை மூன்றும் சேர்ந்தவாறு!

**எழில்கொண்டு மின்னுக்**
**கொடிஎடுத்து**

[எழில்கொண்டு - அழகுடன் பிரகாசித்து. மின்னுக் கொடி எடுத்து - மின்னலைக் கொடி போல் தாங்கி.]

**வேகத்**
**தொழில்கொண்டு தான்முழங்கித்**
**தோன்றும் —**

[வேகத் தொழில்கொண்டு - வேகமான இயக்கத்தைக் கொண்டதாய். தான்முழங்கித் தோன்றும் - கர்ஜனை செய்தவாறு வானிலே தோன்றுகிறது.]

**— எழில்கொண்ட**
**நீர்மேகம் மன்ன**
**நெடுமால் நிறம்போல**

[எழில் கொண்ட நீர்மேகம் - தண்ணீரைக் குடித்து அழகோடு காட்சி தருகிற காள மேகங்கள். மன்ன - நெருங்க. நெடுமால் நிறம்போல - திருமாலின் நிறத்தைப் போல.]

**கார்வானம் காட்டும்**
**கலந்து**

[கார்வானம் - கார்காலத்து வானம். கலந்து காட்டும் - இணைந்துக் காட்டும்.]

**எழில்கொண்டு மின்னுக்**
**கொடியெடுத்து வேகத்**
**தொழில்கொண்டு தான்முழங்கித்**
**தோன்றும் — எழில்கொண்ட**
**நீர்மேகம் மன்ன**
**நெடுமால் நிறம்போலக்**
**கார்வானம் காட்டும்**
**கலந்து!**

கார்காலத்து வானமானது, திருமாலின் வடிவத்தைக் காட்டுகிறது என்று பாடுகிறார். மேகங்கள் எல்லாம் நீர் கொண்டு மின்னல் மின்னி இடி முழங்கி, மேகம் எல்லாம் ஒன்று சேர்ந்து கருவண்ணமாகி இதோ நீங்கள் பக்தி செய்ய வேண்டிய திருமாலின் ஸ்வரூபம் என்று காட்டுவது போல் இருக்கிறது என்பது பாடல்.

எங்களது
உள்ளங்கனிந்த

# பொங்கல் வாழ்த்துக்கள்

**தமிழ் நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட்.,**
34/1-A, பாந்தியன் சாலை,
எழும்பூர்-சென்னை-8.



ELEGANT.CO.

# எழுதிப் பயன் என்ன?

ஓமந்தூர்
பி.ராமசாமி ரெட்டியார்

நீண்ட நாட்களாக விவசாயத்தில் ஈடுபட்டிருந்து அதனால் உணவு உற்பத்தியில் நேரிடை அனுபவம் பெற்றவரும், சென்னை ராஜ்ய முதன் மந்திரியாயிருந்து ஆட்சித் துறையினர் உழவுக்கு எப்படி உதவ முடியும் என்பதைத் தாமே அறிந்தவருமான ஓமந்தூர் திரு ராமசாமி ரெட்டியார் அவர்களிடம் இவ்விதழுக்காகக் கட்டுரை கோரியிருந்தோம். கட்டுரை அனுப்ப இயலாமையைத் தெரிவித்து அவர் எழுதியுள்ள கடிதம் இது:

விவசாயத்தைப் பற்றி நான் எழுதி என்ன பயன்? நாட்டில் இருக்கிற புத்திசாலிகளும், பத்திரிகைக்காரர்களும், உத்தியோகஸ்தர்களும் விவசாயத்தைப் பற்றிய உண்மைக்கு மாறான விஷயங்களை எடுத்துக் காட்டி, நாட்டில் நடைமுறையில் நடப்பதைக் கண்டித்து எழுதப் பாடுபடும்போது நான் எழுதுவதில் என்ன நடக்கப் போகிறது? ராஜாஜி அவர்கள் எழுதுவதை விட நான் அதிகம் எழுத முடியுமா? உதாரணமாக, அதிக விவசாய விளைச்சலுக்காகப் பரிசு கொடுக்கப்படுகிறதே—தாலுகா, ஜில்லா, மாகாணம், அகில இந்தியா என்ற அடிப்படையில். அதில் குறிப்பாக நெல் விளைச்சலை எடுத்துக் கொள்ளுங்கள், ஒரு ஏக்கருக்கு எட்டாயிரம், பத்தாயிரம் அல்லது பன்னீராயிரம் ராத்தல் விளைந்ததாகப் புள்ளி விவரம் தரப்படுகிறது. ஐயாயிரம் ராத்தல் முதல் ஆறாயிரம் ராத்தலே ஒரு ஏக்கருக்கு விளையாதே! ஒரு பட்டணம் படி நெல் 2½ ராத்தல் என்றால் 12,000 ராத்தலுக்கு எத்தனை மூட்டைகள் ஆகும்? எவ்வளவு எருவு, உரம் முதலியவைகளைப் போட்டாலும், இவ்வளவு விளைச்சல் காண்பது சாத்தியமா? உண்மைக்கு மாறாக இதையெல்லாம் பத்திரிகைக்காரர்கள் ஆதரித்துக் கொண்டு தானே வருகிறார்கள்? அதற்கு நம் நாட்டுத் தலைவர்களுமே பரிசுகள் வழங்கித்தானே வருகிறார்கள்? இதற்குமேல் நான் ஒன்றும் எழுதுவதில் பயனில்லை என்பதை அறிந்து பேசாமலிருக்கிறேன். என் உடல் நிலையும் சரியில்லை. நான் அதிகம் எழுத முடியாமைக்கு மன்னிப்பீர்கள்.





# கரும்புச் சோலையும் சர்க்கரை ஆலையும்



ஒரே ஒரு ஊரிலே ஒரே ஒரு செல்வந்தர் இருந்தார். ஏராளமான நிலபுலன்கள் அவருக்குச் சொந்தமாயிருந்தன. 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்ற பழமொழி வழங்கும் தமிழ் நாடல்லவா இது? ஆகவே அந்த ஊரில் ஒரு கோயில் இருந்ததும் அந்தக் கோயிலில் ஓர் ஆண்டவன் குடியிருந்ததும் அதிசயமில்லை.

ஒரு நாள் பேச்சு வாக்கில் அந்தச் செல்வந்தரிடம் கோயிலுக்கு இத்தனை ஏக்கர் நிலம் இருக்கிறது என்பதாக யாரோ கணக்குச் சொன்னார்கள். அதைக் கேட்டதும் பகீரென்றிருந்தது அவருக்கு. காரணம் என்னவென்றால் தமக்குச் சொந்தமான நிலத்தின் விஸ்தீரணத்தை விட ஆண்டவனுக்குள்ள நிலத்தின் பரப்பளவு கம்மியாக இருப்பதை அந்தக்கணத்தில் அவர் உணர்ந்ததுதான்! 'இதென்ன அநியாயம்?' என்றெண்ணியது அவர் மனம். உடனே வக்கீலைக் கூப்பிட்டனுப்பினார். தமது நில உடைமைகளைக் காட்டிலும் ஆண்டவனுக்கே அதிகமாயிருக்குமாறு தமது சொத்தில் பெரும் பகுதியைக் கோயிலுக்கென்று எழுதி வைத்த பிறகுதான் அவர் மனம் நிம்மதியடைந்தது. இப்படிப்பட்ட அதிர்ஷ்டம் மிக்க ஆண்டவன் யாரென்று கேட்கிறீர்களா? திருவாரூர் தியாகராஜன்தான்! வி. எஸ். டி. என்று நண்பர்களால் அன்புடன் அழைக்கப்படுகின்ற வடபாதிமங்கலம் எஸ். தியாகராஜ முதலியாருடைய தகப்பனார்தான் அந்தச் செல்வந்தர்.

ஸ்ரீ வி. எஸ். டி. தமது பரம்பரைச் சொத்திலிருந்து வரும் வருமானத்தைக் கொண்டு ஒரு குறையுமில்லாமல் வாழ்க்

நமது விசேஷ நிருபர்

கையை அனுபவித்து நிம்மதியாகக் காலத்தை ஓட்டியிருக்கலாம். ஆனால் அப்படி உண்டு களித்து உறங்கும் வாழ்க்கையை அவர் விரும்பவில்லையே! நாட்டுக்கும் மக்களுக்கும் பயனுள்ள காரியமாகப் பெரிய அளவில் ஏதேனும் செய்ய வேண்டும்; அதில் புதுமையும் தெரிய வேண்டும் என்று பரபரத்தார் அவர். அவருடைய உள்ளக் கிடக்கையை எப்படியோ கண்டுணர்ந்து கொண்ட தலைவர் ராஜாஜி, ஒரு சமயம் ஸ்ரீ வி. எஸ். டி.யைச் சந்திக்க நேர்ந்தபோது 'ஒரு சர்க்கரை ஆலையை உங்களூரிலே ஆரம்பியுங்களேன்!' என்று சொன்னார்.

'எங்கே எங்கே' என்று தவித்துக் கொண்டிருந்த வி. எஸ். டி.க்கு 'இதோ' என்று ஓர் அபூர்வமான யோசனை கிடைத்து விட்டது. ஸ்ரீ கோயங்கா போன்ற சில நண்பர்கள் பங்குதாரர்களானார்கள். ஆரூரான் சர்க்கரை ஆலையும் உருவாகியது.

அதுவும் எப்படி? இத்தனை நாட்களாக வி.எஸ். டி. மனத்துக்குள்ளேயே

மேலே: "மலபார் பம்ப்" கீழே: டிராக்டர் வெட்டும் கொழுமுனைகளுடன் கூடிய கலப்பையை மட்டுமே உபயோகிக்கிறார்கள்

அமுக்கி வைத்துக் கொண்டிருந்த துடிப்பெல்லாம் பீறிட்டுக் கொண்டு வெளிவந்து செயலிறங்க மாறிப் புயல் வேகத்தில் ஆலையை நிர்மாணித்து விட்டது!

ஆம். ஆயிரக்கணக்கான டன்கள் எடையுள்ள ராட்சத இயந்திரங்கள் ஆறே மாதங்களில் இணைக்கப்பட்டு இயங்கவும் ஆரம்பித்து விட்டன !

இத்தனைக்கும் வடபாதிமங்கலம் ஒரு சிறிய கிராமம்தான். அதை அடைய மாட்டு வண்டி செல்லக் கூடிய ஒரு வரப்புப் பாதைதான் உண்டு. மிக அருகிலுள்ள மாவூர் ரோடு என்கிற ரயில் நிலையமே ஐந்தரை மைல் தொலைவில் இருந்தது. ஆலை எழுப்பப்படவிருந்த இடமோ சம தரையாக இல்லாமல் தாழ்வாக இருந்தது. போதாக் குறைக்கு அந்த இடத்துக்கு ஒரு சிற்றாற்றைக் கடந்து தான் போயாக வேண்டும். ஆற்றுக்கு மேலாக உறுதியான பாலம் ஒன்றுமில்லை! இந்த லட்சணத்தில் மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த பி. எம். ஏ. ஸ்தாபனத்தினரிடம் சர்க்கரை ஆலைக்குண்டான பிரும்மாண்டமான இயந்திரங்களை அனுப்பி வைக்குமாறு சொல்லி வந்து விட்டார் வி. எஸ். டி.

'லேலே' என்று தலையில் கையை வைத்துக் கொண்டு மற்றவர்கள் உட்கார்ந்து விடக் கூடிய சூழ்நிலையில் வி. எஸ். டி. விறுவிறுப்புடன் மேலே ஆக வேண்டிய காரியங்களைக் கவனித்தார். நாற்பதே நாட்களில் மேடு பள்ளங்கள் சமன் செய்யப்பட்டன. மிகக் கனமான இயந்திரப் பகுதிகளைச் சுமந்து கொண்டு வரும் லாரிகளும் டிராக்டர்களும் ஆற்றுப் படுகையிலேயே இறங்கி வருகிற மாதிரியாக உறுதியான பாதை அமைக்கப்பட்டது. ஜெர்மானிய நிபுணர்களும் வந்து விட்டார்கள்.

"என் பெயர் எம். ஜி. ராமச்சந்திரன்; ஆனால் நான் சினிமா நடிகனில்லை!" என்று தம்மைத் தாமே அறிமுகப்படுத்திக் கொண்டார் சர்க்கரை ஆலை மானேஜர். "முதன் முதலாக நான் இந்தக் கிராமத்துக்கு வந்த போது, சொல்லி முடியாத ஒரு மனச் சோர்வு என்னை ஆட்கொண்டது. 'அடடா! தெரியாத்தனமாக இந்த வேலையை ஒப்புக் கொண்டு விட்டோமே? இந்த இடத்தில் பிரும்மாண்டமான சர்க்கரை ஆலையை எவ்வாறு நிர்மாணிக்கப் போகிறோம்?' என்று ஒரே கவலையாய்ப் போய் விட்டது. ஆனால் வி. எஸ். டி. அருகிலிருந்து உற்சாகப்படுத்தப் படுத்த வேலைகள் துரிதமாக நடந்து முடிந்தன. ஆறு மாதத்தில் சர்க்கரை ஆலை இயங்க ஆரம்பித்தபோது எனக்கே வியப்புத் தாங்கவில்லை!" என்றார்.

மேற்கு ஜெர்மன் நிபுணர்களின் தொடர்பு கொண்டு இந்தியாவில் அமைக்கப்பட்ட முதல் சர்க்கரை ஆலை ஆரூரான் சர்க்கரை ஆலை தான். அந்த ஆரம்ப கட்டத்தில் ரொம்பப் பேர் 'வி.எஸ்.டி. செய்கிற காரியம் சரிதானா?' என்ற நியாயமான சந்தேகத்துக்குள்ளாகி இருப்பார்கள். ஏனெனில், ஜெர்மனியில் கரும்பிலிருந்து சர்க்கரை தயாரிப்பது கிடையாது. 'ஷுகர் பீட்' எனப்படும் ஒரு வகைக் கிழங்கிலிருந்துதான் சர்க்கரை உற்பத்தி செய்கிறார்கள் அங்கே. ஆகவே ஆரூரான் ஆலையில் கரும்பிலிருந்து சர்க்கரை தயாரிக்க ஏற்ற விதத்தில் தங்கள் இயந்திர மாதிரிகளில் அடிப்படையான சில மாறுதல்களைச் செய்துதான் அவர்கள் தீர வேண்டியிருந்தது. அவர்களைப் பொறுத்தவரையில் இது புது முயற்சி. அதில் அவர்கள் வெற்றி காண வேண்டுமே?

"ஆனால் வி.எஸ். டி. ஜெர்மானியப் பொறி இயல் நிபுணர்களின் திறமையில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்தது முற்றிலும் சரியே என்பதைப் பின்னால் நடந்த நிகழ்ச்சிகள் நிரூபித்திருக்கின்றன. பாரத நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் புதிதாகச் சர்க்கரை ஆலை நிர்மாணிக்க நினைத்தவர்களில் பலர் ஆரூரான் சர்க்கரை ஆலை சிறப்பாகச் செயல்படுவது கண்டு மேற்கு ஜெர்





மேலே : சமீபத்தில் தஞ்சையில் பெய்த கடுமையான மழையால் ஆரூரான் பண்ணையில் பாதிக்கப்பட்ட நெற்பயிர்.

கீழே : "பார்த்தா முறை" கரும்புச் சாகுபடி.

மாவிய நிபுணர்களுடனேயே தொடர்பு கொண்டனர்!

"எல்லாம் சரி; சர்க்கரை ஆலை இன்னும் சில வாரங்களில் இயங்கத் தயாராகி விடும். ஆனால் லட்சக்கணக்கில் முதலீடு செய்து வாங்கிய இயந்திரங்கள் ஒரு நாளைக்குக் குறைந்தது இருபத்திரண்டு மணி நேரமாவது வேலை செய்தால்தானே லாபம் என்று ஏதேனும் எதிர்பார்க்கலாம்? இந்த இயந்திரங்களுக்கு உள்ள பகாசுரப் பசிக்கு ஒரு நாளைக்கு ஆயிரத்து இருநூறு டன் கரும்பைக் கொண்டா கொண்டா என்று கேட்குமே? அத்தனை கரும்புக்கு எங்கே போவது?" என்ற கேள்வி பிறந்தது.

"இதென்ன பிரமாதம்? தென்னிந்தியாவில் வேறு எந்தச் சர்க்கரை ஆலைக்கும் இருக்க முடியாத அளவுக்குச் சுற்றுவட்டாரத்தில் ஆறாயிரம் ஏக்கர் நிலம் இதற்குச் சொந்தமாயிருக்கிறதே ! இதில் கரும்பு ஏராளமாய் விளையும் !"

"நல்ல வேடிக்கை ஐயா இது? தஞ்சை ஜில்லாவில் கரும்புச் சாகுபடியா? உரக்கப் பேசாதீர்கள் ஐயா, சிரிக்கப் போகிறார்கள்!"

நகைப்புக்கிடமளிக்கும் காரியமாகப் பலர் எண்ணியிருந்தால் அதில் ஆச்சரியமுமில்லை. ஏனெனில், கரும்புச் சாகுபடிக்கு நிறையத் தண்ணீர் வேண்டும். ஆனால் அதே சமயத்தில் வயலில் தண்ணீர் தேங்கி நிற்கவும் கூடாது: உடனுக்குடன் வடிந்து விடவும் வேண்டும். தஞ்சை ஜில்லாவிலோ தண்ணீரை வடிய வைப்பதற்கு வழியே கிடையாது. இதே காரணத்தால்தான் கடுமையான புயல், மழை என்று கேள்விப்பட்டால் கூடவே தஞ்சை ஜில்லாவில் வெள்ளம் என்றும் பயிர்கள் நாசமாயின என்றும் செய்திகள் வரும். வெள்ளக்காடாக ஆகாத வரையில் நெல் சாகுபடிக்கு வயலில் நீர் தேங்கி நிற்பது சௌகரியமாகவே இருக்கிறது. ஆனால் கரும்புக்கு இந்த நிலை கட்டோடு பிடிக்காது; ஒத்துக் கொள்ளாது!

இதையெல்லாம் வி. எஸ். டி. தெரிந்து வைத்திருந்ததுடன் இந்தச் சங்கடங்களைச் சமாளித்து வெற்றி காணக் கூடிய ஒரு நபரையும் கண்டு பிடித்து வைத்திருந்தார். அந்த நபர் ஸ்ரீ எஸ். வி. பார்த்தசாரதி. அவர் சர்க்கார் விவசாயத் துறை இலாகாவில் நீண்ட நாட்களாகப் பணி புரிந்து ஆராய்ச்சிகள் பல செய்து பெற்ற அனுபவத்துடன் ஆரூரான் பண்ணைக்கு வந்து சேர்ந்தார். முதல் காரியமாக எல்லா நிலங்களுக்கும் பிளான் போட்டுப் பகுதி பகுதியாகப் பிரித்தார். ஒவ்வொரு பகுதியையும் சுற்றி நீர்ப்பாசனத்துக்காக ஒரு வாய்க்காலும் நீர் வடிந்து போக ஒரு வாய்க்காலுமாக அமைத்தார். இவ்வாறு அமைக்கப்பட்ட வாய்க்கால்களின் மொத்த நீளம் 180 மைல்!

சிற்றோடையாகப் பிரிந்து வரும் காவிரி ஆற்று நீர், நீர்ப்பாசன வாய்க்கால் வழியாகப் பயிருக்குப் பாய்ந்து பின்னர் வடிகால்கள் வழியாக மீண்டும் சிற்றோடையிலேயே போய் விழுந்து விடுகிற மாதிரியாக இந்த ஏற்பாடு. வயல் மட்டத்தைவிடச் சிற்றோடையின் நீர் மட்டம் ஓர் அடி உயரமாகவே இருக்கும்: இது வயலுக்கு நீர் பாய வசதியாகவே உள்ளது. ஆனால் வடிகால்களிலிருந்து உயர் மட்டத்திலுள்ள சிற்றோடைக்கு நீர் எப்படிப் பாயும்?

பொதுவாக எல்லாரும் வயலுக்குத்தான் நீரை இறைப்பார்கள். இங்கேயோ வயலிலிருந்து நீரை வெளியே இறைக்க வேண்டிய நூதனமான நிலை ஏற்பட்டது. எப்படி இறைப்பது? எத்தனை ஆட்களைப் போடுவது? ஆறாயிரம் ஏக்கர் பரப்புள்ள இந்தப் பண்ணையில் இந்த வேலையைச் செய்ய எத்தனை ஆட்களைப் போட்டால்தான் என்ன? பயன் இராது! இயந்திரங்களை — பம்ப் செட்டுகளை உபயோகிக்க வேண்டியதுதான். ஆனால் நாம் பார்த்துள்ள, கேள்விப்பட்டுள்ள பம்ப் செட்டுகளெல்லாம் பதினைந்தடிக்கும் அதிகமான ஆழத்தில் உள்ள கிணற்றுநீரை நில மட்டத்துக்கு இறைக்கும் பம்பு செட்டுகளல்லவா ? ஓரடி அல்லது ஒன்றரையடி உயரத்துக்கு நீரை இறைக்கும் பம்பு செட்டுகளுக்கு எங்கே போவது ?

ஸ்ரீ பார்த்தசாரதி மனம் தளரவில்லை. மலபாரில் அதிக ஆழமில்லாத உப்பங்கழிப் பகுதிகளில் குடியானவர்கள் ஒருவிதப் பம்பை உபயோகித்து நீர் இறைப்பதைத் தாம் பார்த்திருந்தது அவருக்கு ஞாபகம் வந்தது. ஆதிகாலத்தில் டச்சுக்காரர்கள் அத்தகைய இயந்திரங்களை அங்கே விவசாயிகளுக்குப் பொருத்திக் கொடுத்தார்கள் என்று கேள்விப்பட்டிருந்தார். அதைப் பற்றி மேலும் ஆராய்ந்தார். அதன் தத்துவம் மிக எளிமையானது என்று கண்டார். அவற்றில் முன்னேற்றகரமான சில மாறுதல்களைச் செய்து ஒரு மணி நேரத்துக்கு 70,000 காலன் நீர் இறைக்கக் கூடிய சிறிய பம்புகளும் 200,000 காலன் நீர் இறைக்கக் கூடிய பெரிய பம்புகளுமாக மொத்தம் முப்பத்தியொரு பம்புகளைத் தயாரித்து ஆரூரான் ஆலைக்குச் சொந்தமான பண்ணையில் பல்வேறு இடங்களில் வைத்தார். நீர்ப்பாசனப் பிரச்னை, நீர் வடியும் பிரச்னை எல்லாம் தீர்ந்து விட்டன!

இவ்வாறு இருந்தும் நம்மை மீறிச் சில சமயம் நீர் சற்று அதிகமாகத் தேங்கிப் பயிர் அழுகி விட்டால் என்ன செய்வது? அதற்கும் ஒரு வழி கண்டுபிடித்தார் பார்த்தசாரதி.

சாதாரணமாக நிலத்தில், ஐந்தடி அகலத்துக்கு, நீள நீளமான பாத்திகளைக் கட்டி மூன்று கணுக்களுள்ள கரும்புத் துண்டுகளைப் பள்ளத்தில் படுக்கப் போட்டது போல் வைத்து மேலே மண்ணைப் போட்டு மூடிவிடுவார்கள். சிறிது காலத்தில் ஒவ்வொரு கணுவிலிருந்தும் வேர் தோன்றுவதுடன் முளையும் விட்டு நில மட்டத்துக்கு மேலே வளருகிறது. பயிர் செழித்த பிறகு அறுவடையின் போது தண்டைப் பூமி மட்டத்துக்குச் சற்று மேலே வெட்டி எடுத்துக் கொண்டு போய் விடுவார்கள். பூமியில் புதையுண்டு பாக்கியிருக்கும் பகுதி மீண்டும் துளிர் விட்டு வளரும். இம்மாதிரியே ஐந்து முதல் பத்து முறைகள் வரை அறுவடை செய்து கொண்டே போகலாமென்றாலும் அதிகமான லாபத்தைக் கருத்தில் கொண்டால் வருஷத்துக்கு ஒரு முறையோ

இரு வருஷங்களுக்கு ஒருமுறையோ முன்கூறிய வகையில் புதிதாகப் பயிர் வைக்க வேண்டும்.

பார்த்தசாரதி பயிர் வைக்கும் இந்தப் பரம்பரைப் பழக்கத்தில் ஒரு மாறுதலைச் செய்தார். கரும்புத் துண்டின் மூன்று கணுக்களில் ஒன்று மட்டுமே பூமியினுள் புதைந்திருக்கிற மாதிரியாகவும் இரண்டு கணுக்கள் நில மட்டத்துக்கு மேலே இருக்கிற மாதிரியாகவும் நடச் செய்தார். நீர் சற்று அதிகமாய்த் தேங்கிப் பூமியினுள்ளிருக்கும் கணு முளைவிடாது போனாலும் வேர் விடத் தொடங்கியது. அந்த வேர் ஈர்த்து அனுப்பும் சத்து நில மட்டத்துக்கு மேலே உள்ள கணுக்களில் முளை விட்டுத் துளிர்க்கப் போதுமானதாக இருந்தது. மூன்று கணுக்கள் உள்ள கரும்புத் துண்டில் இரண்டு துளிர் நிச்சயம் என்றாயிற்று. சதுப்பு நிலத்தில் மூன்றுமே முளை விடாமல் அழுகிப் போவதற்கு இது எவ்வளவோ மேலல்லவா? இந்த நூதன முறையினை விவசாய நிபுணர்கள் வியந்து பாராட்டி 'பார்த்தா முறை' என்றே அதற்குப் பெயரும் வைத்து விட்டிருக்கிறார்கள்!

கோவையில் கரும்பு ஆராய்ச்சி நிலையத்தில் சதுப்பு நிலத்திலும் கரும்பு விளைவிக்கச் சில பரிசோதனைகளைச் செய்து கொண்டிருந்தார்கள். எப்படிப் பூனையையும் புலியையும் ஒரே குடும்பம் என்கிறோமோ அதே போல் சாதாரணமாக ஆற்றோரங்களில் நாம் காணும் நாணல், கரும்பு இனத்தைச் சேர்ந்த ஒன்றுதான். ஆனால் இந்த நாணல் வெள்ளக் காட்டிலும் நிம்மதியாக வாழ்கிறது; கடுமையான வறட்சியிலும் ஜீவிக்கிறது. ஆகவே நாணலுக்குள்ள இந்தச் சகிப்புத் தன்மையில் கொஞ்சம் கரும்புக்கும் கொடுக்கத் தீர்மானித்தார்கள். கரும்புப் பூவிலுள்ள ஆண் சக்தியை மட்டும் அழித்து விட்டு நாணல் பூவின் மகரந்தத் துகள்கள் மூலம் கரும்புப் பூவில் கரு உண்டாக்கி விதை உற்பத்தி செய்தார்கள். மீண்டும் மீண்டும் இப்படிச் செயற்கை முறையில் விதைகள் தயாரித்துப் பல வருஷங்கள் ஆராய்ச்சி நடத்திய பிறகு இவர்கள் எதிர்பார்த்தபடி அதிக நீரையும் அதிக வறட்சியையும் தாக்குப் பிடிக்கக் கூடிய கரும்பு ரகங்கள் கிடைத்தன.

ஸ்ரீ பார்த்தசாரதி இந்த ரகங்களை ஆராய்ந்து தமது மேற்பார்வையிலுள்ள பண்ணைக்கு ஏற்ற ரகத்தைத் தேர்ந்தெடுத்துப் பலன் கண்டார்.

இந்தப் பண்ணையிலேயே மண் ஆராய்ச்சி நிலையம் ஒன்றும் வைத்திருக்கிறார்கள். அவ்வப்போது மண் பரிசோதனைகள் நடத்தித் தேவையான உரங்களைப் போட்டு மண் வளத்தைக் கரும்பு விளைச்சலுக்கு ஏற்றதாக வைத்துக் கொள்கிறார்கள். சுவையான விருந்தைச் செய்து போட்டாலும் சிலருக்குச் சாப்பிடப் பிடிக்காதது போல, என்னதான் ரசாயன, தழை உரங்களைப் போட்டாலும் சில சமயங்களில் பயிர் அதனை ஏற்றுக் கொள்ளாது. ஆகவே மண் வள ஆராய்ச்சியுடன் நில்லாமல் பயிரின் இலையைக் குறிப்பிட்ட காலத்தில் ஆராய்ந்து பார்த்து அதனிடம் என்ன சத்து இருக்கிறது. என்ன சத்து தேவைப்படுகிறது என்பதையும் கண்டறிந்து அதற்கேற்ற உரங்களைப் போட வேண்டியதும் அவசியமாகும்.

### சர்க்கரைச் சக்தி

மோட்டார் காருக்குப் பெட்ரோல் எப்படி எரிபொருளாகப் பயன்பட்டுச் சக்தி அளிக்கிறதோ அதே போல்தான் மனிதனுக்குச் சர்க்கரை உடனுக்குடன் சக்தி தருகிறது. மிக முக்கியமான உணவாக இருப்பதுடன் உலகிலேயே மிகவும் ருசிகரமான உணவு இதுதான்! அமெரிக்கர்கள் சாதாரணமாகத் தங்கள் எடையத்தனை சர்க்கரையை ஒரு வருஷத்தில் தின்று விடுகிறார்கள்! அந்த அளவுக்குச் சர்க்கரையை விழுங்க நம்முடைய பொருளாதார நிலை இடம் தரவில்லை. இத்தனைக்கும் உலகிலேயே மிக அதிகமான அளவுக்குக் கரும்பு உற்பத்தியாவது இந்தியாவில்தான்! பெரும்பாலான சர்க்கரை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகி நமக்கு அவசியத் தேவையான அந்நியச் செலாவணி சம்பாதித்துத் தருகிறது. ஆனால் மற்ற நாடுகளைக் காட்டிலும் சர்க்கரையின் உற்பத்திச் செலவு நம் நாட்டில் அதிகமாயிருக்கிறது. பிறநாடுகளுடன் போட்டியிட அயல் நாடுகளுக்குக் குறைந்த விலைக்கு ஏற்றுமதி செய்து விட்டு அந்த நஷ்டத்தை ஈடுகட்ட உள்நாட்டில் சர்க்கரை விலையை ஏற்றி விற்கிறார்கள். விரைவிலேயே சர்க்கரையின் உற்பத்திச் செலவு கணிசமாகக் குறைந்து இன்னும் மலிவான விலையில் மக்களுக்குச் சர்க்கரை கிடைக்க வழி ஏற்பட வேண்டும்.

அளவில் மிகப் பெரிய பண்ணையாக இருப்பதால் டிராக்டர்களைக் கொண்டு உழுவது இவர்களுக்குச் சுலபமாக உள்ளது. அத்துடன் சதுப்பு நிலத்தையே உழுது பழகிய தஞ்சைக் குடியானவனுக்குக் கரும்புச் சாகுபடிக்கு ஏற்ற வறண்ட பூமியை உழுவதும் கடினமாகத்தான் இருக்கும்! நிலத்தை வெட்டிச் செல்லுகிற ஆனால் புரட்டித் தள்ளாத கொழுமுனைகளையே டிராக்டரில் இணைக்கிறார்கள். இதற்குக் காரணம், இது கீழ் டெல்டா பிரதேசமாதலால் நிலமட்டத்தின் கீழ் உப்புச் சத்து அதிகமாயிருக்கிறது; அதனை மேலே கொண்டு வராமல் இருக்க வேண்டும் என்பதே.

இவையெல்லாவற்றையும் விட மிகப்பெரிய பிரச்னை ஒன்றைச் சமாளிக்க வேண்டிய நிலையிலிருந்தார் ஸ்ரீ பார்த்தசாரதி. கல்லணைக் கட்டிலிருந்து திறந்து விடப்படும் நீர் நெல் சாகுபடியைக் கருத்தில் கொண்டு தக்க காலத்தில் அனுப்பப்படுவதுதான். ஆனால் நெற்பயிர் வைப்பதற்கும் கரும்புப் பயிர் வைப்பதற்கும் கால அளவில் மிகுந்த வேறுபாடு உண்டு. கரும்புப் பயிர் டிசம்பரில் வைத்து அடுத்த டிசம்பரில் அறுவடை செய்கிறார்கள். கோடைகாலத்தில் இவர்களுக்குக் கல்லணைக்

கட்டியிருந்து தண்ணீர் போதுமான அளவுக்கு வருவதில்லை. ஆகவே கிடைக்கும் குறைந்த அளவு நீரைக் கொண்டு அதிகபட்ச நிலத்துக்கு நீர் பாய்ச்சுவது எப்படி என்று பார்த்தசாரதி யோசித்தார். பண்டைய காலத்திலே மொகலாய மன்னர்களின் பூங்காக்களில் அமைக்கப்பட்டிருந்த நீர்ப் பாசன முறை இவருக்கு வழிகாட்டியாக விளங்கியது. இதன்படி வயல் முழுவதற்கும் மேல்பரப்பில் நீர் பாய்ச்சுவதற்குப் பதில் வயலுக்குக் குறுக்கே வெட்டி விட்டு அதில் நீர் பாய்ச்சுகிறார்கள். அப்போது சுமார் 12 முதல் 18 மணி நேரத்துக்குள்ளாகப் பூமி மட்டத்துக்குக் கீழ் வெட்டுப் பகுதியின் இரு பக்கங்களிலும் இருபது முதல் இருபத்தைந்து அடி தூரம் வரை நீர் ஈர்க்கப்படுகிறது. இதனால் தண்ணீர் வீணாவது தவிர்க்கப்படுகிறது. மேல் பரப்பிலிருந்து ஆவியாகும் நீரின் அளவு குறைகிறது. இம்முறையில் ஒரு தொந்தரவு இல்லாமல் போகவில்லை. கீழ் டெல்டாப் பகுதியில் பூமி மட்டத்தினடியில் உப்பு இருப்பதாய்க் கண்டோம். இவ்வகை நீர்ப்பாசனத்தில் உப்பு கரைந்து மேலே வருகிறது. ஆனால் கோடை காலம் கழிந்து அடுத்தாற்போல் நீர் நிறைய வரும் நாட்களில் சாதாரண நீர்ப் பாசனம் நடைபெறுவதுடன் முன் குறிப்பிட்டபடி வடிகால்களில் அந்நீர் வடிந்தும் விடுவதால் மேலேவரும் உப்பு அதில் கரைந்து அடித்துக் கொண்டு போகப்படுகிறது. ஆகவே இந்த வகை நீர்ப்பாசனத்திலும் இறுதியில் நன்மையே விளைகிறது!

இம்மாதிரியாக எத்தனையோ விதத்தில் விஞ்ஞான ரீதியாகச் சிந்தித்துச் செயலாற்றி வருகிறார் திரு பார்த்தசாரதி என்னும் பார்த்தா. செயல் திறனுடன் செய்யும் காரியங்களை அழகாக விளக்கிச் சொல்லும் திறனும் பெற்ற திரு பார்த்தசாரதி ஜீப் ஓட்டுவதிலும் அபார சாமர்த்தியம் பெற்றிருப்பதைப் பண்ணையைப் பார்த்து வரச் சென்றிருந்த நான் ஒப்புக் கொண்டேயாக வேண்டியிருந்தது. அடை மழை பெய்து குண்டும் குழியுமாய்ச் சேறும் சகதியுமாய் இருந்த வரப்புப் பாதைகளில் அவர் அநாயாசமாக ஓட்டிப்போனார் ஜீப்பை. சற்று ஏமாந்து போய் ஒரு சிறு பிழை செய்தால் போதும், ஜீப் வயல் பள்ளத்தில் இறங்கி விடும். அல்லது முழங்காலளவுச் சேற்றில் சக்கரம் ஆழப் புதைந்து கொள்ளும். ஆறாயிரம் ஏக்கர் பரப்பளவுள்ள பண்ணையை நிர்வகிப்பதும் இப்படிப்பட்ட காரியம்தானே?

சிறிதளவே தவறான ஓர் உத்தரவை அவர் கவனப் பிசகாகப் பிறப்பித்து விட்டால் போதும், ஆறாயிரம் ஏக்கர் நிலத்தில் அந்த உத்தரவு நிறைவேற்றப்படும்போது பிழையும் பல ஆயிரம் மடங்காகப் பெருகிப் பெருத்த நஷ்டத்தையல்லவா தேடித் தந்துவிடும்?

வடபாதி மங்கலத்தை விட்டுப் புறப்பட்டபோது, கரும்புச் சோலையையும் சர்க்கரை ஆலையையும் எத்தனையோ இடங்களில் பார்க்கலாம்; ஆனால் ஆரூரான் சர்க்கரை ஆலை போன்ற ஓர் ஆலையை வடபாதிமங்கலத்தில் தான் காணலாம் என்ற எண்ணம் என் உள்ளத்தில் வேரூன்றியது.




ஒரு கிராமத்தில் பத்து ஏர்ச் சமுசாரி ஒருவன் தீர்வைப் பணம் கட்ட வழியில்லாமல், தன் காணி முதலாகிய ஆஸ்திகளையெல்லாம் தோற்று, உடுக்க வஸ்திரமும் இல்லாமல் பரதேசம் போய்விடலாம் என்று நினைத்திருந்தான். பழமுதல் பாக்கிக்காகச் சர்க்கார் சேவகர் வருகிற சேதி அறிந்து பெண்சாதி, பிள்ளை முதலானவர்களைத் துறந்து, கோவணாண்டியாய்ப் புறப்பட்டான். நடு வழியில் சர்க்கார் சேவகரைக் கண்டு நடுநடுங்கி ஜைனக் கோயில் ஒன்றில் போய் ஒளிந்தான். அப்படி ஒளிந்துகொண்டவன் அந்தக் கோயிலில் நிர்வாணமாயிருந்த ஜைன விக்கிரகத்தைப் பார்த்துத் தன்னைப் போல் பயிரிட்டுக் கெட்டவன் என்று நினைத்து 'ஐயோ! நான் பத்து ஏர் வைத்துக் கெட்டுக் கோவணத்தோடாவது தப்பி வந்தேன். அப்பா! நீ எத்தனை ஏர் வைத்துக் கெட்டாயோ! உனக்கு இந்தக் கோவணமும் இல்லாமல் போய்விட்டதே!' என்று அதைக் கட்டிக்கொண்டு அழுதான்! —விநோதரசமஞ்சரி.

கல்லறை ஒன்றின் அருகில் இரு பேய்கள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தன. "பார்த்தால் நீ நன்றாகத்தானே யிருக்கிறாய்! நீ மரணம் அடைந்த காலத்திலே நாடு செழிப்பாக இருந்திருக்கும் என்றே நினைக்கிறேன்!" என்றது முதல் பேய்.

"ஆமாம். அந்தக் காலத்திலே உணவுக்குப் பஞ்சம் இல்லை. முதல் போருக்குக் கொஞ்ச நாட்கள் முன்பு நான் இறந்தேன் – ஆமாம், உன்னைப் பார்த்தாலும் ஆரோக்கியக் குறைவாகத் தோன்ற வில்லையே! நீ எப்போது இறந்தாய்?" என்றது இரண்டாவது பேய்.

"நான் வாழ்ந்த காலத்திலும் ஒன்றும் குறைவில்லை. இரண்டாவது உலகப் போர் தொடங்குவதற்கு முன்னும் நான் இறந்து விட்டேன்!" என்றது இரண்டாவது பேய்.

அப்பொழுது அவ்வழியே மூன்றாவது நிழல் உருவம் வந்தது. அதன் கன்னங்கள் ஒட்டிக் கண்கள் குழிவிழுந்திருந்தன. இரண்டு பேய்களும் அவ்வுருவத்தை அழைத்து, "உன்னைப் பார்த்தால் நீ வாழ்ந்த காலத்தில், உனக்கு உண்ண உணவே கிடைத்திராது என்றல்லவா தோன்றுகிறது! உணவு கிடைக்காததனால்தான் நீ இறந்தாயா?" என்றன.

"என்ன உளறுகிறீர்கள், பேயாட்டம்? நான் எங்கே இறந்தேன்? இன்னும் உயிரோடு தானே இருக்கிறேன்!" என்றான் அவன்.

அதைக் கேட்ட பேய்கள் இரண்டும் அவன் நிழலைக் கண்டு மருண்டு ஓடின.



# கால்கேட்டின்மூலம் நாள்முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமி களில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய்த் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப் படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித் தால் மட்டும் போதாது—சாப்பிட்ட வுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினுல் உங்கள் பற்களை நன்ருகத் துலக்குங்கள். இதன் வீச்சுமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் கிடைக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிருர்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினுல், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெற வும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிருர்கள்.

# குண்டு மல்லிகை

அரு. ராமநாதன்



சடையாண்டி பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து தப்பிவிட்டான் என்ற செய்தியைக் கேட்டதுமே டாக்டர் ஜகந்நாதன் திகைப்போடு ''அந்தக் கொலை வெறியனை நம்மால் எப்படிச் சமாளிக்க முடியும்?'' என்று முணுமுணுத்தார்.

''டாக்டர்! அந்தச் சடையாண்டி எதனால் இந்த நர்ஸிங்ஹோமுக்கு வருவான் என்று எதிர்பார்க்கிறீர்கள்?'' என்று உமா குழம்பிய குரலில் மெல்லக் கேட்டாள்.

''அவன் முன்னொரு காலத்தில் என்னுடைய பிரதம விருந்தாளி—அதாவது பரம நோயாளி!'' என்று ஒரு துயரப் புன்முறுவலுடன் சொன்ன ஜகந்நாதன் அவனைப் பற்றிய விஷயங்களைச் சுருக்கமாகக் கூறலானார்.

''அந்தச் சடையாண்டி ஓர் உணர்ச்சி வெறியன்! மிகவும் பயங்கரமான மனிதன்! அவன் அழகான பெண்ணொருத்தி மீது அளவிலாத ஆசை வைத்திருந்தான். அந்தப் பெண் துரோகம் செய்து விட்டாள்! சடையாண்டி தத்துவ ஞானியாக இருந்து அவளிடம் மனப் பூர்வமான பந்த பாசம் வைக்காதிருந்தால் அவள் இல்லா விட்டால் இன்னொருத்தியென்று சாதாரணமாகப் பேசி யிருப்பான்! ஆனால் சடையாண்டியோ, உணர்ச்சிப் பித்தன்! அவன் அந்தப் பெண்ணிடம் அபரிமிதமான ஆசை வைத்திருந்தான்! அந்த ஆசையே அடங்காத ஆத்திரமாகவும் குரூர வெறியாகவும் மாறியது. அவன் ஒரு நாள் தன் காதலியின் படுக்கையறை ஜன்னல் கதவை உடைத்து உள்ளே குதித்து அவளைச் சின்னாபின்னப்படுத்திக் கடைசியில் அவளுடைய கழுத்தையும் தன் கைகளாலேயே நெரித்துக் கொன்று விட்டான். அதிலிருந்து அவனுக்குக் கொடூரமான சித்த வெறி பிடித்து விட்டது. வீடுகளிலும் ஆஸ்பத்திரிகளிலும் புகுந்து படுக்கையறை ஜன்னல் கதவுகளை உடைத்துக்கொண்டு உள்ளே குதிப்பது, தூங்கும் பெண்களைத் தொந்தரவு செய்வது, கட்டழகிகளைக் கற்பழித்துக் கழுத்தை நெரித்துக் கொல்வது, கண்ணில் தட்டுப்படும் ஜீவன்களையெல்லாம் சிதைப்பது—இவற்றையே தன் லட்சியங்களாகக் கொண்டு பயங்கரமாகத் திரிந்து கொண்டிருந்தான். போலீஸார் என்ன முயன்றும் அவனைப் பிடிக்க முடியவில்லை. ஒரு நாள் அவன் சுவரேறிக் குதிக்கும்போது தன் வலது கையை ஒடித்துக் கொண்டு ரத்தம் சொட்டச் சொட்ட அபாயகரமான

நிலையில் என் அறைக்குள் ஓடி வந்தான்? நான் அவனுக்கு ஆறுதல் சொல்லி ரகசியமான ஆபரேஷன் மூலம் அவனுடைய கையைச் சீர்திருத்தி யார் கண்ணிலும் படாதபடி அவனை வழியனுப்பி வைப்பதாக வாக்குறுதி கொடுத்தேன். அதை அந்த முட்டாள் நம்பி



என்னுடைய ஆபரேஷன் தியேட்டருக்குள் வந்து படுத்தான். வலி தீர்க்கும் மருந்து என்று மயக்க மருந்தை நான் அவனுக்குப் புகட்டி ஆபரேஷன் மூலம் அவனது வலது கையைச் சுத்தமாக வெட்டி யெறிந்துவிட்டு, இன்னொரு கையையும் கால்களையும் கட்டிவைத்து விட்டுக் கடமை தவறாத கண்ணியவான் போல் போலீஸாருக்கும் தகவல் கொடுத்தேன். கடவுளாண்டி மறுபடியும் கண் விழித்துப் பார்த்தபோது போலீஸார் அவனை 'லபக்' கென்று பிடித்துக் கொண்டு போய் விட்டார்கள். அவன் போகும்போது என்னைப் பார்த்து ரொம்பவும் சீறினான். என்றாவது ஒரு நாள் அவன் தப்பி வந்து என் ஆஸ்பத்திரிக்கு விஜயம்செய்து, என் நோயாளிகள் சிப்பந்திகள் அனைவரையும் கழுத்தை நெரித்துக் கொன்றுவிட்டு என் அங்கங்களை யெல்லாம் அங்குலம் அங்குலமாக வெட்டி வெட்டி எறிந்து சிரிக்கப் போவதாகச் சபதம் செய்தான்! ஆனால் அவனைப் போலீஸார் பத்திரமாகக் கொண்டு போய்ப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் அடைத்துப் பலமான கட்டுக் காவல் வைத்திருந்ததால் இத்தனை காலமும் நிம்மதியாக இருந்தேன்!'' என்று ஒரு பெருமூச்சுடன் கூறி நிறுத்திய ஜகந்நாதன், ஏதோ யோசித்தபடி பரபரப்புடன் நர்ஸை நோக்கி, ''நம் காம்பவுண்டு கேட் வாசலை இழுத்துப் பூட்டிவிட்டுக் கூர்க்காவைக் கைத் துப்பாக்கியுடன் ஜாக்கிரதையாகக் காவல் புரியும்படி சொல்! பேஷண்டுகளின் அறை வாசற் கதவு ஜன்னல் கதவுகளை நன்றாகச் சாத்தித் தாளிட்டு வைக்க வேண்டும்!'' என்று உத்தரவிட்டார்.

நர்ஸ் நடுநடுங்கியபடி வெளியே வேகமாக ஓடினாள்.

உமாவுக்கு இனம் தெரியாத ஏதோ ஒரு பயம் உண்டாயிற்று.

அவளை ஜகந்நாதன் கூர்ந்து நோக்கியபடி, ''உமா! உனக்கு 'ரெஸ்ட்' அவசியம்! பயப்படாமல் தூங்கு! தூக்கம் வராவிட்டால் 'ஸ்லீப்பிங் பில்ஸ்'—(தூக்க மாத்திரைகள்) எடுத்துச் சாப்பிடு!'' என்று சொல்லியபடி உமாவின் கட்டில் அருகிலுள்ள மருந்து மேஜையின் மீது தூக்க மாத்திரைகளின் பொட்டலத்தை வைத்து விட்டு, ''இன்றைய இரவு ஒரு வேளை பயங்கரமானதாக இருக்கலாம்!'' என்ற முடிவுரையுடன் வேகமாக அந்த அறையிலிருந்து வெளியேறிச் சென்றார்.

உண்மையிலேயே அந்த இரவு அதி பயங்கரமாகத்தான் இருந்தது. சோதனை போல் பேய்க் காற்றும், இடியும், மின்ன

லும், பெரு மழையும் வெளியே பொழிந்து கொண்டிருந்தன.

உமாவின் அறையில் அவளுக்குத் துணையாக அவளுடைய பாட்டி வந்து தரையில் பாய் விரித்து, 'சிவா! சிவா!' என்ற சிவ ஸ்மரணையுடன் படுத்தவள், அடுத்த நிமிஷமே குறட்டை ராக ஆலாபனைகளுடன் தூங்க ஆரம்பித்து விட்டாள்.

உமாவுக்கு மட்டும் தூக்கம் எவ்வளவு நேரம் ஆகியும், எவ்வளவு முயன்றும் வரவே யில்லை! என்னென்னவோ சிந்தனைகள் அவள் நெஞ்சைப் பிழிந்தன.

தூக்க மாத்திரைகளை எடுத்துச் சாப்பிடலாம் என்று மருந்து மேஜையின் மீது கைநீட்டி உமா தடவிப் பார்த்தாள். ஆனால் மாத்திரைப் பொட்டலம் அகப்பட வில்லை. அதை வசந்தி தந்திரமாக எடுத்துப் போய் விட்டாள் என்பது அவளுக்குத் தெரியாது.

இரவு மணி ஒன்றடித்தது!

நர்ஸிங் ஹோமைச் சுற்றிப் பேய் மழையின் சப்த ஜாலங்களைத் தவிர ஒரு விதப் பயங்கர அமைதி குடி கொண்டிருந்தது. ஆங்காங்கே எரியும் மின்சார விளக்குகள் காரிருளை விழுங்க முடியாமல் திணறின.

அன்றிரவு ஏதோவொன்று நடக்கப் போகிறது என்கிற உணர்ச்சி உமாவின் உள்ளத்தில் ஒவ்வொரு விநாடியும் பெருகிக் கொண்டே யிருந்தது.

அவள் தன் அறையில் எரியும் மின் விளக்கின் அசைவுகளையே உற்றுப் பார்த்துக் கொண்டு கட்டிலில் அசையாமல் படுத்திருந்தாள்.

அறையின் ஒரு மூலையில் அவளுடைய பாட்டி அயர்ந்த உறக்கத்தில் ஆழ்ந்து கிடந்தாள். அன்றிரவு மட்டும் ஏனோ அவ்வளவு விசித்திரமாகத் தூங்கிக் கொண்டிருந்தாள்!

திடீரென்று எங்கோ இடி இடித்தது.

அதைத் தொடர்ந்து மின்சார விளக்குகள் எல்லாம் குபீரென்று அணைந்தன! சுற்றிலும் விபரீதமான பேயிருள் சூழ்ந்து கொண்டது!

உமா திடுக்கிட்டாள்! மின்சாரக் கம்பியில் ஏதாவது பழுது ஏற்பட்டு நர்ஸிங்ஹோமிலுள்ள விளக்குகள் எல்லாம் அணைந்து போயிருக்கலாம் என்று நினைத்தாள்.

அதே சமயம் அவளுடைய அறை ஜன்னலின் கண்ணாடிக் கதவு ஒன்று 'டங்'கென்று உடைந்து நொறுங்கி விழும் சப்தம் கேட்டது!

உமா அதிகக் கலவரம் அடைந்தாள்! சூறைக் காற்றுத்தான் விஷமத்தனமாக ஜன்னலின் கண்ணாடிக் கதவை அப்படி உடைத்துக் கொண்டு உள்ளே புகுந்திருக்கிறது என்று தன் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொள்ள முயன்றாள்.

ஒரு நிமிஷம் பீதியின் பளுவில் ஒரு யுகமாகக் கழிந்தது.

அறைக்குள் படர்ந்திருக்கும் அடர்த்தியான இருளிலும், ஆழ்ந்த நிசப்தத்திலும் ஏதோ ஓர் ஓசை — யாரோ பூனை போல் நடக்கும் மெல்லிய காலடி ஓசை கேட்டது!

ஒரு வேளை சித்தவெறியன் சுடலையாண்டியாக இருக்குமோ......?

உமா நடுநடுங்கினாள். உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியது.

"பாட்டி! பாட்டி!" என்று அவள் மெல்லக் கூப்பிட்டாள். ஆனால் பாட்டி எழுந்து வரவில்லை! இருட்டில் அவள் என்ன ஆனாள் என்பதும் தெரியவில்லை!

உமா கதியற்றவளாய்க் கட்டிலிலேயே ஆடாமல் அசையாமல் படுத்திருந்தாள்! அவளுடைய தலைப் பக்கம் காலடியோசை நெருங்கி வந்து 'டக்'கென்று நின்றது!

ஒரு நிமிஷம் ஆயிற்று....

யாரோ அவளை நோக்கிக் குனிவது போன்ற உணர்ச்சியும், உஷ்ணமான மூச்சுக் காற்று அவளுடைய முகத்தை நோக்கி வீசுவது போன்ற பிரமையும் தட்டின.

உமாவுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை!

இருட்டில் ஏதோ ஒருகை அவளுடைய கூந்தலை மிருதுவாகத் தடவி அவளுடைய கழுத்தை மெல்லப் பற்றியது. அது யாரோ ஓர் ஆடவனின் கைதான்!

உமாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. நெருப்பை மிதித்தவள் போல் 'வீல்' என்று கத்தினாள்.

## அத்தியாயம் இருபத்தெட்டு

# மீள முடியுமா?

உமா 'வீல்' என்று கத்தியதும் அவளுடைய கழுத்தைப் பற்றி யிருந்த ஆடவனின் முரட்டுக் கரம் சட்டென்று விலகி விட்டது.

கட்டிலில் படுத்திருந்த உமாவின் உடம்பெல்லாம் வெடவெடவென்று நடுங்கிக் கொண்டிருந்தது. அவள் செய்வதறியாது திகைத்தாள்.

ஒரு கணம் அந்த அறையின் பேயிருளில் பயங்கரமான அமைதி நிலவியது.

உமாவின் மனம் அலை பாயலாயிற்று. இனந்தெரியாத இந்த அறையின் இருட்டில் என் கழுத்தைக் கையால் பற்றிய மூர்க்கன் யாராக இருப்பான்? சித்த வெறியன் கடலையாண்டியாகத் தான் இருப்பான்! அவன் பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து தப்பியோடியதும் நேரே இந்த நர்ஸிங்ஹோமுக்கு வந்திருப்பான்! டாக்டர் ஜகந்நாதனைப் பழி தீர்க்கவும், அவருடைய நர்ஸிங்ஹோமில் உள்ள நோயாளிகளை யெல்லாம் கொன்று குவிக்கவுமே மூர்க்க வெறியோடு வந்திருப்பான்! காம்பவுண்டுக்குள் ஏறிக் குதித்ததும் முதலில் என் அறைதான் அவன் கண்களுக்குத் தட்டுப்பட்டிருக்கும்! உடனே குருட்டாம் போக்கில் அறையின் ஜன்னல் கண்ணாடியை உடைத்துக் கொண்டு உள்ளே குதித்திருக்கிறான்! ஆனால் இந்தக் கும்மிருட்டில் என் கட்டிலை எப்படி அடையாளம் தெரிந்துகொண்டு அவ்வளவு கன கச்சிதமாக நடந்து வந்து என் தலைப் பக்கம் நின்றான்....? ஒருவேளை, என் கூந்தலில் சூடியிருக்கும் மல்லிகை மலரை மோப்பம் பிடித்துக் கொண்டு வந்திருப்பான்! மல்லிகைப் பூவின் மணத்தை நுகர்ந்ததும் அவனுக்கு மங்கையரின் நினைவு வந்திருக்குமோ!... பெண்கள் என்றாலே அவன் பேயனாகவும் வெறியனாகவும் மாறி விடுவானாமே?

அவன் இப்போது என்னவானான்...? நான் கூச்சலிட்டதும் அவன் என் கழுத்தைச் சட்டென்று விட்டு விட்டு எங்காவது ஓடி விட்டானா? ஆனால் அவன் ஓடியிருந்தால் தடதடவென்று காலடி ஓசைகள் கேட்டிருக்குமே? மேலும், உணர்ச்சிப் பித்தனான கடலையாண்டி பலவந்தமாகப் பெண்களைக் கெடுத்துக் கடைசியில் கழுத்தை நெரித்துக் கொன்று விடுவானாமே? அப்படிப்பட்டவன் இலேசில் இந்த அறையிலிருந்து போய் விடுவானா......?

அப்படியானால்..... அப்படியானால்? அந்த வெறியன் இன்னும் இந்த அறையில்தான் எங்கோ பதுங்கி நிற்கிறானா?

உமா நடுநடுங்கினாள்.

அதே சமயம் அவளுடைய நினைவில் பளிச்சென்று ஓர் எண்ணம் சட்டி முனை போல் குத்தியது.

தான் 'வீல்' என்று கத்தியதும் அதே அறையில் படுத்திருக்கும் தன் பாட்டி அலறியடித்துக் கொண்டு உதவிக்கு ஏன் ஓடி வரவில்லை? பாட்டிக்கு ஏதேனும் மோசம் நடந்திருக்குமோ...?

அப்படி நினைத்துப் பார்க்கக் கூட அவள் விரும்ப வில்லை. அதைவிட எல்லாம் வெறும் கனவு என்றே நினைத்துத் தன் மனத்தை அமுக்கிக் கொண்டு தன் அறிவையும் ஊமையாக்கிக் கொள்ள முனைந்தாள்.

ஆமாம்; எல்லாம் வெறும் கனவுதான்! என் அறையின் ஜன்னல் கண்ணாடியை உடைத்துக் கொண்டு யாரோ ஒரு முரடன் உள்ளே குதித்தது. காலடி ஓசையுடன் என் கட்டிலருகே அவன் வந்து நின்றது. என் முகத்தை நோக்கி

## பிரமிக்க வைக்கும் பாக்ரா அணை

பஞ்சாபில் பாக்ரா — நங்கல் திட்டத்தின் முக்கிய அம்சமாகிய பாக்ரா அணை பூர்த்தியாகி விட்டது. மூன்று மாதங்களுக்கு முன்னர்தான் பாரதப் பிரதமர் ஜவாஹர்லால் நேரு இந்த அணையினை நாட்டின் சேவைக்காகச் சமர்ப்பணம் செய்தார். 740 அடி உயரமுள்ள பாக்ரா அணை ஆசியாவிலேயே மிக உயரமான அணையாகும். இதனால் தேக்கி வைக்கப்படும் ஸட்லெஜ் நதியின் நீர் மூவாயிரம் மைல் நீளமுள்ள கால்வாய்கள் வழியாகப் பாய்ந்து சென்று முப்பத்தியாறு லட்சம் ஏக்கர் விஸ்தீரணமுள்ள பூமியை வளப்படுத்தும். இதைத் தவிர தொழில் வளம் பெருக உதவியாக 800,000 கிலோவாட் மின்சார சக்தியும் உற்பத்தியாகும். பொங்கிப் பெருகிப் பாயும் ஸட்லெஜ் நதியின் வெள்ளத்தைப் போலவே பஞ்சாபிலும் ராஜஸ்தானத்திலும் உள்ள மக்களின் வாழ்க்கை நலன்களும் பொங்கிப் பெருகப் பாக்ரா அணை உதவும்;



உண்மையான மூச்சு விடும்படி குலுங்கியது. என் கூந்தலை ஒரு கை மிருதுவாகத் தடவியது. பிறகு அந்தக் கை என் கழுத்தைப் பற்றியது — எல்லாமும் வெறும் கனவுதான்! சற்று முன் நான் 'வீல்' என்று கத்தியது கூட வெறும் மனப் பிரமையாகத்தான் இருக்கும்! இல்லையென்றால் என் கத்தலைக் கேட்டதும் இதே அறையில் படுத்திருக்கும் என் பாட்டி திடுக்கிட்டு எழுந்து வந்திருப்பாளே......?

ஆனால் இப்படிப்பட்ட மோசமான கனவுகள் எனக்கு ஏன் வந்தன? முன்னிரவில் டாக்டர் ஜகந்நாதன் என்னிடம் வந்து சித்த வெறியன் கடலையாண்டியைப் பற்றிச் சொல்லி விட்டுப் போன விசித்திரமான விஷயங்கள்தான் என் தூக்கத்தில் தொக்கி நின்று இப்படிப்பட்ட பயங்கரமான கனவுகளாக உருவெடுத்திருக்கின்றன.

ஆனால்.... ஆனால்.... நான் தூங்கவே யில்லையே? கண் விழித்திருக்கும் போதே எப்படிக் கனவுகள் உண்டாகும்? ஒரு வேளை நான் கண் விழித்திருப்பதாக நினைத்தது கூடக் கனவுதானா?

உமா தன் கையால் தன் கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டு கரு விழிகளை மட்டும் சுழற்றிச் சுற்றுமுற்றும் இருளை ஊடுருவிப் பார்த்தாள். இருட்டில் ஒன்றுமே புலப்படவில்லை. கட்டிலை விட்டுப் புரளவும் பயம்! அதனால் ஆடாமல் அசையாமல் அப்படியே கட்டிலில் கிடந்தாள்.

ஒவ்வொரு விநாடியும் ஒவ்வொரு யுகமாக, நெருப்புக் கோளமாக, விதியின் கோரத் தாண்டவமாகக் கழிந்து கொண்டிருந்தது.

திடீரென்று ஏதோ ஒரு சப்தம்! அறைக்குள் யாரோ நடமாடும் போது உமாவின் கட்டில் அருகில் உள்ள மருந்து மேஜை மீது காலோ கையோ தவறிப் பட்டதால் அதன் மீதுள்ள கண்ணாடி டம்ளர் ஒன்று 'டங்'கென்று கீழே விழுந்து நொறுங்கிய சத்தம்தான் அது.

அப்படியானால் இதெல்லாம் கனவாக இருக்க முடியாது! அந்தச் சித்த வெறியன் இன்னும் இந்த அறைக்குள் தான் இருளோடு இருளாக அலைகிறான்.

'கிரீச் கிரீச்' என்ற சத்தம் அவளுடைய கட்டிலை நோக்கி நெருங்கி நெருங்கி வந்தது. அந்த முரடனின் காலடி ஓசைகள்தான்! ஏதோ எல்லாவற்றுக்கும் துணிந்துதான் அசுர வேகத்தில், ஆவேச வெறியில் வருகிறான்!

பிரளயத் தீ போல் உமாவுக்கு உடம்பெங்கும் ஓர் அனல் வேகம் பொறிப் பொறியாக எரிந்தது. குப்பென்று வியர்த்தும் கொட்டியது. அவளுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. ஒரு விநாடி நேரம் சட்டென்று கழிந்தது. கட்டிலின் மீது அந்த வெறியன் மெல்ல உட்காருவது போன்ற உணர்ச்சி தட்டியது. அதைத் தொடர்ந்து அவன் முரட்டுக் கை அவளுடைய கூந்தலைப் பிடித்துத் தன் பக்கம் இழுத்தது. அப்போது அவனுடைய கைக் கடிகாரம் ஒன்று உமாவின் பட்டு ரோஜா போன்ற கன்னக் கதுப்பில் வருடியது.

அவ்வளவுதான்; உமா 'ஓ'வென்று அலறினாள். (தொடரும்)

## இந்தியாவில் சோவியத் டிராக்டர்கள்

1956ல் புது தில்லி பொருட்காட்சியில் ஒரு பஞ்சாப் விவசாயி முதன் முதலாகச் சோவியத் டிராக்டர் ஒன்று வாங்கினர். அதிலிருந்து சோவியத் விவசாய இயந்திரங்கள் இந்தியாவில் விற்பனையாவது தொடங்கியது.

பதினைந்து குதிரைச் சக்தியிலிருந்து ஐம்பது குதிரைச் சக்தியுள்ள டிராக்டர்கள் ரூ. 5500லிருந்து ரூ. 12,200 விலை வரிசையில் கிடைக்கின்றன. மற்ற நாட்டு விலைகளை விட இது சுமார் அரை மடங்கு விலை குறைந்ததாகும். மேலும் இவற்றை ரூபாய் கொடுத்து வாங்கி விடலாம். அந்நியச் செலாவணி தேவையில்லை.

இன்று ஐயாயிரத்துக்கு மேற்பட்ட சோவியத் டிராக்டர்கள் இந்தியாவில் வேலை செய்கின்றன.

மேலும், டிராக்டர்களின் பராமரிப்புக்கான ஏற்பாடு வசதிகளையும் சோவியத் டிராக்டர் ஏற்றுமதி ஸ்தாபனம் செய்து தருகிறது. பழுது பார்க்கும் நிறுவனங்கள் பல இந்தியாவில் நிறுவப்பெற்றுள்ளன. இவற்றில் பல இந்தியர்கள் தொழில் நுட்பப் பயிற்சி பெற்று வருகிறார்கள்.

இந்தியாவிலேயே பயிற்சியளிப்பதோடன்றி, இந்தியர்களைச் சோவியத் யூனியனுக்கு வரவேற்று டிராக்டர் தொழிற்சாலைகளிலும், விஞ்ஞான ஆராய்ச்சி சாலைகளிலும், இயந்திர சோதனை நிறுவனங்களிலும் பயிற்சியளிக்கிறார்கள். சென்னையிலும் டிராக்டர் பராமரிப்புப் பயிற்சிக் கூடமொன்று தொடங்கப்பட்டுள்ளது.

# உணவைப் பெருக்குவோம்

எம். எஸ். சிவராமன், ஆலோசகர், திட்டக் கமிஷன்

“உழுதவன் கணக்குப்பார்த்தால் உழவுக் கோல் கூட மிஞ்சாது” என்ற பழமொழி விவசாயியின் லாப நஷ்டக் கணக்கை அப்படியே எடுத்துக் காட்டுகிறது. இது இன்றைய விவசாயியினுடைய நிலைக்கும் பொருத்தமாயிருக்கிறது. இன்று தமிழ்நாட்டின் விவசாயிகளில் நூற்றுக்கு 70 சத விகிதம் பேர் கடனாளிகள். ஒவ்வொருவரும் ரூபாய் 350 லிருந்து 400 ரூபாய் வரை கடன்பட்டிருக்கிறார்கள். சமீபத்தில் ரிசர்வ் பாங்க் வெளியிட்ட அறிக்கையிலிருந்து இக்கடன் அதிகரித்திருப்பதாகத் தெரிகிறதே ஒழியக் குறைந்தபாடாக இல்லை. அதிலும் சிறு நிலச்சுவான்தார்கள் அதிகக் கடனாளியாக இருக்கிறார்கள். குடும்ப சம்ரட்சணைக்திற்காகவும் மற்றுக் கல்யாணம் கார்த்திகை போன்ற செலவுகளுக்காகவும் கடன் பட்டிருப்பதாகவே தெரிகிறது. விவசாயக் கூலிகள் கூடக் கடனாளிகளாகத்தான் இருக்கிறார்கள். குடும்பம் ஒவ்வொன்றும் சராசரி 90 ரூபாய் வரை கடன்பட்டிருக்கிறது.

விவசாய மக்களின் இந்தப் பரிதாப நிலைக்குக் காரணம் விவசாய உற்பத்தி போதிய அளவு இல்லாததுதான். இவ்வளவுக்கும் தேசத்தின் மற்றப் பகுதிகளைவிடத் தமிழ் நாட்டின் விவசாய உற்பத்தி (ஏக்கருக்கு) கணிசமான அளவு அதிகமாகத்தான் இருக்கிறது. பெரும்பான்மையான பயிர்களின் விளைச்சலில் தமிழகம் மற்ற ராஜ்யங்களைவிட முன்னணியிலிருக்கிறது!

1930ம் ஆண்டிலிருந்தே தமிழகத்தின் முக்கியப் பயிரான நெல் விளைச்சல் படிப்படியாகக் குறைந்து கொண்டே வந்திருக்கிறது. இந்த நிலை 1952ல் புதிய விவசாய முறைகளைக் கையாண்டதன் விளைவாகத் தடுத்து நிறுத்தப்பட்டது. அதற்குப் பிறகு நெல் சாகுபடி ஆண்டுதோறும் கணிசமாக உயர்ந்து வந்திருக்கிறது. ஆனால் சமீப காலத்தில் மீண்டும் சற்றுக் குறையத் தொடங்கியிருக்கிறது. சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில் சென்னை ராஜ்யத்தில் கலெக்டர்களாக இருந்த பிளேஸ், பக்லே, நூக்கின் முதலியவர்களின் கருத்துப்படி அப்பொழுதெல்லாம் 1950ம் ஆண்டின் விளைவைவிட இரண்டு மடங்கு அதிகமாக விளையுமாம். இதற்குக் காரணம் அந்த நாட்களில் தழை உரங்கள் வயல்களுக்கு இடப்பட்டு வந்ததுதான். நாளடைவில் ஜனத்தொகை பெருகியதாலும் சாகுபடியில் கொண்டுவரப் பட்ட வயல் பரப்புப் பெருகியதாலும் தழையுரம் கிடைப்பது அரிதாகி விட்டது. அதனால் விளைவு குறைந்து விவசாயி ஏழையாகி வந்தான். விவசாயி ஏழையாக ஏழையாகச் சாகுபடிக்காக அதிகம் செலவழிக்க முடியவில்லை. இதனிடையில் அவனுடைய குடும்பமும் பெருகப்



எம். எஸ். சிவராமன்

பெருக அவனுடைய வறுமையும் பெருகியது: பாரம்பரை விவசாயி தனது பிரத்தியேக நிலத்தின் தன்மை என்ன, அதை எப்படிப் பண்படுத்த வேண்டும், பயிர் செய்ய வேண்டும் என்பதைப் பற்றியெல்லாம் அநுபவ வாயிலாக நன்கு அறிந்திருந்தான். அம்முறைகள் விஞ்ஞான ரீதியாகவும் சரியானவையே. இன்றைய விவசாயி தன் நிலத்தை எப்படிப் பேணவேண்டும் என்பதை அறிந்திருந்தும் அம்முறைகளைக் கையாள்வதில்லை.

நமது முன்னோர்கள் பயிர் அறுவடையான பிறகு மண் இழந்துவிட்ட சத்தை மீண்டும் பெறச் செய்ய மிகப் பாடுபட்டார்கள். இன்று யாரும் அவ்விதம் சிரத்தை கொள்வதில்லை. முன்னாட்களில் ஊரைச் சுற்றிக் காடுகள் இருந்தன. அக்காடுகளி லிருந்து தழையுரம் கொண்டு வந்து வயலில் இட்டார்கள். அவை விளைவைப் பெருக்க உதவின. மேலும் வயல்களில் மழைநீர் ஓடி வண்டல்கள் படிய ஏதுவாயிருந்தது. முன்னாட்களில் அடுப்புக்காக மரம் வெட்டுவதும், பசுஞ் சாணத்தை விரட்டியாக்கி எரிப்பதும் மிகக் குறைவாக இருந்தன. ஆடு மாடுகள் குறைவாக இருந்தன. அதனால் பசுந்தாள் உரம் ஏராளமாகக் கிடைத்தது. விவசாயிகளுக்குத் தழையுரமும் சாணி உரமும் தாராளமாகக் கிடைத்தன. ஆகவே பயிர் செய்யும் வயல்களிலிருந்தே சாகுபடியைப் பாதிக்காமல் வயலுக்கு வேண்டிய உரத்தைச் சம்பாதித்துக் கொண்டோமானால் பூமியின் சத்தைச் சென்ற நூற்றாண்டில் இருந்த அளவுக்குக் கொண்டு போகலாம். அது போலப் பயிருக்கு எப்படி ஊட்டமளிக்க வேண்டும் என்பதில் இன்றைய விஞ்ஞான முறைகளைக் கையாண்டோமானால் உற்பத்தியையும் கணிசமாகப் பெருக்கி விடலாம்.

இன்றும் பழைய விவசாய முறைகளைக் கடைப்பிடித்து வரும் இடங்களில் விவசாயம் தொடர்ந்து நன்றாகவே இருந்து வருகிறது. உதாரணத்துக்குத் திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரபரணிப் பாசனத்தை எடுத்துக் கொள்வோம். பெரிய பண்ணைகளில் ஏக்கருக்கு 4000 ராத்தல் நெல் உற்பத்தியாகிறது. இது தமிழ் நாட்டின் சராசரி உற்பத்தியை விட இரண்டு பங்கு அதிகமாகும். இங்கு நெல் சாகுபடி நிலங்கள் இயல்பான வளம் பெற்றவையல்ல. இங்கு மண் வளம் அதிக ஆழம் இல்லை. ஏனெனில் சற்றுக் கீழே போனால் பாறைகள் தட்டுப்படும். அதனால் இப்பகுதி விவசாயிகள் வெளியிலிருந்து தழையுரம் கொண்டு வந்து மண்ணை நல்ல செழிப்புள்ளதாக்கிவிட்டுப் பயிர் செய்து வருகிறார்கள்.

நமது நாட்டில் விளைவு குறைவாக இருப்பதற்கு முக்கியமான காரணம் பயிர்களின் வளர்ச்சிக்கு மிகத் தேவையான நைட்ரோஜன் சத்து மண்ணில் குறைவாக இருப்பதுதான். இக் குறையை நிறைவு செய்யாமல் விளைவைப் பெருக்குவதற்கு வேறு என்ன முயற்சி எடுத்துக் கொண்டாலும் பயன் விளையாது. உஷ்ணப் பிரதேசங்களில் சிறிது ஈரம் மண்ணில் இருந்தால்கூடப் போதும், களை செடிகள் ஏராளமாக வளர்ந்து மண்ணின் நைட்ரோஜன் சத்தை உறிஞ்சி எடுத்து விடுகின்றன; மண்ணுக்கு நைட்ரோஜன் சத்துத் தருவதும் பசுந்தாள் உரமாதலால் வயலில் களை செடிகள் வளர விடுவதற்குப் பதில் வயலுக்குப் பசுந்தாள் உரமாகக் கூடிய செடிகளைப் பயிர் செய்து மண்ணில் இட்டு, நைட்ரோஜன் சத்துப் பெறச் செய்வது சுலபம் எனத் தோன்றியது. ஆகவே இந்தச் சோதனையைத்தான் 1947ல் ஆந்திரப் பிரதேசம் சேர்ந்திருந்த சென்னை ராஜ்யத்தில் நான் மேற்கொண்டேன். அப்போது பயிர் செய்யப்பட்ட நிலங்களுக்குப் போதிய எரு கிடைக்காததால் இம்முறையைக் கைக்கொள்ளச் செய்தேன். ராஜ்யத்தில் உள்ள ஒவ்வொரு விவசாய ஆராய்ச்சிக் கூடமும் தனக்குத் தேவையான உரத்தைத் தானே உற்பத்தி செய்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினேன். மூன்று நான்கு ஆண்டுகளில் எல்லாப் பண்ணைகளுமே உர விஷயம் பொறுத்த மட்டில் சுய தேவைப் பூர்த்தி செய்துகொள்ளக் கூடும் என்பது புலனாயிற்று. ஏன், நீர்ப்பாசன வசதியுள்ள பண்ணைகளில் ஏக்கருக்கு 4000, 5000 டன் உபரியான பசுந்தாள் உரமும், கம்போஸ்ட் உரமும் கிடைத்தன. அது மட்டுமின்றிப் பண்ணைக்கு வேண்டிய விதைகள் முதலிய எல்லாமே கிடைத்தன. நம் நாடு போன்ற உஷ்ணப் பிரதேச விவசாயத்துக்கு இந்தச் சோதனை மூலம் கண்டுபிடித்த உண்மைகள் ஒரு வரப்பிரசாதமேயாகும்.

ஆடுதுறை சர்க்கார் ஆராய்ச்சிப் பண்ணையில் 1948-49ல் விளைவிக்கப்பட்ட 20 டன் சீமை அகத்தி (Sesbania - முன் பக்கத்தில் தலைப்பில் உள்ள படம்) என்னும் பசுந்தாள் உரம் அடுத்த நான்கு ஆண்டுகளில் 397 டன்னாக உயர்ந்துவிட்டது. 1948-49ல் ஏக்கருக்கு 1860 ராத்தல் நெல் விளைந்த இடத்தில் 1952-53ல் ஏக்கருக்கு 3,350 ராத்தல் விளைந்தது. 57 ஏக்கராவாக இருந்த நெல் விளையும் பூமி 76 ஏக்கராவாக உயர்ந்தது: உண்மையில் 53 ஏக்கராதான் இந்தப் பண்ணையின் நிலப்பரப்பே. முதற் போகம் குறுவைச் சாகுபடியில் 48-49ல் 100 ரூபாய் லாபம் கண்டது என்றும் 52-53ல் 479 ரூபாய் லாபம் கிடைத்தது. இரண்டாவது தாளடி சாகுபடியில் 48-49ல் ரூ. 208 ஏக்கராவுக்கு லாபம் கிடைத்தது என்றால், 52-53ல் 543 ரூபாய் கிடைத்தது. மொத்த நெல் விளைச்சல் 1.07 லட்சம் ராத்தலிலிருந்து நான்கு ஆண்டுகளில் 2.33 லட்சமாக உயர்ந்தது.

ஆகவே பழைய சாகுபடி முறைகளைப் பற்றிச் சந்தேகப்படுபவர்களுக்கு ஆடுதுறைப் பண்ணை தக்க பதில் அளித்து விட்டது. உண்மையிலேயே விளைச்சலைப் பெருக்கவேண்டும் என்று கருதினால் என்ன செய்ய வேண்டும் என்பதை நிதர்சனமாகக் காட்டிவிட்டது. பல விவசாயப் பெருமக்களை அழைத்துவந்து காண்பித்து ஆடுதுறைப் பண்ணையில் கையாண்ட முறைகள் விளக்கப்பட்டன. ஆடுதுறைப் பண்ணை அப்படி யொன்றும் விசேஷ வசதிகள் பெற்ற பண்ணையல்ல. ஆடுதுறைப் பண்ணையில் கையாளப்பட்ட முறைகள் மற்ற வயல்களில் கையாளப்பட்டால் நிச்சயம் பயன் கிடைக்கும் என்று அவ்விவசாயிகளுக்கு உணர்த்தப்பட்டது;

ஆடுதுறைப் பண்ணையும் போதிய உரம் கிடைக்காமலும் வருஷம் முழுதும் பாய்ச்சக்கூடிய நீர்ப்பாசன வசதி கிடைக்காமலும் கஷ்டப்பட்டு வந்தது. முதல் கஷ்டத்தை எவ்விதப் பணச் செலவும் செய்யாமலே பசுந்தாள் உரத்தை விளைவித்துச் சமாளித்தனர். அடுத்த கஷ்டத்தை ஆயிரம் ரூபாய்க்குக் குறைவாகச் செலவு செய்து மூன்று குழாய்க் கிணறுகளை 40 அடி ஆழத்துக்கு எடுத்துச் சமாளித்தனர்.

வானம் பார்த்த பூமிக்கு உரமிட வேறு முறை கையாளப்பட்டது. கிளிரிஸிடியா, கொடிப் பூவரசு (Ipomea Carnea) இவற்றை வரப்புக்களில் பயிர் செய்து அதன் தழைகளை வெட்டி வயல்களிலேயே தோண்டப்பட்ட குழிகளில் இட்டு மக்கவைத்து உபயோகிக்கப்பட்டன. மூன்று ஆண்டுகளில் இந்தப் பசுந் தழை ஓர் ஏக்கருக்கு 4 டன் வீதம் கிடைத்தது. அது மட்டுமின்றி ஓர் ஏக்கருக்கு வேண்டிய கம்போஸ்ட் உரத்தை, 10 அடி நீளம், 5 அடி அகலம், 3 அடி ஆழமுள்ள குழிகள் இரண்டு வெட்டி அதில் இந்தச் செடிகளின் இலைகளை வெட்டிப்போட்டு மக்க வைத்துப் பெற்றுக்கொள்ளலாம் என்பதும் தெரிய வந்தது. இந்த உரம் மண்ணுக்கு வேண்டிய நைட்ரோஜன் சத்தும், பயிருக்கு ஊட்டமளிக்கக் கூடிய மற்றக் குணங்களும் பெற்றிருப்பதோடு, மண்ணின் ஈரத்தைக் காப்பாற்றவும் உதவுகிறது. அதனால் நீர்ப் பாய்ச்சும் தொல்லையைக் குறைப்பதோடு, சாதாரண மழையில்லாத வறண்ட நாட்களைச் சமாளிக்கவும் உதவுகிறது. கொடிப் பூவரசு வறண்ட பிரதேசங்களிலும் விளையும். தண்ணீர் தேங்கும் பிரதேசங்களிலும் விளையக் கூடியது. ஆடு மாடுகள் தின்னமாட்டா. வெட்ட வெட்ட வேகமாக வளரும்.

இந்தச் சோதனைகள் செய்து பார்த்ததில் பணச் செலவை விட அதிக சிரத்தையும், உழைப்பும்தான் அதிக உணவு உற்பத்திக்குத் தேவை என்பது புலனாகியிருக்கிறது. இந்திய விவசாயத்தின் இரு பெரும் குறைகள் — மண் நைட்ரோஜன் சத்து இழந்திருப்பதும் பருவ மழை தவறிவிட்டால் மண் ஈரப்பசை அற்றுப் போவதும்தான். பரம்பரையாக வந்துள்ள விவசாய முறைகளைக் கையாண்டாலே இந்தக் குறைகளை அகற்றி விடலாம். நமது விவசாய வேலை செய்யும் மக்கள் வருஷத்தில் பல மாதங்களில் வேலையின்றி இருப்பதால், அவர்களைத் தக்கபடி பயன்படுத்திக் கொண்டால் சமீப காலத்தில் குறைந்து வரும் விவசாய உற்பத்தியைக் கணிசமாகப் பெருக்கிக் கொள்ளலாம். இவற்றை யெல்லாம் துரதிர்ஷ்டவசமாக யாரும் கவனித்ததாகத் தெரியவில்லை. இல்லையென்றால் இப்பொழுதெல்லாம் 'பாக்கேஜ் திட்டத்'தின் கீழ், நீர்ப்பாசன வசதி இல்லையென்பதைக் கூடக் கவனியாமல் தாவரங்களுக்கான ரசாயன உரங்களைக் கடனாகக் கொடுத்து உதவுவார்களா? பல விவசாயிகளுக்குக் கடன் வாங்கும் வசதியோ, மற்றும் பண வசதியோ கிடையாது. கடன் வாங்கும் வசதியுள்ளவர்கள் கடன் வாங்கக் கூசுகிறார்கள். தக்கபடி வழி காண்பித்தால் பண முதலீடு செய்யாமலே சுய முயற்சியில் நல்ல விளைச்சலை எடுக்கச் செய்யலாம். உதாரணமாக 1951-52ல் தஞ்சாவூர் ஜில்லாவில் சீமை அகத்திச் செடியை வரப்புக்களில் பயிர் செய்வது நாலு மணங்கு விதையுடன் தொடங்கப்பட்டது. அதைப் பார்த்து விவசாயிகளுக்குப் பெரும் உற்சாகம் ஏற்பட்டது. அதன் விளைவாக நான்கு ஆண்டுகளில் 10.45 லட்சம் ஏக்கரா நிலங்களுக்குச் செஸ்பேனியா என்னும் சீமை அகத்தி பரவிவிட்டது.

சென்னை ராஜ்யத்தில் கண்ட பசுந்தாள் உரத்தின் சிறப்பு இவ்வளவு அவ்வளவு அல்ல. சென்னை ராஜ்யம் பல்லாண்டுகளாகப் பற்றாக் குறைப் பிரதேசமாக இருந்தது. அத்துடன் விளைச்சலும் ஆண்டுக்கு ஆண்டு குறைந்து வந்தது. அப்படிப்



## உழவர் கொண்டாட்டம்

வல்குடி கிருஷ்ணமூர்த்தி

ஆடியில் அள்ளித் தெளித்துப் பின்
  ஆவணிதன்னில் அந் நாற்றைக் குவித்து
தேடிய நல்லுர மிட்டு அந்தத்
  தெய்வத் தைநம்பியே - நட்ட பயிர்கள்
வாடி வதங்காமல் காக்கும் தம்
  வைர உடல்களை ஈடு கொடுக்கும்
கோடி உழவர்கள் நெஞ்சாம் ஒன்றாய்க்
  கொண்டாடப் பொங்கல் வருகுது தங்கம்!



பட்ட ராஜ்யம் உணவு விஷயத்தில் உபரி ராஜ்யமாகி விட்டது. 1952ல் ஏக்கருக்கு 891 ராத்தல் விளைந்த பூமியில் 55-56ம் ஆண்டில் 1209 ராத்தலும் 61-62ல் 1374 ராத்தலும் விளைந்தன! 1955-56ல் சென்னை ராஜ்யத்தின் மொத்த விளைச்சல் 29 லட்சம் டன் அரிசியாக இருந்தது. இரண்டாவது திட்ட காலத்தில் 38 லட்சமாக (1961-62) உயர்ந்தது. அதாவது 9 லட்சம் டன் அரிசி அதிகரித்திருக்கிறது. இந்தக் காலத்தில் உபயோகிக்கப்பட்ட 42,500 டன் ரசாயன உரம் காரணமாக 85,000 டன் அரிசி விளைந்திருக்கலாமே தவிர வேறில்லை. நெல் சாகுபடிக்குக் கொண்டு வரப்பட்ட அதிகப்படியான 8 லட்சம் ஏக்கராவைக் கணக்கில் சேர்த்துக்கொண்டாலும் அவை மூலம் 5 லட்சம் டன் அரிசிதான் உபரியாகக் கிடைத்திருக்கும். பாக்கியுள்ள உபரி அரிசிக்குக் காரணம் பசுந்தாள் உரம்தான்.

ஆக, சென்ற பத்தாண்டுகளில் பசுந்தாள் உரம் உபயோகிப்பதில் புது உற்சாகம் காணப்படுகிறது. ஆனால் நமது பண்ணைகளில் சென்ற நூற்றாண்டில் விளைந்த விளைச்சலை இப்போது காண வேண்டும் என்றால் இந்த உற்சாகம் போதாது!

ஒரிஸ்ஸா ராஜ்யத்தில் பசுந்தாள் உரம் பற்றிய அனுபவமே கிடையாது. அப்படிப்பட்ட ராஜ்யத்தில் என் யோசனையின்பேரில் மேற்குக் கோதாவரி ஜில்லாவிலிருந்து 1957ல் செஸ்பேனியா விதைகள் வாங்கி 4 அவுன்ஸ் பொட்டலங்களாகச் செய்து விவசாய மக்களுக்கு வாங்கிய விலைக்கே விற்கப்பட்டது. 1957ல் பத்தாயிரம் ஏக்கரா நிலத்தில் பசுந்தாள் உரம் போடப்பட்டது. 1962ல் அது நாற்பது லட்சம் ஏக்கராவுக்குப் பரவியுள்ளது: மூன்றாவது திட்டக் காலத்தில் எழுபது லட்ச ஏக்கராவுக்குப் பரவிவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஒரிஸ்ஸாவின் புன்செய் நிலங்களில் கொடிப்பூவரக விளைவிக்கப்படுகிறது. பசுந்தாள் உரம் உபயோகித்துக் கணிசமான பலனைக் காணலாம். இதை மற்ற ராஜ்யங்களும் பின்பற்றி நல்ல பயன் பெறலாம்.

தமிழகத்தின் நன்செய்க்கும் புன்செய்க்கும் பசுந்தாள் உரம் அவசியம். அதைத் தீவிரப்படுத்த வேண்டியதும் அவசியம். நீண்ட காலத் தேவைக்குச் சில அம்சங்களை நினைவில் கொள்ள வேண்டும். சென்னை ராஜ்யத்தில் பாசனத்துக்காக ஏரிகளிலும் குளங்களிலும் தண்ணீரைத் தேக்கி வைக்கும் வாய்ப்புக் குறைவு. கிணறுகளை நம்பித்தான் விவசாயம் செய்ய வேண்டும். ஆகவே எந்தப் போகத்தில் எதை விளைவிக்க வேண்டும் என்பதிலும், விவசாய வேலை செய்வோருக்கு ஆண்டு முழுதும் வேலை வாய்ப்பிருக்கச் செய்ய என்ன செய்ய வேண்டும் என்பதையும் பற்றிச் சிந்திக்க வேண்டும். சமீப காலத்தில் கிராமங்களுக்கு மின்சார வசதி அளித்ததன் காரணமாக மின்சாரப் பம்புகள் வைத்து நீர் இறைத்ததன் விளைவாகக் கிணறுகள் வறண்டுவிட்டதால் செல்வ வசதி உள்ளவர்கள் ஆழக் குழி தோண்டி நீர் இறைத்துக் கொள்கிறார்கள். இது சிறு விவசாயிகளைப் பாதிக்கும். அது மட்டுமின்றிக் குழாய்க் கிணறு எடுத்துத் தண்ணீர் இறைப்பதனால் லாபம் இல்லை என்று சொல்லும் அளவுக்குத் தண்ணீர் கீழே போய்விடக் கூடும்.

ஆகவே, பூமிக்கடியில் உள்ள தண்ணீரின் பரிமாணம் என்ன, சமீப காலத்தில் தீவிர

## ஏர்ப்பூட்டு விழா

முன் காலத்தில் விவசாயத்தைப் பெருக்கவும் விவசாயிகளுக்கு உற்சாகம் ஊட்டவும் மன்னர்கள் என்னவெல்லாம் செய்தார்கள் தெரியுமா?

கபிலவாஸ்து நகரிலிருந்து ஆட்சி செலுத்திய சுத்தோதன மன்னன், சித்தார்த்தன் சிறு குழந்தையாக இருந்தபோது அவனைச் செவிலித்தாயிடம் விட்டு விட்டு வயலில் இறங்கி உழவரோடு சேர்ந்து உழுதான் என்று பௌத்த நூல்களில் ஒன்றான ''பூஜாவலி'' கூறுகிறது.

மன்னர் ஏர் உழ ஆரம்பித்ததும் ஆயிரம் ஏர்கள் ஏக காலத்தில் நிலத்தை உழ ஆரம்பித்தனவாம்.

தமிழ் நாட்டில் ஏர் உழ ஆரம்பிக்கு முன் ஏருக்குப் பூஜை செய்வதுண்டு. அதற்கு மன்னர் அல்லது நிலத்தின் சொந்தக்காரர் வந்திருந்து உழவை ஆரம்பிப்பதுண்டு. ஜனக மகாராஜா பொன் ஏர் பிடித்து உழுதார் என்று நாம் படித்திருக்கிறோம்.

இலங்கையை ஆண்ட சிங்கள மன்னர்கள் ஏர்ப்பூட்டு விழாக்களில் கலந்து கொண்டார்கள் என்பதைக் குறிக்கும் சிங்கள நூல்கள் பல. ஏரிகளையும் அணைகளையும் அமைத்து விவசாயிகளைச் சிங்கள மன்னர்கள் ஊக்குவித்த விவரங்களை 'மகாவம்சத்'திலும் 'சத்தர்ம ரத்னாவளி' என்ற நூலிலும் காணலாம்.

இவ்வாறெல்லாம் இருந்த இந்நாட்டில் இன்று உற்பத்தி குறைய என்ன காரணம்? ஊக்கமின்மையையும், நிச்சயமற்ற நிலைமையையும் சமீபகாலச் சட்டங்களும், வறட்டுச் சித்தாந்த கெடுபிடிகளும் ஏற்படுத்தி விருப்பதுதான்.

— லலிதா நடராஜன்

மாக மின்சாரப் பம்ப் வைத்து இறைத்த தனால் பூமிக்கடியில் என்ன மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன என்பதைப் பற்றி ஆராய்ந்தால் பல புதிய பரிகாரங்கள் இந்த நீர்ப் பாசனப் பற்றாக்குறைப் பிரச்னைக்குக் கிடைக்கக்கூடும். அதே சமயம் பூமியில் உள்ள ஊற்றுக்கண்கள் வறண்டுவிடாமலிருக்கவும், அவற்றுக்கு மீண்டும் தண்ணீர் வழங்கவும் திட்டம் வகுக்கவேண்டும். ஏரிகளிலும், குளங்களிலும், கிணறுகள் வெட்டி மேல் பரப்பிலுள்ள தண்ணீரைப் பூமிக்கடியில் உள்ள ஊற்றுக் கால்வாய்களுக்கும் கண்களுக்கும் போகச் செய்வது ஒரு சிறந்த முறையாகும். இம் முறையை வேறு பல நாடுகளில் கடைப்பிடித்திருக்கிறார்கள். இந்தப் பெரிய திட்டத்தை மேற்கொள்ளு முன் கிணறுகள் வறண்டு விட்ட சில பிரதேசங்களைத் தேர்ந்தெடுத்துப் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். இன்னொரு முறையும் உண்டு. சிற்றாறுகளின் படுகையின் கீழே சிறு அணைகள் கட்டிப் பூமிக்கடியில் உள்ள ஊற்றுக்களில் நீர் இறங்கச் செய்வதும் ஒரு முறை யாகும்.

1947ம் ஆண்டில் நான் ஒவ்வொரு கிராமத்திலும் சீமைக் கருவேல் என்ற செடியை வளர்க்கச் செய்தேன். இச்செடி வேகமாக வளரக் கூடியது. முள்ளிருக்கும். அதன் மரம் உறுதியானது. மர வேலைகளுக்குப் பயன்படுத்தலாம். மற்றச் செடிகள் வளர முடியாத இடங்களில் இச்செடி நன்றாக வளர்கிறது. ராஜஸ்தானத்தில் நிழலுக்காகச் சாலையின் இருமருங்கிலும் வளர்த்தாற்போல் எங்கும் வளர்க்கலாம். ஆடு மாடுகள் தின்பதில்லை. இதன் முட்களும் தரையில் உதிர்வதில்லை. இதைக் கிராம ப்புறம்போக்கு நிலங்களிலும், ஏரிக் கரைகளிலும் வேலியாகவும் பயிர் செய்யலாம். வெட்ட வெட்ட நன்றாக வளர்கிறது. ஏழைகளுக்கு அடுப்பு எரிக்க நல்ல கட்டையாகவும் உதவுகிறது. அதனால் மாட்டுச் சாணத்தை எரித்துப் பாழாக்குவதற்குப் பதில் இந்தக் கட்டையை அடுப்பு எரிக்க உபயோகித்து, சாணத்தை உரமாக உபயோகிக்க உதவுகிறது. இதன் விதைகள் பறவைகள் மூலமாகப் பரவி, மலைப் பாங்கான பிரதேசங்களில் வளர்ந்து நிழல் தர ஏதுவாகிறது. 1950ம் ஆண்டில் ராமநாதபுரம் ஜில்லாவில் இச் செடியைப் பரப்புவதில் பள்ளிக்கூடச் சிறுவர்களும் சாரணர்களும் பெரிதும் உதவினார்கள். பெல்லாரி ஜில்லாவில் 20 அங்குல மழைதான் ஆண்டுக்குப் பெய்கிறது. அங்குள்ள வறண்ட மலைப்பிரதேசத்தில் இச் செடியின் விதைகளை 51-52ம் ஆண்டுகளில் தூவியதன் விளைவாக இப்பொழுது அம்மலைகள் நல்ல நிழல் தரும் மரங்கள் கொண்ட மலைகளாகக் காட்சியளிக்கின்றன. இப்படித் திட்டமிட்டு இச்செடியைப் பரப்பினால், மண்ணிலுள்ள மழை நீலம் வறண்டு போகாமல் தடுக்கலாம். கோடைக் காலத்தில் வறண்டு போகும் பல சிற்றாறுகளை வரள விடாமல் தடுக்கலாம்.

பசுந்தாள் உரத்தைப் புன்செயிலும் சரி, நன்செயிலும் சரி, இன்றியமையாதப் பயன் படுத்தினால் கூடப் போதும், உணவு உற்பத்தியைக் கணிசமாகப் பெருக்கலாம் என்பதைத் தமிழ்நாடு நிரூபித்துக் காட்டிவிட்டது. 1952ல் கையாண்ட முறைகளை இன்னும் தீவிரமாகக் கையாள வேண்டும். அப்போது தான் விவசாயியின் நிலை உயரும். விவசாயம் ஒரு லாபகரமான தொழில் என்ற உணர்வு ஏற்படும்.

## விவசாய சர்வ கலாசாலைகள்

இன்றைக்கு நூறு வருஷங்களுக்கு முன்னால் லிங்கன், அமெரிக்க ராஜ்யங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு விவசாயக் கல்லூரி ஏற்பட வழி வகுக்கும் சட்டத்தை இயற்றினார். இந்த நூறு வருஷ அநுபவத்துடன் அமெரிக்க பாணியில் நம் நாட்டிலும் முதன் முதலாக உத்தரப் பிரதேசத்தில் விவசாய சர்வ கலாசாலை நிறுவுவதில் ஒத்துழைக்க அமெரிக்க அரசாங்கம் முன்வந்தது. 16,000 ஏக்கர் விஸ்தீரணமுள்ள பண்ணையுடன் கூடிய இந்த உ. பி. விவசாய சர்வகலாசாலையில் விவசாய சம்பந்தப்பட்ட பல்வேறு துறைகளிலும் அறிவு புகட்டும் நான்கு கல்லூரிகள் உள்ளன. இன்னும் மூன்று கல்லூரிகள் உருவாகப்போகின்றன. மூன்று கோடி ரூபாய் அமெரிக்க உதவியுடன் நிர்மாணிக்கப்பட்டுள்ள இந்தச் சர்வ கலாசாலையின் சிறப்பு அம்சங்கள்: (1) புத்தகப் படிப்பும் உடலுழைப்பும் ஒன்று சேர நடைபெறுகின்றன. (2) மாணவர்கள் படிக்கும்போதே சம்பாதிக்கவும் செய்கிறார்கள். (3) சுற்று வட்டாரத்தில் ஒரு பிசூனைக் கூடக் காண முடியாது! டெலிபோன் ஆப்பரேட்டர், தபால் சேவகர், மாட்டுத் தொழுவங்களைச் சுத்திகரிப்பவர் எல்லோரும் மாணவர்களேதான். (4) ஆண்டின் இறுதியில் நடக்கும் ஒரே ஒரு பரீட்சை மட்டுமே மாணவனின் முன்னேற்றத்தை நிர்ணயிப்பதில்லை. (5) புத்திசாலியாக இருப்பவன் படிப்பைச் சீக்கிரம் முடித்துப் பட்டம் பெற்றுவிட வசதி இருக்கிறது. இத்தனை வருஷங்கள் படித்துத்தானாக வேண்டும் என்ற கட்டாயம் ஏதும் இல்லை!

இந்தச் சர்வகலாசாலையைத் தவிர, பஞ்சாப், ராஜஸ்தான், ஒரிஸ்ஸா ஆகிய ராஜ்யங்களிலும் ஏற்கனவே விவசாய சர்வ கலாசாலைகள் இயங்கி வருகின்றன. தென்னாட்டில் முதன் முதலாக ஆந்திர ராஜ்யத்தில் ராஜேந்திரநகரில் விவசாய சர்வகலாசாலை உருவாகப் போகிறது.

# இந்திய அரசாங்கம்

# புதிய பிரீமியம் பரிசுப் பத்திரங்கள் திட்டம்

## ரூ. 100/- மற்றும் ரூ. 5/- தொகை மதிப்புள்ள பத்திரங்கள் 1964 ஜனவரி 1-ந் தேதி முதல் விற்பனைக்குக் கிடைக்கும்

**வெளியீடு:** 1964-ம் வருடத்திய பிரீமியம் பரிசுப் பத்திரங்கள் 1964, ஜனவரி 1-ந் தேதி முதற்கொண்டு விற்பனை செய்யப்படும் இடங்களாவன.

(i) பம்பாய் (ஃபோர்ட் மற்றும் பைகுல்லா), கல்கத்தா, புதுடில்லி, சென்னை, பெங்களூர் மற்றும் நாகபுரியிலுள்ள ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியா அலுவலகங்கள்.

(ii) இந்தியாவிற்குள் உள்ள ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா மற்றும் அதன் துணை பாங்குகளின் எல்லாக் கிளைகள்:

(iii) ரிஸர்வ் பாங்க் ஆப் இந்தியா, ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா அல்லது அதன் துணை பாங்குகளினுல் ரொக்கக் கொடுக்கல்-வாங்கல் நிகழ்த்தப்படாத ஜம்மு-காஷ்மீர் ராஜ்யத்துடையதைத் தவிர்த்த மற்ற கஜானாக்களும் உப கஜானாக்களும்:

(iv) தலைமைத் தபால் அலுவலகங்கள் மற்றும் இலாகா பூர்வமான துணைத் தபால் அலுவலகங்கள்.

**பாரமும் தொகை மதிப்பும்:** இந்தப் பத்திரங்கள் ரூ. 100 மற்றும் ரூ. 5 ஆகிய இரண்டு தொகை மதிப்புகளில் வெளியிடப்படும்! இவை வைத்திருப்போர் பத்திரங்களின் (bearer bonds) உருவில் இருக்கும். இவற்றை வாங்குவதற்கு விண்ணப்பம் செய்வது எதுவும் தேவையில்லை.

**மீட்பு மதிப்பும், பரிசுகளும்:** விற்கப்பட்ட தேதியிலிருந்து ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு ரூ. 5/- மற்றும் ரூ. 100/- மதிப்புள்ள ஒவ்வொரு பத்திரத்துக்கும் முறையே 50 ந.பை. மற்றும் ரூ. 10 பிரீமியம் சேர்த்து இந்தப் பத்திரங்களுக்கான தொகை திருப்பிக் கொடுக்கப்படும். பிரீமியத்துடன் மட்டுமல்லாமல், ஒவ்வொரு பத்திரமும், 1965-ல் இந்திய அரசாங்கத்தினுல் அறிவிக்கப்படும் தேதிகளில் நடைபெறும் இரண்டு பரிசுக் குலுக்கல்களில் கலந்து கொள்வதற்கும் அருகதை உடையனவாகும்.

ஒவ்வொரு தொகை மதிப்பிலும் விற்கப்படும் பத்திரங்களின் ஒவ்வொரு ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள பத்திரங்களுக்கும், இரண்டு குலுக்கல்களில் ஒவ்வொன்றிலும், அடியில் குறிப்பிட்டுள்ளபடி பரிசுகள் வழங்கப்படும்:

**ரூ. 100/- தொகை மதிப்பு**

| | | | |
|---|---|---|---|
| 1 பரிசு | 50,000 கொண்டது | | ரூ. 50,000 |
| 2 பரிசுகள் ஒவ்வொன்றும் | ரூ. 25,000 வீதம் | | ரூ. 50,000 |
| 5 ,, | ,, | ரூ. 10,000 ,, | ரூ. 50,000 |
| 10 ,, | ,, | ரூ. 5,000 ,, | ரூ. 50,000 |
| 75 ,, | ,, | ரூ. 2,000 ,, | ரூ. 1,50,000 |
| 150 ,, | ,, | ரூ. 1,000 ,, | ரூ. 1,50,000 |
| **மொத்தம் 243 பரிசுகள்** | | | ரூ. 5,00,000 |

**ரூ. 5/- தொகை மதிப்பு**

| | | | |
|---|---|---|---|
| 1 பரிசு | ரூ. 15,000 கொண்டது | | ரூ. 15,000 |
| 2 பரிசுகள் ஒவ்வொன்றும் | ரூ. 10,000 வீதம் | | ரூ. 20,000 |
| 10 ,, | ,, | ரூ. 5,000 ,, | ரூ. 50,000 |
| 25 ,, | ,, | ரூ. 2,000 ,, | ரூ. 50,000 |
| 200 ,, | ,, | ரூ. 1,000 ,, | ரூ. 2,00,000 |
| 330 ,, | ,, | ரூ. 500 ,, | ரூ. 1,65,000 |
| **மொத்தம் 568 பரிசுகள்** | | | ரூ. 5,00,000 |

கோடி ரூபாய் முழுத் தொகைக்கு அதிகப்படியாக விற்பனை வசூல் இருக்குமானுல், பரிசுத் தொகை விகிதாசாரப்படி அதிகரிக்கப்படுவதுடன், அது தருந்த எண்ணிக்கையுள்ள அதிகப்படி பரிசுகளிலும் விநியோகிக்கப்படும். ஆக தொகையும் பரிசுகளின் எண்ணிக்கையும் வரையறுக்கப்படவில்லை. ஆனுல் பரிசுப் பத்திரங்களின் ஒவ்வொரு விற்பனை அதிகரிப்புக்கும் ஏற்றபடி அதிகரிக்கும்.

பரிசுக் குலுக்கல்கள் இந்திய அரசாங்கத்தின் மேற்பார்வையில் நடைபெறும். விற்பனையான பத்திரங்கள் மட்டுமே பரிசுகளுக்கு அருகதை உடையனவாகும். ஆயினும், எந்தப் பத்திரமும் ஒவ்வொரு குலுக்கலிலும் ஒரு பரிசுக்குமேல் பெற அருகதை உடையதாகாது. குலுக்கலில் விற்பனை யாகாத பத்திரம் ஒன்றுக்குப் பரிசு விழுமானுல், அந்த பரிசுக்குப் புது எண் ஒன்று குலுக்கி எடுக்கப்படும். அந்த எண்ணும் விற்பனையாகாத ஒரு பத்திரத்துடையதாகவே இருக்குமானுல், விற்பனையான பத்திரம் ஒன்று பரிசு பெறும் வரையில் இதே முறையே தொடர்ந்து நீடிக்கப்படும்.

**வெற்றி எண்கள் பிரசுரம்:** சம்பந்தப்பட்ட குலுக்கல் தேதிக்குப் பிறகு எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம், பரிசு பெற்ற பத்திரங்கள் குறித்த விவரங்கள் இந்தியா கெஜட்டிலும், பத்திரிகைகளிலும் பிரசுரிக்கப்படும்.

**வரி விலக்குச் சலுகை:** பரிசுத் தொகைக்கும், பத்திரங்களின்மீது கிடைக்கும் பிரீமியத்துக்கும் வருமான வரிச் சட்டம், 1961-ன்படி செலுத்த வேண்டிய வரி கிடையாது.

**பிற்சேர்க்கை ஷரத்துக்கள்:** இந்தப் பத்திரங்கள் 1964 டிசம்பர் 31-ந் தேதி வரையில் விற்கப்படும். ஆனுல், இந்த விற்பனை அரசாங்கத்தின் விருப்பப்படி முன்னதாகவே நிறுத்தப்படலாம்.

பரிசுகளுக்கான தொகை வழங்கப்படுவதற்கு கடைப்பிடிக்கப்படும் நடைமுறையுடன் கூடிய மேல் விவரங்களுக்கு 1963 டிசம்பர் 16-ந் தேதியிட்ட இந்திய அரசாங்க அறிக்கை நெ. 34 (1) NS/63-ஐக் காண்க. இதன் பிரதிகள் விற்பனை அலுவலகங்களில் காண்பதற்கு ஒட்டப்பட்டிருக்கும்.




கதிர்

ஆந்திர ராஜ்யத்தில் சென்ற ஆறு வருடங்களாக உலகத்திலேயே மிகப் பெரிய நாகார்ஜுன சாகர் அணையைக் கல்லால் கட்டுவதில் கல்யாண வீட்டு மும்முரம் காட்டி வருகிறார்கள். 122 கோடி ரூபாய் செலவில் நடந்து வரும் மாபெரும் திட்டமிது. அணைக்கட்டின் உயரம் 404 அடி! சென்னை எல். ஐ. ஸி. கட்டிடத்தைத் தூக்கிக் கொண்டு வந்து இதன் பக்கத்தில் நிறுத்தினால் அணையின் இடுப்பு அளவுக்குத் தான் அதன் உயரம் எட்டும். அணைக் கட்டிடத்தின் அகலமோ 287 அடி! இவை மட்டுமா அதிசயம்? 276 மைல் நீளத்துக்கு உலகத்திலேயே மிகப் பெரிய கால்வாய் ஒன்றும் இங்கிருந்து தெற்கே நெல்லூர் வரை வெட்டிக்கொண்டு போகிறார்கள். இன்னொரு கால்வாயும் 140 மைல் நீளத்துக்கு வெட்டிக் கொண்டு போகிறார்கள். இந்த ஆச்சரியங்களுக்கெல்லாம் மேலாக வேறொரு ஆச்சரியமான சாதனையும் இங்கு நடந்தேறி வருகிறது.

இன்றைக்குச் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இந்த நாகார்ஜுன சாகர் மலைப் பள்ளத்தாக்கில் கிருஷ்ணா நதிக் கரையில் 'விஜயபுரி' என்று பெயர் கொண்ட பெரிய பட்டினம் ஒன்று இருந்திருக்கிறது. இந்த விஜயபுரியைத் தலைநகராகக் கொண்டு இக்ஷ்வாகு வம்சத்தைச் சேர்ந்த 'முதலாவது சந்தமூலன்' என்ற பேரரசன் இங்கிருந்து வட இந்தியா முழுமையும் ஆட்சி செய்து வந்தான். அசோக சக்கரவர்த்திக்குப் பிறகு தோன்றிய அரசன் இவன்.

கிருஷ்ணா நதி வழியாக, கிழக்கே ஜப்பான் நாடு வரையிலும், மேற்கே ரோமாபுரி வரையிலும் இந்த விஜயபுரி நகரம் வெளி நாடுகளுடன் வாணிபத் தொடர்பும், ஆன்மிகத் தொடர்பும் கொண்டு வளமாக வாழ்ந்து வந்திருக்கிறது. புத்த மதத்தைப் பரவச் செய்வதில் விஜயபுரி அரசன் அளித்து வந்த ஆதரவு காரணமாக வட இந்தியாவில் உள்ள சாரநாத் எப்படி விளங்கி வருகிறதோ, அவ்வாறு விஜயபுரியும் அந்நாளில் விளங்கி வந்ததென்றால் மிகையாகாது. பிறகு மாற்று அரசர்களின் தாக்குதலுக்கு இலக்காகிச் சந்தமூலனின் சாம்ராஜ்யமும் இந்த விஜயபுரி நகரமும் சீர்குலைந்து மண் மூடிப் போய் விட்டன. ஆயிரத்தைந்நூறு ஆண்டு காலம் இப்படி மண்ணில் புதைந்து கிடந்த இந்த நகரத்தை நாற்பது வருடங்களுக்கு முன்னால் தற்செயலாய்க் கண்டுபிடித்தார்கள். அதிலிருந்து மேலே மூடியிருந்த மண்ணைத் தோண்டி, உள்ளேயிருந்து பலப் பல அருமையான பொருள்களை வெளியே எடுத்தார்கள். இடிந்து கிடந்த கோட்டைச் சுவர்க் கட்டிடங்கள், கோவில்கள், மடங்கள், கல்விச்சாலை இம்மாதிரிக் கட்டிடங்களில் கூடுமானவற்றை அங்கேயே எல்லோரும் வந்து பார்க்கும்படி விட்டு வைத்திருந்தார்கள். அந்தப் பள்ளத்தாக்கில் ஒரு பொருட்காட்சி சாலையும் கட்டி அதில், விலைமதிப்பற்ற கலைச் செல்வங்களையும் வைத்திருக்கிறார்கள். இப்போது அணை கட்டுவதால் அந்தப் பள்ளத்தாக்கு முழுமையும் மூழ்கி விடும். மண்ணிலிருந்து வெளிப்பட்ட விஜயபுரி நகர் மறுபடியும் தண்ணீரில் அமிழ்ந்துவிடும். ஆகவே மலைமீது அவற்றையெல்லாம் ஒரு பத்திரமான பெரிய கட்டிடத்துக்கு அப்புறப்படுத்தி வருகிறார்கள்.

ஹைதராபாத் நகரிலிருந்து சரியாக 90 மைல் தூரத்திலிருக்கிறது இந்த நாகார்ஜுன சாகர். பஸ்கள் மூலமாகவே போக வேண்டும். ரயில் பாதை கிடையாது. சென்னையிலிருந்து வருபவர்கள் விஜயவாடாவிலிருந்து ஜக்கய்ய பேட்டை வழியாக 161 மைல் தூரம் சாலை வழியாகவும் வரலாம். அல்லது ரயில் மூலமாக விஜயவாடாவிலிருந்து நூறு மைல் தொலைவிலுள்ள மாசேர்லா ஸ்டேஷனில் இறங்கி, அங்கிருந்து பதினைந்து மைல் தூரத்திலுள்ள இந்த அணைக் கட்டுக்கு வந்து சேரலாம்.

ஹைதராபாத்திலிருந்து நலகொண்டா ஜில்லா வழியாகவே செல்ல வேண்டும். நலகொண்டா ஜில்லாவில் மிரியாலகூடாத் தாலுகாவில், நந்திகொண்டா என்ற கிராமத்து மலைச்சாரலில்தான் இந்த நாகார்ஜுன சாகர் உருவாகி வருகிறது. கிருஷ்ணா நதி பெருக்கெடுத்து ஓடியும் இந்த நலகொண்டா ஜில்லா வளமில்லாமல் விளங்கி வந்து கொண்டிருந்தது. அந்த நிலைமை இந்த அணையிலிருந்து வெட்டப்படும் கால்வாய் மூலமாக மாற விருக்கிறது.



பிரம்மாண்டமான அணைக்கட்டு வேலை நடக்கிறது.

நலகொண்டா பகுதியில் பிரயாணம் செய்யும்போது கரடு முரடான கற்பாறைகளும், வறண்ட நிலப்பரப்பும்தான் வழி நெடுகிலும் காணக் கூடிய காட்சிகள். இடையே பல மைல்களுக்கு வெறும் பொட்டல் வெளியும், குன்றுகளுமாக மனித சஞ்சாரமற்று 'ஓ'வென்றிருக்கிறது. 'நாகார்ஜுனசாகர் இன்னும் பதினைந்து மைல்' என்ற கல்லைக் கடந்து செல்லும்போது எதிரே அடிவானத்துக்கு முன்னால் இடது கோடியிலிருந்து வலது கோடி வரையில் நீல நிறத்தில் அடுக்கு அடுக்காகச் சுவர்கள் எழுப்பியது போல் மலை வரிசைகள் தென்படுகின்றன. இந்த மலை அடுக்குகளின் வழியாகத்தான் கிருஷ்ணா நதி ஓடுகிறது. நதி ஓடும் பகுதிக்குப் 'புலிப் பள்ளத்தாக்கு' என்று பெயர். மலைக் கூட்டங்களின் முதுகுப் பகுதி புலி படுத்திருப்பது போலவும், தலை நிமிர்ந்து பஸ்களில் வருவோரைப் பார்ப்பது போலவும் தோற்றமளிப்பதால் ஒருவேளை இந்தப் பெயர் அதற்கு ஏற்பட்டதோ என்று நினைத்தேன். அப்படி அல்லவாம். உண்மையாகவே இந்தப் பள்ளத்தாக்கில் வேங்கைப் புலிகள் நிறைய நடமாடி வந்தனவாம். இப்பொழுது அந்தப் புலிகள் யாவும் அணை கட்டுவதில் ஈடுபட்டிருக்கும் 'டிராக்டர்கள், புல்டோசர்கள், எர்த் மூவர்கள்' இவற்றை யெல்லாம் பார்த்துவிட்டு, அல்லது இவற்றின் கிடுகிடு சத்தத்தைக் கேட்டுவிட்டு அங்கிருந்து ஓடிப் போய்விட்டதாகக் கூறுகிறார்கள். சூரப்புலிகள்தான்!

அணைக்கட்டு நெருங்க, நெருங்க, வழியில் இருபுறமும் குன்றுகளையும் பாறைகளையும் உடைத்துக் குவியல் குவியல்களாகப் போட்டிருக்கிறார்கள். இந்தக் கருங்கல் குவியலை யெல்லாம் டிராக்டர்கள் மூலமாகவும், குட்டையான சக்கரங்கள் கொண்ட கட்டை வண்டிகள் மூலமாகவும் அணை கட்டும் இடத்துக்குக் கொண்டு போகிறார்கள். சில இடங்களில் தரையில் இரு கறுப்புக் கோடுகள் கிழித்தது போல் மெல்லிய இருப்புப் பாதைகள் செல்கின்றன. இவற்றில், சில குளிக்கும் தொட்டிகளைப் போன்று காட்சி தரும் வாகன்களில் இந்தக் கற்களை எடுத்துப் போட்டுத் தள்ளிக் கொண்டு செல்கிறார்கள். இந்தக் காட்சிகள் மறைவதற்குள் எதிரில் ஒரு பெரிய மேடு; அதை அடைந்ததும் அழகு அழகான கட்டிடங்கள்! பஸ் ஸ்டாண்டும், வீடுகளும் நிறைந்த அங்கு நமது பக்கங்களிலுள்ள உயர்தரப் பள்ளிக்கூடக் கட்டிடத்தைப்போன்ற கட்டிடம் ஒன்று இருக்கிறது. அதன் முன்னால் பூஞ்செடிகளும், பாக்கு மரங்களும் வளர்ந்திருக்கின்றன. இதுதான் 'பிராஜக்ட் ஹவுஸ்' என்ற பெயர்கொண்ட யாத்திரிகர்கள் விடுதி. ஐம்பது அறைகள் இருக்கின்றன.

இந்தப் 'பிராஜக்ட் ஹவுஸ்' விடுதியிலிருந்து அணைக்கட்டுக்கும் அதற்கு அப்பால் உள்ள குடியிருப்புப் பகுதிகளுக்கும் பஸ்கள் போய் வந்த வண்ணமாயிருக்கின்றன... பிராஜக்ட் ஹவுஸிலிருந்து, அணை கட்டுமிடம் நான்கு மைல் தூரத்தில் இருக்கிறது. இந்த நான்கு மைல் தூரமும் மலையிலிருந்து இறங்குவதும், மறுபடியும் ஏறுவதுமாகச் சாலை அமைந்திருக்கிறது. சில இடங்களில் மலை மீது பாரம் ஏற்றிய வண்டிகளும் ஏற வேண்டுமாதலால் சாலைகளை மலையின் பக்கவாட்டத்தில் வளைந்து வளைந்து செல்லும்படி அமைத்திருக்கிறார்கள். வழியில் நூற்றுக்கணக்கில் கல்லால் கட்டப்பட்ட நல்ல வீடுகளின் வரிசைகள். இவை யெல்லாம் அணைத் திட்ட அதிகாரிகளின் வீடுகள். இவற்றைக் கடந்து செல்லும் போது, 'பைலான்' என்ற ஊர் வருகிறது. ஊர் பெரிய ஊர்தான். கடைத் தெருவும், காப்பி ஹோட்டல்களும் ஜன நடமாட்டமும், வண்டிகளின் நடமாட்டமும் மிகுந்து ஒரே பரபரப்பாக விளங்குகிறது. இந்தப் பகுதி ஊர் முழுவதும் ஆயிரக்கணக்கில் தொழிலாளர்களின் வீடுகளும், குடியிருப்புக்களும் நிறைந்திருக்கின்றன.

1955ம் ஆண்டு, டிசம்பர் மாதம் 10ந் தேதி இந்த மகத்தான நாகார்ஜுன சாகர் திட்டத்தைப் பாரதப் பிரதமர் நேரு ஆரம்பித்து வைத்தார். ஆரம்ப விழாவின் அறிகுறியாக, சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த பெரிய கல் தூண் ஒன்று இங்கு நாட்டப்பட்டிருக்கிறது. 'பைலான்' என்றால் கம்பம் என்று பொருள். இதனாலேயே, இந்தப் பகுதியிலுள்ள 'காலனி'க்கும் இந்தப் பெயர் நிலைத்து விட்டது.

பைலானிலிருந்து அணைக்கட்டுக்கு மீண்டும் ஒரு மைல் தூரம் செல்ல வேண்டும். போகும்போதே வழியில் பெரிய பெரிய தொழிற் பட்டறைகளையும், வாகனங்களைப் பழுது பார்க்கும் தொழிற்கூடங்களையும், தளவாடக் கிடங்குகளையும் காணலாம். ஒரு பெரிய மேடு ஏறியதும் அங்கு ஓரிடத்தில்



மலையைக் குடைந்து செல்கிறது இடது கால்வாய்.

"அணையைப் பார்க்கும் இடம்" என்று எழுதிய பலகையைத் தாங்கிய தாழ்வான கட்டடம் தென்படுகிறது. இது ஐந்நூறு அடி உயரத்திலுள்ள கட்டடம். அதன் தாழ்வாரத்தை அடைந்து கீழே அணை கட்டப்படும் காட்சியைக் கண்டதும் ஒரு கண நேரம் திக்பிரமை பிடித்தது போன்ற நிலைமை ஏற்பட்டுப் பேச்சு மூச்சே நின்று விடும்.

பிறகு பளிச்சென்று திருவிழா நினைவுஎழும்; ஆமாம், சந்தேகமேயில்லை. கீழேயிருந்து ஆகாயத்தை நோக்கி வளர்ந்து வரும் அணைச் சுவரை எழுப்புவதில் 'ஜே ஜே' என்று நாற்பதினாயிரம் பேர் ஈடுபட்டிருக்கிறார்கள்! ஒரே சமயத்தில் இவ்வளவு ஆயிரம் மக்கள் ஒரே செயலில் ஈடுபடும் காட்சியைப் பிரம்மாண்டமான தேர்த் திருவிழாவுடன்தான் ஒப்பிட வேண்டும்! இந்தத் திருவிழா எதற்காக? காடு மலைகள் என்று பாராமல் காளைப் பருவ வேகத்துடன் ஓடி வரும் கிருஷ்ணாவை அணைத்துக் கட்டிப் போடத்தான்.

அணையின் நீளம் மூன்று மைல்களாகும். இந்த மூன்று மைல் நீளமும் நானூறு அடி உயரம் வரை சுவர் எழுப்புவதென்றால் அதற்கேற்ற சாரங்கள் எப்படிப் போட்டிருக்க வேண்டும் என்பதையும் கவனித்துக் கொள்ளலாம். பலமான தேக்கு, சவுக்கு, மூங்கில்களால் புறாக் கூண்டுகளைப் போல் தோற்றமளிக்கும் சாரங்கள் எழுப்பியிருக்கிறார்கள். அதில் எறும்புச்சாரிகள் செல்வது போல், கீழேயிருந்து கட்டடப் பொருட்களைத் தட்டுக்களில் சுமந்து, குறுக்கும் நெடுக்கும் படிகளிலே ஏறும் மக்கள் வரிசையைப் பார்க்கிறோம். அணைக்கட்டுக்கு மேலே, தென்னை மர உயரத்துக்குச் சிவப்பு நிறத்தில் ஐந்து பெரும் கிரேன்கள். ஒவ்வொன்றும் தன்னுடைய நீண்ட துதிக்கையை நீட்டிக் கீழேயிருந்து சங்கிலியில் பிணைத்து வரும் ராக்ஷஸ வடிவத்து இரும்பு அண்டாக்களை மேலே கபகபவென்று தூக்கி, இடது புறமும், வலதுபுறமும் துதிக்கைகளைத் திருப்பி, அண்டாக்களிலுள்ள கருங்கல் துண்டுகளையும், சிமெண்டுக் கலவைகளையும் ஜாக்கிரதையாக இறக்குகின்றன. பிறகு அவை கவிழ்க்கப்பட்டதும், அந்தப் பெரும் இரும்புப் பாத்திரத்தைப் பாதாளத்துக்குச் செல்லும் இருப்புப் பாதையில் வைக்கின்றன. அங்கிருந்து சக்கரம் பூட்டிய உருளைகள் மூலமாக அந்த அண்டாக்கள் சிமெண்டுக் கலவை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைக்கு விரைகின்றன. அல்லது கற்கள் குவிந்துள்ள இடத்தை நோக்கி விரைகின்றன.

ஒரு நாள் ஒன்றுக்கு ஐந்நூறு டன் சிமெண்டு இந்தப் பெரும் பணியில் செலவாகி வருகிறதென்றால், அணை வேலையின் அசுர சாதனையை ஒருவாறு கவனித்துக் கொள்ளலாம். இவ்வளவு சிமெண்டும், பதின்மூன்று மைல் தூரத்திலுள்ள மாசேர்லா என்ற ஊரிலுள்ள சிமெண்டுத் தொழிற்சாலையிலிருந்து தினந்தோறும் ரயில் பாதை மூலமாக வாகன்களில் வந்து கொண்டிருக்கின்றன. அந்தத் தொழிற்சாலையில் தினமும் உற்பத்தியாகும் சிமெண்டின் அளவும் ஐந்நூறு டன்தான். அவ்வளவும் அன்றாடம் இங்கு வந்து விடுகின்றன.

அணைக்கட்டுக்கு நேர் எதிரில் கிருஷ்ணா நதிக்கு நாற்பது லட்சம் ரூபாய் செலவில் முரட்டுப் பாலம் கட்டியிருக்கிறார்கள். அணையில் மத்திய பாகத்தில் நீர்வீழ்ச்சியைப் போல் நூறு அடி அகலத்தில் நதித் தண்ணீர் கீழே பிரவாகமாக வீழ்கிறது. இந்தத் தண்ணீரின் திவலைகள் பாலத்தில் பனி பெய்வது போல் காட்சி தருகின்றன.

இந்தப் பாலத்தைக் கட்டியதிலிருந்து ஆந்திர ராஜ்யத்தின் போக்குவரத்துச் சரித்திரத்திலேயே ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டு விட்டதென்று கூற வேண்டும். இவ்வளவு காலமாக நதியின் இக்கரைக்கும் அக்கரைக்கும் போக்குவரத்து வசதி கிடையாது. இக்கரையிலிருந்து எதிர்க் கரைக்குப் போக வேண்டுமானால், நூறு மைல் தூரம் விஜயவாடாவுக்கு வந்து அங்கிருந்து எதிர்க் கரையைக் கடந்து திரும்பி வர வேண்டும். இப்படித்தான், கர்நூல், குண்டூர் முதலிய பகுதிகளிலுள்ள மக்களும் இந்நாள் வரை தவித்து வந்தார்கள். இப்போது இந்தப் பாலம் கட்டியதன் மூலமாகத் தலையைச் சுற்றி மூக்கைத் தொட வேண்டிய அவதி நீங்கி விட்டது. குண்டூர், கர்நூல் இந்த நகரங்கள் ஹைதராபாத்துக்கு முன்னைவிட இந்தப் பாலத்தின் மூலமாகச் சுமார் அறுபது மைல் தூரம் நெருங்கி வந்திருக்கின்றன.

அணைக்கட்டின் மேல் தளத்தில் ஆயிரம் ஆயிரம் கரங்கள், கருங்கல் துண்டுகளைப் பரப்பி இடையே சிமென்டு கலவைகளைப் பதித்துக் கட்டிக் கொண்டிருக்கும் காட்சி விவரிக்க வொண்ணாததாகும்.

கருங்கல் துண்டுகளெல்லாம், ஒன்று போல் இருப்பதில்லை. கோணல் மாணலாக இருக்கும். இவற்றை இசை பார்த்துப் பொருத்துவதற்குக் கோயமுத்தூர், திருச்சி முதலிய நம் தமிழகப் பகுதியிலிருந்து ஆயிரக்கணக்கான அனுபவம் மிக்க கொத்தனார்களை இங்கு அழைத்து வந்திருக்கிறார்கள். ஆந்திரக் கொத்தனார்களுடன் அவர்களும் இந்தப் பெரிய பணியில் ஈடுபட்டு வருகிறார்கள்.



திவான்பகதூர் ஸ்ரீ எல். வேங்கடகிருஷ்ணய்யர்

இந்த மூன்று மைல் நீளமுள்ள அணையில் கற்களால் கட்டப்படும் பகுதி மட்டும் முக்கால் மைல் நீளமாகும். உயரமோ 404 அடி. இந்தக் கட்டடப் பகுதியில் மின்சாரத்தால் இயங்கித் திறந்து மூடக் கூடிய பன்னிரண்டு கதவுகள் அமைக்கப் போகிறார்கள். இவை தவிர பதினைறு அடி குறுக்களவு கொண்ட எட்டு பெரிய தண்ணீர்க் குழாய்களை அணை உச்சியிலிருந்து கீழே கொண்டு வந்து 4,00,000 கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்யத் தொழிற்சாலை அமைத்து வருகிறார்கள். இந்த நான்கு லட்சம் கி. வா. மின்சாரமும் பெரும்பாலும் தொழில் வளம் பெருகப் பயன்படவிருக்கிறது.

அணையின் வேலை 1955லேயே தொடங்கி வைக்கப்பட்டாலும், 1957 லிருந்துதான் மும்முரமாக நடந்து வருகிறது. இந்த ஏழு ஆண்டுகளில் அணைக்கட்டுப் பணியில் மூன்றில் இரண்டு பகுதி முடிந்திருக்கிறது. 250 அடி உயரத்துக்குக் கட்டிவிட்டார்கள். இன்னும் 150 அடி உயரம் கட்ட வேண்டும். இவையெல்லாம் அடுத்த மூன்று ஆண்டுகளுக்குள் முடிந்து விடும்.

நாகார்ஜுனசாகர் திட்டத்துக்காக ஒதுக்கியுள்ள 122 கோடி ரூபாயில் அணைக்கட்டுக்காகப் பாதி அளவுகூடச் செலவாகாது. 40 கோடிதான் செலவாகப் போகிறது. பக்ரா நங்கல் அணையைவிடத் தண்ணீரை ஏற்கும் அளவில் இது இந்தியாவிலேயே பெரிது! எனினும் நாற்பது கோடிதான் செலவாகிறதென்றால், மீதி 82 கோடி ரூபாயும் இரண்டு பெரிய கால்வாய்களை இந்த அணைத் தேக்கத்திலிருந்து வெட்டிக் கொண்டு போவதற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு கால்வாய்களில் அணைக்கட்டின் வலது பக்கம் வழியாக வெட்டிச் செல்லப்படுவதுதான் — மிகவும் நீளமான கால்வாய். இதற்குச் சுமார் ரூ. 62 கோடி செலவாகும். இடதுபுறமாக வெட்டிக் கொண்டு செல்லும் கால்வாய்க்கு ரூ. 20 கோடி ஒதுக்கி, வேலைகள் நடைபெற்று வருகின்றன. எனவே, இந்த அணைக்கட்டைவிடப் பெரிய விஷயம் இந்தக் கால்வாய்கள் என்று கூறலாம்:

இந்த அணைக்கட்டின் பிரதான இலட்சியமே இந்தக் கால்வாய்கள் கொண்டு வருவதுதான் என்றாலும் மிகையாகாது. பல இடங்களில் இக்கால்வாய்களைக் கொண்டு செல்வதற்காக மலையைக் குடைந்திருக்கிறார்கள்; மலைகளை வெட்டி விருக்கிறார்கள். நூற்றுக் கணக்கிலும் ஆயிரக் கணக்கிலும் பெரிய மதகுகளும், சிறிய மதகுகளும் கட்டி வருகிறார்கள்.

இந்த அமோகமான புள்ளி விவரங்களில் அதிகம் மூழ்கி விடாமல், கீழே இறங்கி எதிர்க் கரை சென்று அங்கிருந்து புறப்படும் வலது கால்வாயையும், எதிர்க் கரையில் உள்ள பெரிய காலனிகள், கடைத் தெருக்கள், காரியாலயங்கள், பஸ் ஸ்டாண்டு இவற்றையும் பார்த்து விட்டால் மட்டும் போதாது. இரவு நேரத்தில் அந்த அணைப் பிரதேசம் முழுமையும் மேட்டில் நின்று பார்த்தேயாக வேண்டும். அப்படிப் பார்த்தோமானால் வானத்து நட்சத்திர மண்டலம் முழுதும் கீழே தரைக்கு இறங்கி வந்துவிட்டதோ என்று நினைக்கும்படி கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் நாகார்ஜுன சாகர் 'டவுன் ஷிப்' காலனிகளின் மின்விளக்குகள் காட்சி தருகின்றன.

அணைச் சுவருக்குக் குறுக்கே உட்புறம் இடது கோடியிலிருந்து வலது கோடி வரையில் தாராளமாக நடந்து செல்லும்படி இரண்டு சுரங்கப் பாதைகள் குகை வடிவத்தில் அமைத்திருக்கிறார்கள். பாலத்தைக் கடந்துதான் அக்கரையை அடைய வேண்டுமென்ற அவசியமில்லாமல் இந்தச் சுரங்கத்தின் வழியாக முக்கால் மைல் நீளத்துக்கு நடந்து அணையின் அந்தப் பக்கத்துக்கு ஒரு சிறு இரும்புக் கதவைத் திறந்து கொண்டு வந்துவிடலாம். இதனுள் மின்சார விளக்குகளும், சுத்தமான காற்று உள்ளே வருவதற்கு விசிறிகளும் அமைத்திருக்கிறார்கள். அடியில் உள்ள சுரங்கத்துக்கு மேலே முப்பது அடி உயரத்தில் மற்றொரு சுரங்கம் இருக்கிறது. படிகள் ஏறி அதற்கும் போகலாம். இதில் நடந்து செல்லும்போது நமக்கு

# மற்றுமொரு
# ராலீஸ் தயாரிப்பு!



# ராலீஸ் 16
# எக்ஸாஸ்ட் விசிறி

வீடு, வர்த்தக ஸ்தலம் எங்கும் உபயோகிக்க ஏற்றது.

இரண்டு-வருட உத்தரவாதத்துடன் கூடியது.

**தயாரிப்பில் ராலீஸ் காட்டும் சிரத்தை உங்களுக்கு மேலும் சிறந்த விசிறியைத் தருகிறது!**

**இந்தியாவில் தயாரிப்பாளர்கள்: ராலீஃபான் லிமிடெட், முலுண்ட், பம்பாய்-80**

BI-RFN-61

சென்னை, கேரளா மற்றும் தென் மைசூருக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்: மெஸர்ஸ் மகமத் இப்ராஹிம் & கோ., பிரைவேட் லிமிடெட், 7/8, மவுண்ட் ரோடு, சென்னை-2 — 113-H, பிரிகேட் ரோடு, பெங்களூர்

மேல் கிருஷ்ணா நதியின் வெள்ளம் பாய்ந்தோடும் முழக்கம் நன்றாகக் கேட்கிறது. இந்த அமைப்பின் மூலமாகத் 'தலைக்கு மேல் வெள்ளம் சாண் போனாலென்ன, முழம் போனாலென்ன' என்ற பழமொழி பொய்த்தது போலாகி விட்டது.

நாற்பது ஆண்டுகளுக்கு முன் "ஸ்ரீ கரபுராஜா வேங்கடராமய்யா" என்று பெயர் கொண்ட பள்ளிக்கூட உபாத்தியாயர் ஒருவர் மாசேர்லா என்ற ஊரிலிருந்து ஒற்றையடிப் பாதையில் வந்து கொண்டிருந்தார். அவருடைய பார்வை தற்செயலாக ஒரு முட்புதர் பக்கம் மண்ணிலிருந்து தலையை நீட்டிக் கொண்டிருந்த பெரிய செங்கல் மீது சென்றது. அங்கு சென்று தமது கையிலிருந்த கொண்டைக் கழியால் அந்தச் செங்கல் பக்கம் தட்டினார். மேலே உள்ள மண் முண்டம் விலகி இன்னும் சில செங்கற்கள் தென்பட்டன. குனிந்து நன்றாக அவற்றைச் சுற்றிப் பார்த்து மண்ணைக் கிளறியதும் வெள்ளை நிறக் கல்லாலான சிற்பங்கள் சில எட்டிப் பார்ப்பதைக் கவனித்தார். உடனே விழுந்தடித்துக்கொண்டு விரைந்து சென்று இந்தச் செய்தியை அருகிலுள்ள கிராம அதிகாரிகளிடம் போய்ச் சொன்னார். அவர்கள் கடப்பாறைகளுடன் வந்து மண்ணை நெம்பியதும் உள்ளே ஏதேதோ பெரிய கட்டடங்கள் அமிழ்ந்திருப்பதை உணர்ந்தனர். இந்தச் செய்தி பிறகு மேலே மேலே அதிகார வட்டத்தில் பரவிற்று.

இதே சமயத்தில் இந்தியப் புதைபொருள் ஆராய்ச்சி நிபுணர்கள், மறைந்த விஜயபுரி பட்டினத்தைக் கிருஷ்ணா நதிக் கரையில் அங்கங்கே எவ்வளவு தேடியும் காணாமல் இன்னும் எங்கே தேடலாம், யாரைக் கேட்கலாம் என்று சிந்தித்தவாறு இருந்து வந்தார்கள். அவர்கள் செவிகளில் "கரபுராஜா வேங்கட்ராமய்யா என்ற பள்ளிக்கூட உபாத்தியாயர் மாசேர்லாவுக்கு அருகே, கிருஷ்ண நதிக் கரை ஓரமாகக் காட்டில் சில புராதன காலக் கட்டிடங்களின் சின்னங்களைப் பார்த்திருக்கிறாராம்" என்ற வார்த்தைகளை அரசாங்கம் கூறியதுதான் தாமதம் "அதுதான் விஜயபுரி! கரபுராஜா! அப்படிச் சொல்லடா ராஜா!" என்று குதித்தோடி வந்து கூடாரம் அடித்து மண்ணை வெட்டும் வேலையை ஆரம்பித்துவிடச் சொன்னார்கள். இப்படி நாகார்ஜுன கொண்டாவுக்குக் கூடாரங்களுடன் வந்து சேர்ந்தனர் திரு ஏ. எச். லாங்ஹர்ஸ்ட், ஜனாப் ஹமீது குராயிஷி, திரு டி. என். ராமச்சந்திரன் ஆகிய மூன்று தொல்கலை ஆராய்ச்சி நிபுணர்களும். ஏறத்தாழ 2,750 ஏகரா அளவுக்கு மண்ணைத் தோண்டச் சொன்னார்கள். இப்படிச் சுமார் இருபத்தைந்து ஆண்டுகளாக ஆராய்ந்து புதையுண்டு கிடந்த விஜயபுரிப் பட்டணத்தை வெளிப்படுத்தினார்கள்.

புதைந்த விஜயபுரி சாம்ராஜ்யச் சின்னங்களை நாகார்ஜுன மலை மீது இப்போது பெரிய அளவில் புதிதாகக் கட்டியிருக்கும் விசாலமான மியூஸியக் கட்டடத்துக்கு எடுத்துக் கொண்டு போய் வைத்துவிடப்போகிறார்கள். இந்தக் கட்டிடம் மிக நல்ல முறையில் அருகுள்ள இயற்கைச் சூழ்நிலைக்குத் தக்க தோற்றம் அளிக்கும் விதத்தில் கலா மண்டபம் போல் கட்டப்பட்டிருக்கிறது. இதற்கு அருகிலேயே பழங்காலத்துப் படித்துறையையும் அப்படியே பெயர்த்துக் கொண்டு வந்து பதித்திருக்கிறார்கள். ஐம்பதடி ஆழத்துக்கு, இருநூற்றைம்பதடி உயரத்துக்கு அமைந்திருக்கும் இந்தப் புராதனப் படித்துறையானது படகுத் துறையாகவும் விளங்கி வந்திருக்கிறது. மலைமீது படித்துறையைக் கொண்டு வந்தது போலவே கிருஷ்ணா நதியையும் மலை மீது படித்துறை முகட்டுக்குக் கொண்டுவரப் போகிறார்கள். ஆமாம், அணை கட்டி முடிந்ததும் கிருஷ்ணா நதியும் மலை உச்சிவரை வந்துவிடும்.

சென்னை அரசாங்க முத்திரையில் கோபுர வடிவம் இடம் பெற்றிருப்பதுபோல் ஆந்திர அரசாங்க முத்திரையில் இந்த விஜயபுரி சாம்ராஜ்யத்தின் கலச வடிவம் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

விஜயபுரி மன்னரின் அமைச்சராக விளங்கிய ஆசாரிய நாகார்ஜுனர் வசித்து வந்த இடத்தில் அவரது நினைவாக உருவாகிவரும் இந்த மாபெரும் அணையைக் கட்டுவதன் விளைவாகப் பதினெட்டுக் கிராமங்கள் தண்ணீரில் மூழ்கப் போகின்றன. இதனால் இரண்டாயிரத்து ஐந்நூறு குடும்பங்கள் பாதிக்கப்படுகின்றன. இவர்களுக்கெல்லாம் புனர் வாழ்வளிக்கும் பொறுப்பை ஒரு தனிக் காரியாலயத்தின் வசம் ஒப்புவித்திருக்கிறார்கள்.

இந்த அணைத் திட்டத்தின் தலைமை நிருவாகக் காரியாலயம் ஹைதராபாத் நகரில் இருக்கிறது. நிருவாக இஞ்ஜினீராகப் பணியாற்றுகிறார் திரு ஆர். வி. ராவ் என்னும் பிரபல இஞ்ஜினீயர். இதன் பொறுப்பு முழுதும் ஒரு 'போர்டு' வசம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. 'போர்டு' தலைவர், பாரத நாட்டின் புகழ் பெற்ற இஞ்ஜினீயர்களில் ஒருவராகிய திரு எல். வேங்கடகிருஷ்ணய்யர் அவர்களாகும். தஞ்சை ஜில்லாவில் கணபதி அக்கிரகாரத்தில் பிறந்து குடந்தையிலும், சென்னையிலும் உயர் கல்வி பெற்று மேட்டூர் அணைத் திட்டத்தில் பொறுப்பாற்றி, பூண்டி நீர்த் தேக்கத் திட்டத்தை நிறைவேற்றியவர். ஒரிஸ்ஸாவின் புதிய தலைநகர் அமைப்புத் திட்டம் வகுத்துத் தந்தவர். ஆந்திரத்தில் நீண்ட காலம் பல அரிய சாதனைகள் புரிந்துள்ளார். துணைக் காரியதரிசி இஞ்ஜினீயர் திரு ஏ. வி. மதுசூதன ராவ் அவர்களோ ஒரு நடமாடும் டெலிவிஷன் கருவியாகவே திகழ்கிறார். தொண்ணூறு மைல் தூரத்திலுள்ள அணைக் கட்டில் எந்தப் பகுதியில் என்ன வேலை நடந்து கொண்டிருக்கிறது, யார் அங்கு என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை இருந்த இடத்தில் இருந்த வண்ணமே கூறும் ஆற்றல் பெற்று இயங்குகிறார். இத்தகையவர்களின் பணியினால் நாகார்ஜுன சாகர் நம் நாட்டின் நலனுக்கு எப்படி உதவப் போகிறது என்பது முன்கூட்டியே விளங்குவது போல் உருவாகி வருகிறது.

# வட்டமேஜை

## ஏழை விவசாயிகளின் இரத்தக் கண்ணீர்

நாடு சுதந்திரம் அடைந்து பதினேழு ஆண்டுகள் ஆகியும், பல ஐந்தாண்டுத் திட்டங்கள் இயற்றியும் உணவு உற்பத்தித் திட்டம் வெற்றி பெறவில்லை. காரணம், விவசாயிகளின் வாழ்க்கைத் தரம் உயரவில்லை. அவர்களின் உரிமை பாதுகாக்கப்படவில்லை. உரிமைகள் அளிக்கா விட்டாலும், அரசாங்கம் அவர்களுக்கு இருக்கும் உரிமையைப் பறிக்காமலாவது இருக்கலாம் அல்லவா?

தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணம் நகராட்சி மன்றக் கழிவு நீர்ப் பண்ணைத் திட்டம் என்ற பெயரில் பக்கத்திலுள்ள (115 நீர்) தேப்பெருமா நல்லூர் கிராமத்தில் பல வகைகளிலும் முதல் தரமான இரு போக நஞ்சை நிலங்களில் 160 ஏக்கர்களுக்கு மேல் நில ஆர்ஜிதம் செய்கிறது மாநில அரசாங்கம். ஏறக்குறைய 15000 கலம் நெல் உற்பத்தியைப் பாழாக்கி அந்நிலத்தில் புல் வளர்க்கும் திட்டத்தைச் செயல்படுத்தப்போகிறது. நூற்றி அறுபது ஏக்கர் நிலத்தில் சிறு சிறு நிலச்சுவான்தார்கள் நூற்றி நாற்பது பேர்களுக்கு மேல் உள்ளனர்; நூற்றிமுப்பதுக்கு மேற்பட்ட விவசாயிகளும் உள்ளனர். இந்த நில ஆர்ஜிதத்தினால் பாதிக்கப்படும் விவசாயிகளில் பாதிக்கு மேல் ஆதித்தமிழர் குடும்பங்கள். இந்த ஆர்ஜிதத்தால் அவர்களது எதிர்காலம் மிக மிக மோசமாகும்.

இப்படி 15000 கலம் நெல் உற்பத்தி குறைவதாலும், 1500க்கு மேற்பட்ட விவசாயத் தொழிலாள மக்கள் பிழைக்க வழி இல்லாமல் போவதாலும் இந்தக் கிராமத்தில் பசி, பஞ்சம், வறுமை ஏற்பட்டு அராஜக நிலை ஏற்படக்கூடிய ஒரு சந்தர்ப்பத்தை விவசாயிகளான எங்களுக்கு அளிக்கிறது அரசாங்கம்.

விவசாயிகளுக்கெனப் பாதுகாப்புச் சட்டம் உள்ளது. அச்சட்டப்படி ஒரு விவசாயியை உழுது பயிர் செய்யும் நிலத்திலிருந்து அகற்றவோ அவர்கள் ஜீவன உரிமையைப் பறிக்கவோ கூடாதெனச் சட்டம் இயற்றியுள்ளார்கள். ஆனால் அரசாங்கம் அவர்களை வெளியேற்றுகிறது, திட்டம் என்ற பெயரால்! இதே காரியத்தைத் தனிப்பட்ட நிலச்சுவான்தார்கள் செய்யக் கூடாதாம். மக்களுக்கு ஒரு நீதி. அவர்களை ஆள்பவர்களுக்கு ஒரு நீதி. இது எந்த ஊர் நியாயமோ தெரியவில்லை!

தேப்பெருமாநல்லூர்
16–12–63

சிறு நிலச்சுவான்தாரான உழுது பயிர் செய்யும் விவசாயி.

## நாட்டுக்கு நல்லதல்ல

ஆரம்பக் கல்வி நல்ல முறையில் போதிக்க வாய்ப்பும், வசதியும் இல்லாவிடில் நாட்டில் கல்வி வளர்ச்சியே தடைப்படும் என்பதைப் பண்டிதர் முதல் பாமரர் வரை அறிவர். அண்மையில் தமிழக அரசாங்கம் வெளியிட்டுள்ள ஆசிரியர் மாணவ விகித உத்தரவுகூட 45 மாணவர்களுக்கு ஓர் ஆசிரியர் என்ற முறையில்தான் அமைந்துள்ளது. கல்வியின் தரம் சிறப்பாக அமைய வேண்டுமானால் முப்பது மாணவர்களுக்கு மேல் இருத்தல் கூடாது. ஓர் ஆசிரியர் முப்பது மாணவர்களுக்கு மேல் கவனிக்கப்படும் நிலை இருந்தால் தரம் குறைவது இயற்கை;

ஏராளமான குக்கிராமப் பள்ளிக்கூடங்களில் ஐந்து வகுப்புக்களிலும் சேர்ந்தே 40 அல்லது 50 மாணவர்களுக்கு மேல் இருக்க மாட்டார்கள். அத்தகைய பள்ளிகளில் வருகை சராசரி முப்பத்தைந்துக்கு மேல் இருக்க இடமில்லை. இத்தகைய பள்ளிகளில் ஓரே ஆசிரியர் எவ்வாறு ஐந்து வகுப்புக்களுக்குப் பாடம் புகட்ட முடியும்? குறிப்பிட்ட சமயத்தில் ஒரு குறிப்பிட்ட வகுப்பைக் கவனிக்கும்பொழுது ஏனைய வகுப்புக்களை யார் கவனிப்பது? இத்தகைய சூழ்நிலையில் அளிக்கப்படும் கல்வி உயர்ந்த தரம் படைத்ததாக இருக்க வேண்டும் என்று நாமோ, அதிகாரிகளோ, நாட்டு மக்களோ எவ்வளவுதான் ஆசைப்பட்டாலும், அந்த ஆசை நிறைவேற வழி ஏது?

ஆசிரியர் — மாணவர் விகிதாசாரத்தைக் குறைத்தால்தான் குக்கிராமங்களிலுள்ள ஆயிரக்கணக்கான பள்ளிகளில் குறைந்தது இரு ஆசிரியர்களாவது பணி புரிய வாய்ப்பும் வசதியும் ஏற்படும். பள்ளியின் எண்ணிக்கை உயர்ந்து கல்வியின் தரம் குறைவது மக்களுக்கோ, நாட்டுக்கோ நன்மையல்ல என்பதைச் சிந்திக்க வேண்டுகிறேன்.

அழகாபுரி
18–11–63

வி.டி. என். சிதம்பரம்





கிராமத்துக்கு மின்சார வசதி வந்தது. ஒரு கிராமவாசி தமது வீட்டுக்கு மின்சார விளக்குப்போட்டார். விசாரிக்க வந்த நண்பர், "மின்சார விளக்கு போட்டதனால் உங்களுக்குச் சௌகரியம்தானே?" என்று கேட்டார்.

"சௌகரியம்தான். தீப்பெட்டி காணமற் போய் விட்டால் விளக்கேற்றுவதற்காக மின்சார விளக்கைப் போட்டுத் தீப்பெட்டியைத் தேடி எடுத்துக் கொள்ளச் சௌகரியமாக இருக்கிறது!" என்றார் கிராமவாசி.

# ஆடுதுறையில் ஆராய்ச்சி

ஆடுதுறையிலுள்ள சர்க்கார் விவசாய ஆராய்ச்சி நிலையத்தைப் பார்த்து வரலாமென்ற எண்ணம் எழுந்தபோது அதற்கு முன்கூட்டியே எப்படி அனுமதி வாங்குவது என்னும் பிரச்னையும் கூடவே எழுந்தது. 'விவசாய டைரக்டரைப் பார்க்க வேண்டும், உதவி டைரக்டரிடம் போக வேண்டும், அப்புறம் வெளியூர் போயிருக்கும் விளம்பர அதிகாரி வரும்வரை காத்திருக்க வேண்டும். அவருடைய உதவியாளரின் பேட்டி காண வேண்டும்' என்றெல்லாம் தான் ஒவ்வொருவராகத் தட்டிக் கழித்தார்களே தவிர ஒருவராவது திட்டவட்டமாக 'ஐயா! நீங்கள் தாராளமாய்ப் போய்ப் பார்த்து வரலாம்' என்று வாய்விட்டுச் சொல்லவில்லை. பச்சைப் பசேரென்ற வயல்வெளிகள் சூழ நிற்கும் ஆடுதுறையை அடையுமுன் சென்னையில் ஏனோ சிவப்பு நாடா குறுக்கிட்டுக்கொண்டேயிருந்தது.

''தஞ்சை மாவட்டக் கலெக்டரையே நேரில் பார்த்து அனுமதி கேட்கலாமே!'' என்ற நல்லதோர் யோசனையைச் சொன்னார் ஒரு நண்பர். அனுபவம் மிக்கவர் அவர். அவர் கூறியபடியே தஞ்சையை அடைந்ததும் திரு வேதநாராயணனின் அலுவலகத்தினுள் அனுமதி பெற்று நுழைந்தோம்.

முதற் பார்வையிலேயே உற்சாகம் நிறைந்த இளைஞர் இவர் என்பது பளிச்சென்று புலனாகிற்று. முக்கியமான அலுவல்களில் ஈடுபட்





மேலே: திரு ராஜகோபாலன். கீழே: திரு சுப்பிரமணியம்.

காரியங்களை உடனுக்குடன் முடித்து, முடிவு காண்பதை ஒத்திப் போடாமல் இருக்கும் தன்மைக்கு ஏன் பச்சை நாடா என்ற புதுப் பெயரைச் சூட்டக்கூடாது என்று தோன்றியது!

தஞ்சை மண்ணின் விசேஷமோ என்னவோ, நண்பகல் உணவைக் கூடச் சீக்கிரம் முடித்துக் கொண்டு, காத்திருந்த எங்களைச் சந்திக்க வாயிலுக்கு வந்த திரு பிரான்ஸிஸ், கை உலருவதற்கு முன்பே மை உலராக் கடிதம் ஒன்றை ஆடுதுறை விவசாய ஆராய்ச்சி நிலைய நிர்வாகி திரு சுப்பிரமணியம் அவர்களுக்கு எழுதிக் கொடுத்து விட்டார்!

புயலுடன் அடாது மழை பெய்து ரோடுகள் விடாத சகதியிலும் நீரிலும் மறைந்திருந்ததையும் பொருட்படுத்தாது ஆடுதுறையை நோக்கி ஆனந்தத்துடன் கிளம்பினோம்.

டிருந்த வேலையாக இருந்தும், முகத்தில் எள்ளளவும் இனிமை குறையாமல் வரவேற்றார். அவரைச் சந்திக்க வந்த நோக்கத்தைத் தெரிந்து கொண்டவுடன், ''ஆஹா! நீங்கள் அவசியம் அங்கு போக வேண்டும். அங்கு நடக்கும் ஆராய்ச்சியைப் பற்றிப் பொது மக்கள் விவரமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். விவசாய இலாகா உயர் அதிகாரி திரு பிரான்ஸிஸுக்குக் கடிதம் கொடுக்கிறேன்'' என்று சொல்லிக் கையோடு ஒரு கடிதத்தையும் எழுதிக் கொடுத்தார்.

சென்னையிலே சிவப்புநாடாவைப் பார்த்து வந்த எங்களுக்கு இந்த மாதிரி சரளமாகக்

**கோமதி ஸ்வாமிநாதன்**

''நீங்கள் முதலில் மண் பரிசோதனை நிலையத்தைப் பார்த்து விட்டு வந்து விட்டால், பிறகு நாம், சாவகாசமாக ஆராய்ச்சி விஷயங்களைப் பற்றிப் பேசலாம்! வாருங்கள், கிளம்பலாம்'' என்று தமது காரியாலயத்திலிருந்து ஒரு பர்லாங் தூரத்திலிருந்த மண் பரிசோதனை நிலையத்துக்கு அழைத்துச் சென்றார் திரு சுப்பிரமணியம். வண்டிகள் போகக் கூடிய அந்தப் பாதை மழையினால் மிகவும் உருக்குலைந்து வரப்புக்களாகவே மாறி நடை வேகத்தைக் கட்டுப்படுத்தியது.

மண் பரிசோதனைப் பகுதியில் நிர்வாகியாகப் பணியாற்றும் திரு ராஜகோபாலனும் அதிருதமான வேகத்திலேயே தம் பிரிவின் பணியைப் பற்றி விளக்கம் கொடுக்க ஆரம்பித்துவிட்டார்.

உடல் வளமாக இருக்க ஆரோக்கியம் எத்தனை முக்கியமோ, அத்தனை அவசியம் மண்ணின் ஆரோக்கியம் விவசாய வளர்த்துக்கு. ஆரோக்கியக் குறைவான உடலுக்கு வைத்தியர்கள் பரிசோதித்து என்னென்ன மருந்துகள், டானிக்குகள் சாப்பிட வேண்டும் என்று அபிப்பிராயம் கொடுக்கிறார்களோ, அது மாதிரி மண்ணின் உடல் நிலையைப் பரிசோதனை செய்யும் வைத்தியசாலை இது.

உரமிடுவதற்கு முன்னோ அறுவடைக்குப் பின்னோ சாகுபடிக்குப் பயன்படும் நிலப் பரப்பில் சுமார் பத்து வெவ்வேறு இடங்களிலிருந்து ஆறங்குல ஆழத்துக்குக் கீழிருக்கும் மண்ணை எடுத்து நன்றாகக் கலந்து சுமார் ஒரு ராத்தல் நிறை அளவுக்கு இந்தப் பரிசோதனைச் சாலைக்கு விவசாயிகள் அனுப்பி வைக்கிறார்கள். அதனை உடனடியாக நான்கு வித பரிசோதனைகளுக்கு உள்ளாக்கி, அந்த மண்ணின் ஆரோக்கிய நிலை பற்றியும், அதற்கு மருந்தாக எந்தெந்த உரங்கள் உபயோகிக்கலாம் என்றும், அந்த மண்ணில் எந்த வகையான பயிர் உண்டாக்கலா மென்றும் இந்தப் பரிசோதனைச் சாலை அந்த விவசாயிகளுக்குத் தெரிவிக்கிறது. விஞ்ஞான ரீதியான இந்த ஆலோசனை, உற்பத்தி விகிதத்தைச் சுமார் முப்பதிலிருந்து நாற்பது சதவிகிதம் வரை அதிகப்படுத்தி யிருக்கிறது என்பதை இப்போது விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் உணர்கிறார்கள். 'என் பாட்டனூர் காலத்திலோ, அவருக்குப் பாட்டனூர் காலத்திலோ இப்படியெல்லாமா பண்ணிக் கிட்டிருந்தோம்?' என்று சொல்லி, வளர்ந்து வரும் விவசாய விஞ்ஞானப் பாதையிலிருந்து விலகிப் பழைய தனி வழியே போவோர்கள் எண்ணிக்கை இப்போது வெகுவாகக் குறைந்து வருகிறது என்று நிச்சயமாகச் சொல்லலாம்.

குறிப்பிட்ட மண் 'சாம்பிளில்' உப்புச் சத்து அதிகமாக இருக்கிறதா, குறைவாக இருக்கிறதா, பாஸ்பரம், நைட்ரஜன் கலவைகள் எந்த விகிதங்களில் இருக்கின்றன என்பதை விலை உயர்ந்த நுண்ணிய கருவிகளின் உதவி கொண்டு நான்கு வகைகளில் கண்டுபிடித்து அதற்குத் தகுந்த யோசனைகளைச் சம்பந்தப்பட்ட விவசாயிகளுக்குத் தெரிவிக்கிறார்கள். அவர்கள் சந்தேகங்களை மேற்கொண்டும் விளக்கம் கொடுத்துப் போக்கவும் தயாராக இருக்கிறார்கள்.

சென்ற 1963 ஆண்டு அக்டோபர் மாதம் முடிய இந்த நிலையத்துக்குப் பரிசோதனைக்காக வந்த மண் 'சாம்பிள்கள்' 35,646. இவைகளில் 30,156 சாம்பிள்களைப் பரிசோதித்து ஆலோசனை சொல்லி யிருக்கிறார்கள். செங்கல்பட்டு, தென் ஆர்க்காடு, வட ஆர்க்காடு, தஞ்சை, திருச்சி, மாவட்ட விவசாயிகள் இந்த வசதியைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். பஞ்சாப் ராஜ்யத்திலுள்ள சயால்காட் பரிசோதனைச் சாலையில் மாதம் ஒன்றுக்கு 4000 சாம்பிள்களைப் பரிசோதனை செய்கிறார்களாம். போர்டு பவுண்டேஷன் ஆதரவில் சீக்கிரமே பெரிய அளவில் விஸ்தரிக்கப்படவிருக்கும் இந்த ஆடுதுறைப் பரிசோதனைச் சாலையும் அந்த அளவைத் தாண்டுமானால் ஆச்சரியப்படுவதற்கில்லை.

பரிசோதனைச் சாலையைச் சுற்றிப் பார்த்துத் திரும்பியபோது, 'இதுவல்லவா இயற்கை வைத்தியசாலை?' என்ற வியப்பு ஏற்பட்டது. நாளுக்கு நாள் அதிகரித்து வரும் ஜனத்தொகையின் உணவுத் தேவையை ஈடுகட்டிச் சமாளிக்க மண்ணின் உற்பத்திச் சக்தியைப் பெருக்க வேண்டும். விஞ்ஞானம் அதற்கு வழி காட்டுகிறது.



ஆடுதுறையை அடையும் பாதை பல இடங்களில் இப்படித்தான் இருந்தது.

மண் பரிசோதனைச் சாலையிலிருந்து விளைச்சல் பரிசோதனை விவரங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள நண்பர் ஸ்ரீ சுப்பிரமணியத்தின் காரியாலயத்திற்குப் போய்ச் சேர்ந்தோம்.

சென்னை ராஜ்யத்தில் 1922ம் ஆண்டிலேயே நிறுவப்பட்ட பழமையான விவசாய ஆராய்ச்சி நிலையம் ஆடுதுறைப் பண்ணை. பதினைந்து லட்சம் ஏக்கராவுக்கும் அதிகமான விளைச்சல் நிலத்தைக் கொண்ட காவிரி பாயும் பிரதேசத்தில் இந்த ஆராய்ச்சி நிலையத்தை முன் யோசனையுடன் நிறுவி யிருக்கிறார்கள். இப்போது அது ஒரு பிராந்திய ஆராய்ச்சி நிலையம். அதிக விளைச்சலைக் கொடுக்கக் கூடிய



சென்னை அட்வகேட் ஸ்ரீ கே. வேணு கோபால ஐயங்கார் அவர்கள் குமாரத்தி சௌ. ஜானகிக்கும், ஹைதராபாத், ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவைச் சார்ந்த சிரஞ்சீவி C. K. சேஷாத்ரி B.SC., CA.IIB., அவர்களுக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது வாழ்க, மணமக்கள்!

பயிர்களைக் கண்டுபிடிப்பதும், தோற்றுவிப்பதும் இந்த நிலையத்தின் முக்கிய பணி. ஒட்டு மாஞ்செடிகள் பயிராக்குவது போல் ஒட்டு நெற்பயிர் வகைகளை இந்த நிலையம் ஆராய்ந்து தயாரிக்கிறது. அதிகப்படியான தானிய மணிகளையும், கனமான வைக்கோலையும் கொடுக்கும்படியாக இதுவரை இருபத்தி ஆறு ஒட்டு நெற்பயிர் வகைகளை அமுலுக்குக்கொண்டு வந்திருக்கிறார்கள். எல்லா வகை விதைகளையும் விவசாயிகள் விரும்பிச் சாகுபடி செய்கிறார்கள் என்று சொல்ல முடியாது போனாலும் சில ரகங்கள் ஜனரஞ்சகமாக விளங்குகின்றனவாம்.

ஏ.டி.டி-3 என்ற ஓர் ஒட்டு நெற்பயிர் ரகம் குறுகிய காலத்தில் பயிராக்கி அதிக அளவில் பலன் தரக் கூடிய ஒரு ரகம். ஓர் அபூர்வக் குறுவை ரகம். ஆனால் இந்த ரகத்தின் தானியமணிகள் சிறுமணி ரகம் போல் இல்லை என்று சில அனுபவம் மிக்க விவசாயிகள் நினைப்பதால், புதிதாக ஏ.டி.டி-3 யையும், சிறுமணியையும் ஒட்டி ஏ.டி.டி-20 என்ற அபிவிருத்தி யடைந்த ஒரு ரகத்தைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஏ.டி.டி-3 தொண்ணூற்றி ஐந்து நாட்களில் அறுவடைக்குத் தயாரானால் ஏடிடி-20 நூற்றி ஐந்து நாட்களை எடுத்துக் கொள்கிறது. முந்தையதை விடப் பிந்தியது மேலும் அதிக விளைச்சலைக் கொடுக்கிறது.

நெற்பயிர்களுக்குச் சாதாரணமாக வரும் குலை நோயைச் சமாளித்துத் தாக்குப்பிடிக்க சிஓ-25 என்ற ஓர் ஒட்டு ரகத்தை இந்த ஆராய்ச்சி நிலையம் கண்டுபிடித்திருக்கிறது. ஏடிடி-10 என்ற ரகத்தையும் சிஓ-4 என்ற மற்றொரு கோயம்புத்தூர் பிராந்திய ரகத்தையும் இணைத்துத் தயாரித்தது இந்த சிஓ-25. ஆனால் இந்த சிஓ-25 ரக அரிசி மேல் ஒரு பலத்த புகார். அதாவது இந்த ரகம் இட்லி தயாரிப்புக்கு ஏற்றதாக இல்லையாம்! ஆகையால் இந்த வகையை மேலும் எப்படி அபிவிருத்தி செய்யலாம் என்று ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள்.

முழு விளைச்சலுக்கு 165 நாட்கள் எடுத்துக் கொண்டாலும் இந்த ரகம் கூடுதலான பலனைக் கொடுக்கிறதாம். அதற்கு ஏற்றாற் போல் அதிகமான உரத்தையும் ஏற்றுக் கொள்கிறதாம்!

பொதுவாக, பாரதத்தில் உபயோகிக்கப்படும் நெற்பயிர் ரகங்கள், உரங்களையும், எருவையும் ஓர் அளவுக்கு மேல் எடுத்துக் கொள்வதில்லை. ஆனால் ஜப்பானிய ரகங்கள் பகாசுரர்களாக உரத்தையும், எருவையும் 'கொண்டா, கொண்டா' என்று விழுங்குகின்றனவாம். ஆகவே கட்டாக்கிலுள்ள விவசாய ஆராய்ச்சி நிலையம், இந்த இரண்டு வகைகளையும் இணைத்து, 2914 என்ற அடையாளமுள்ள ஓர் ஒட்டுப் பயிரைத் தயாரித்திருக்கிறது. இந்த 2914 ரகம் அநேக விதங்களில் ஏடிடி-20 மாதிரியே இருக்கிறதாம்.

தண்ணீர், மழை அதிகரிப்பதால், விதை நெல் ஆரம்ப சூரத்தனமாக முளைத்துவிட்டு நாற்று சாய்வதைத் தடுக்க, ஒரு சாய்மான எதிர்ப்பு ரகமும் 2701 என்ற பெயருடன் உருவாக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஆராய்ச்சி விளைவான இணைப்பு ரகங்களைக் குறிப்பிட்ட நிலங்களில் பயிர் செய்து வேண்டுவோருக்கு விதை விநியோகிக்க இந்த நிலையம் தயாராக இருக்கிறது. இந்த ரகங்கள் ஏற்கனவே இருக்கும் பழக்கமான, வழக்கமான ரகங்களை விட ஏறத்தாழ இருபது சதவிகிதம் அதிக விளைச்சலைக் கொடுக்கிறது என்று அனுபவபூர்வமாகப் பல விவசாயிகள் சொல்கிறார்கள்.

திரு சுப்பிரமணியத்தின் ஆராய்ச்சி நிலையத்தில் பணியாற்றும் சௌந்தரராஜன் என்னும் இளைஞர் 'டக் டக்' என்று மாதிரி நெற் கதிர்களையும், நெல் மணிகளையும் கொண்டு வந்து, அவற்றுக்கான விளக்கம் கொடுக்கும் விதம் கேட்பவர்களுக்கு உற்சாகமாக இருக்கிறது. அவர் ஒரு நடமாடும் 'ரிக்கார்டு'.

வயல்களில் பயிரை நாசம் செய்யும் எலிகளை ஒழிக்க, மிக மலிவான ஆனால் ஆச்

## தமிழர் விழா!

தமிழ்முடி.

விண்கொழிக்க மண்செழிக்க
வேலைசெய்து மெய்வருந்தி
உண்பொருள்கள் உண்டாக்கி
உலைந்து துயர்தாங்கும்
வண்மாடு சிறுழவர்
மெய்த்தொண்டு நாடறியத்
தண்டமிழர் செய்திருநாள்
தைப்பொங்கல் வாழியவே!



சரியமான பலனளிக்கும் ஒரு சாதனம் இந்தப் பண்ணையில் உபயோகப்படுகிறது. இரண்டு மூன்று மூங்கில் பிளாச்சுகளை வில்போல் வளைத்துக் கட்டி வயலில் அரை அடி ஆழத்துக்கு ஊன்றி வைத்திருக்கிறார்கள். இரண்டு பிளாச்சுகளுக்கு நடுவே கொஞ்சம் வைக்கோலைச் செருகி, வைக்கோலின் இரு பக்கங்களில் மணம் பறக்கும் நெல் பொரியையோ, சோளப் பொரியையோ தூவி வைக்கிறார்கள். ஒரு பக்கத்துப் பொரியை ருசி பார்க்கும் எலிக்குக் கீழே இறங்கிச் சுற்றிக்கொண்டு மறு பக்கத்துக்குப் போக வழிகாட்ட இங்கு டிராபிக் கான்ஸ்டேபிள் யாரும் இல்லையே! அந்த எலி நாக்கை நீட்டிக்கொண்டு குறுக்கே மூங்கில் பட்டை மேலாகப் பாயும்போது அந்த வேகத்தில் வேறு ஒரு பட்டை மேலிருந்து வந்து எலியின் கழுத்தை அமுக்கி விடுகிறது. எந்த விதமான நவீன ஸ்பிரிங்கும் பொருத்தாத இந்த மூங்கில் பொறி கன கச்சிதமாக எலி நாசப் பணி புரிகிறது. ஒரு பொறி நாலணாக் கூட ஆவதில்லையாம்!

பச்சை உரம், ரசாயன உரங்களுடன் கலந்து உபயோகிக்கப்படும்போது மண்ணின் உற்பத்திச் சக்தி அதிகரிக்கிறது. ஓர் ஏக்கராவில் பயிர் செய்யப்படாத நாட்களில் சீமை அகத்தி போட்டு வளர்த்தால் அந்தச் சீமை அகத்தி ஆறு ஏக்கராவுக்குப் போதுமான அயனான பச்சை உரம் கொடுக்கிறது. இந்த ஏற்பாட்டை எல்லா விவசாயிகளுக்கும் இந்த நிலையம் சிபாரிசு செய்கிறது. நைட்ரஜன் தேவையை இந்தச் சீமை அகத்தி கவனித்துக் கொள்ளுகிறது.

தீவிரச் சாகுபடித் திட்டம் அமுலுக்கு வந்த பிரதேசமாகையால், சீக்கிரமே இந்த நிலையத்தின் ஆராய்ச்சி வேலைகளை மத்திய சர்க்காரும், மாகாண சர்க்காரும் சேர்ந்து செலவிலும் உற்சாகத்திலும் பங்கு போட்டுக் கொண்டு அபிவிருத்தி செய்ய வாய்ப்பிருக்கிறது என்று தெரிகிறது.

திரு சுப்பிரமண்யத்தின் மேற்பார்வையில் நீர் வளம், நில வளம், பயிர்களுக்கு வரும் நோய்கள், பயிர்களைத் தாக்கும் பூச்சிகள், விவசாய சம்பந்தமான ரசாயனம் முதலிய துறைகளைக் கவனித்துக் கொள்ள நான்கு விவசாயத் துறை நிபுணர்கள் இருக்கிறார்கள். இந்த ஐவரும் அவருடைய உதவியாளர்களும் ஏதோ ஒரு சிறு கிராமத்தில் இருந்துகொண்டு நாடே வளம் பெறுவதற்கான வழிகளில் ஆராய்ச்சிப் பணி செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய தொண்டு, தனி மனிதனுக்கும், சமூகத்துக்கும் நாட்டுக்கும் ஒரே காலத்தில் செய்யப்படும் அபூர்வமான தொண்டு என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள்.

நண்பர் சுப்பிரமணியத்திடம் விடை பெற்றுக்கொண்டு கிளம்பியபோது எத்தனையோ புதிய விஷயங்களை ஒரு புதிய உலகில் புகுந்து தெரிந்து கொண்டிருக்கிறோம் என்ற உணர்ச்சியுடன், மனநிறைவுடன் திரும்பினோம்.

ஆடுதுறையிலிருந்து மாயவரம் வரும்வரை பாதையின் இரு பக்கங்களிலும் பச்சைக் கம்பளம் போல் விரிந்து கிடந்த வயல்வெளிகளைப் பார்த்தபோது, 'இது ஏடிடி-3 ஆக இருக்குமா? இது சிஓ-25 ஆக இருக்குமா? அதோ ஒரு எலி ஓடுகிறது. சோளப் பொரியும், மூங்கில் பொறியும் எங்கே?' என்ற விதமான சம்பாஷணையில்தான் நாங்கள் ஈடுபட்டிருந்தோம்!

## பாலைவனம் சோலைவனமாக...

சீர்வும் பிளாஸ்டிக் மயமாக இருக்கும் இந்நாட்களில் விவசாயத் துறையில் மட்டும் அந்தப் பொல்லாத பிளாஸ்டிக் புகாமலிருக்குமா என்ன?

பாலைவனம் அதிகரிக்கும் சகாப்தம் என்றே இக்காலத்தை விஞ்ஞானம் அழைக்கிறது. உதாரணமாக வடமேற்கு ஜெர்மன் பகுதியில் மூன்றில் ஒரு பாகம் பயிர் நிலம் மணல்பாங்காகி விட்டது. கீழ் சாக்ஸனியில் காற்றில் கலந்து வரும் மணல் படிவதன் மூலம் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலம் பயிர் செய்ய லாயக்கற்றதாகி விட்டது.

சாகுபடிக்கான புது நிலங்களை ஏற்படுத்துவதும், பாலைவனம் ஏற்படாமல் தடுப்பதும் இப்போது உடனடியாகக் கவனிக்க வேண்டிய காரியங்களாகும். பிளாஸ்டிக் துகள்கள் மண்ணுடன் கலக்கப்பட்டால் மண்ணிலுள்ள ஈரம் ஆவியாக மாறிப் போய் விடாமல் இந்தப் பிளாஸ்டிக் துகள்கள் தடுக்கின்றன. அப்படி ஆவியாக ஈரம் மாறினாலும் மிகக் குறைந்த அளவிலேயே அப்படி மாறுகின்றது. மழைத் தண்ணீர் பூமியில் இறங்குவதையும் பிளாஸ்டிக் துகள்கள் தடுப்பதில்லை. தாவரங்கள் வளருவதற்கு வேண்டிய சத்துக்கள் இந்தப் பிளாஸ்டிக் துகள்களில் இருப்பதாகவும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இத்துகள்களுடன் சில ரசாயனப் பொருள்களைச் சேர்ப்பதன் மூலம் அநாவசியமாக விளையும் புல்பூண்டுகள் வளராமல் தடுக்கலாமாம்!

இந்தத் துகள்களுக்கு வர்ணம் சேர்ப்பதன் மூலம் சில நல்ல பலன்களும் ஏற்படுகின்றன. உதாரணமாக, கறுப்பு வர்ணம் கொடுத்தால் பூமியில் சூரிய உஷ்ண கதகதப்பு அதிக நேரம் நீடித்திருக்கச் செய்யலாம். இப்படிச் செய்வதால் பயிர்கள் சீக்கிரம் முதிர்ச்சியடையக் கூடும்.




## ராம்கோ பிராண்ட்
## போர்ட்லண்ட் சிமெண்ட்

**இப்பொழுது சென்னை நகரில் கிடைக்கிறது**

என்பதை மகிழ்ச்சியுடன் அறிவிக்கிறோம்.

# மதராஸ் சிமெண்ட்ஸ் லிட்

ரிஜிஸ்டர்ட் ஆபீஸ்: ராஜபாளையம்

தொழிற்சாலை: துலுக்கப்பட்டி ராமநாதபுரம் ஜில்லா

விற்பனை ஏஜெண்டுகள்:

**ராம்கோ சிமெண்ட் டிஸ்ட்ரிப்யூஷன் கம்பெனி பிரைவேட் லிட்**

தேசீய பாதுகாப்பு பத்திரங்களில் முதலீடு செய்யுங்கள்

*Aiyars* MC-5

# உயிர்ப்பலிகள்

ஹிந்தி மூலம் : ஜனார்த்தன பாண்டே

தமிழாக்கம்—
க.மா.வேங்கடேசன்

1942

ஆவணி மாதம்; தண்ணீரோ மழை பெய்தால்தான்; மழையோ பெய்வதாக இல்லை; விவசாயிகள் விதைத்திருந்த செழுமையான விதைகளெல்லாம் பொசுங்கிக் கருகிக் கொண்டிருந்தன. மழை பெய்ய வேண்டும் என்பதற்காகக் கிராம வாசிகள் தினந்தோறும் தேவேந்திரனுக்குப் பூஜை நடத்தினர். பூஜைகளும், வழிபாடுகளும் செய்து விட்டு, ஆகாயத்தை அண்ணாந்து பார்ப்பதும், பிறகு கடும் வெப்பத்தினால் காய்ந்து போய்க் கொண்டிருக்கும் தங்கள் வயல்களையும், கருகிப் பொசுங்கிக் கொண்டிருக்கும் விதைகளையும் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டே தங்கள் வீட்டுக்குத் திரும்பிப் போவதுமாக இருந்தனர்.

கமலா குகையில் கிராமத்து ஜனங்கள் எல்லோரும் கூடியிருந்தார்கள். மிருதங்கம், ஜால்ரா முதலிய இசைவாத்தியக் கருவிகளெல்லாம் சேர்ந்து பேரிசை எழுப்பி ஒலித்துக் கொண்டிருந்தன. எல்லோரும் பகவதி தேவியின் பேரில் பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தார்கள். 'சப்பு' மட்டும் தனியாகப் பகவதிதேவியின் சன்னதியில் தியானத்தில் மூழ்கியவாறு உட்கார்ந்திருந்தான். ஜனங்கள் பாடிக் கொண்டே, சப்புவையும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ''தேவி அவன் பேரில் வந்து ஆடுவாள், அப்பொழுது அவன் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும் முழுக்க முழுக்க உண்மையாகவே இருக்கும்'' என்று எல்லோருக்கும் ஒரு நம்பிக்கை.

பகவதி தேவிக்கு நேர் முன்னால் ஓர் அழகான ஆசனம் போடப்பட்டிருந்தது. அதில் சௌத்திரி ராம்லால் வந்து அமர்கிறார். இவர்தான் அந்தக் கிராமத்தின் பழைய ஜமீன்தார். அவரிடத்தில் ராஜ பக்தியும் தெய்வ பக்தியும் ஒன்றுதான். தெய்வ பூஜையையும், அதிகாரிகளுக்குச் செய்யும் பூஜையையும் எப்பொழுதுமே இவர் சமமாகத்தான் கருதி வந்திருக்கிறார். ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் காக்கி உடை அணிந்திருந்த அதிகாரியானாலும் சரி, இப்போது காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் கதர் உடை அணிந்திருக்கும் அதிகாரியானாலும் சரி, இவருக்கு இரண்டும் ஒன்றுதான். இவர்களுக்குச் செய்கின்ற உபசாரங்கள் கடவுளுக்குச் செய்யும் பூஜை, நைவேத்தியம் முதலானவற்றுக்குச் சமம் என்பது இன்றும் அவருடைய கருத்து.



அந்தக் கிராமத்து மக்களும், அக்கம்பக்கத்து ஊர் ஜனங்களும் கரம் குவித்தபடியே நின்றார்கள். ''ஜய கங்கா'' என்று பகவதியின் பெயர் உச்சரிக்கப்பட்டுப் பக்திப் பாடல் ஆரம்பிக்கப்பட்டது. ஜனங்களுக்கு ஆசிர்வாதம் அளித்தவாறே சப்பு மீது ஆட்கொண்டிருந்த ''கமலா தேவி'' மலையேறி விட்டாள்.

வானத்தில் உள்ள கருமேகங்கள் ஒன்று பலவாகப் பிரிந்து வானமெங்கும் பரவி ஓடிக்கொண்டிருந்தன. தவளைகள் 'டர்ர், டர்' என்று சத்தம் போடத் தொடங்கி விட்டன. இதைக் கண்ட மக்கள் எல்லோரும் அவரவர்கள் வீடு நோக்கிச் செல்லலானார்கள். அக்கூட்டத்தில் நின்று கொண்டிருந்த சுநயனாவும் தன் கிழிந்த கந்தையான புடவையினால் தன் உடம்பைக் கஷ்டப்பட்டு மறைத்துக் கொண்டே பெரும் நடையாக வீட்டுக்கு நடந்தாள். அச்சமயத்தில் மேல் திசையிலிருந்து பலமாகக் காற்று வீச ஆரம்பித்தது.

சுநயனா வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள். அவள் மாமனார் சியாமலால் பார்வை இழந்தவர். கட்டிலின் மேல் படுத்துக் கொண்டு மழையில் நனையாமல் தம் உடம்பை ஒடுக்கிச் சுருக்கிப் பாதுகாத்துக் கொள்ள முயன்று கொண்டிருந்தார். அப்பொழுது மொட்டை மாடியிலிருந்து சொட சொடவென்று தண்ணீர் வீட்டுக்குள் கொட்டிக் கொண்டிருந்தது. இதைப் பார்த்துக் கொண்டிருந்த சுநயனா சட்டென்று எழுந்து அந்தக் கட்டிலை ஒரு மூலையில் இழுத்துப் போட்டுவிட்டு வெளியே அண்ணாந்து பார்த்தாள். வானம் ஒரே இருளாய் இருண்டு கிடந்தது. அடிக்கடி பளிச் பளிச்சென்று கண்ணைப் பறிக்கும் மின்னல்கள் வெட்டின. சில சமயம் கண்ணைப் பறிக்கும் மின்னல் கூரை வழியாக அவள் வீட்டுக்குள் ஊடுருவிச் சென்றன. பயத்தினால் அவள் தன் கண்களை மூடிக் கொண்டாள். அந்தச் சமயத்தில் அவளுடைய மாமனார் தளர்ந்து போன குரலில், ''அம்மா சுநயனா!'' என்று கூப்பிட்டார். சுநயனா தன் தலை மயிரிலுள்ள தண்ணீரைப் பிழிந்து கொண்டே ''என்ன கேட்கிறீங்க மாமா?'' என்றாள்.

''இப்பொழுது நடப்பது என்ன மாதம், அம்மா?'' என்று கேட்டார் மாமனார்.

''இதுவா? ஆவணி மாதம். இப்பொழுது நீங்கள் மாதத்தைப் பற்றி ஏன் மாமா விசாரித்துக்கொண்டிருக்கிறீர்கள்?''

அதற்கு அந்தக் கிழவன் ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்துவிட்டு, ''இந்தி மாதத்தைப் பற்றி நான் கேட்கவில்லை. ஆங்கில மாதத்தைத்தான் கேட்டேன்'' என்றார்.

''ஆமாம், எனக்கு இப்பொழுதுதான் நினைவு வந்தது. இது ஆகஸ்ட் மாதம் என்று கூட்டத்தில் சௌத்திரிஜி குறிப்பிட்டார்...''

இதைக் கேட்டதும் கிழவர் உடனே எழுந்து கட்டிலின் மேல் உட்கார்ந்து கொண்டார். குளிரால் அவர் உடம்பெல்லாம் நடுங்கியது. அவர் கைவிரல்கள் மரத்துப் போய் நன்றாக மூடிக் கொண்டன. மூப்பினால் தளர்ந்து போன உடம்பை ஒடுக்கிக்கொண்டு ஏதோ ஆவேசம் கொண்டவர் போல் பார்த்தார் கிழவர். அப்பொழுது அவர் முகம் பார்ப்பதற்கே பயங்கரமாக இருந்தது. இம்மாதிரி காட்சியைச் சுநயனா பல தடவைகள் பார்த்திருக்கிறாள். இருந்தாலும், அதன் காரணம் இன்னதென்று அவளுக்கு இதுவரை தெரியாது; தெரிந்து கொள்ளவும் முடியவில்லை. தயங்கிக் கொண்டே அவள், ''உங்களுக்கு இப்பொழுது என்ன செய்கிறது? உங்கள் முகத்தைப் பார்க்கப் பயமாக இருக்கிறதே! பேச மாட்டீர்களா, பாபு?'' என்று தன் வயதான மாமனாரின் தோள்களைப் பிடித்துக் குலுக்கிக் கொண்டே கேட்டாள்.

அதற்குக் கிழவர், ''ஒன்றுமில்லையம்மா, கடந்து போன பழைய விஷயங்கள் நினைவுக்கு வரும்போது அப்படியே உடம்பு சோர்ந்து விடுகிறது. அவ்வளவுதான்....'' என்று கூறி விட்டுத் தம் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டார். அப்பொழுது அவருடைய கண்களில் நீர் ததும்பியது.

''நீ தெரிந்து கொள்ளத்தான் வேண்டுமென்ற விருப்பத்துடன் கேட்பதால் சொல்கிறேன், கேள்'' என்று கூறிய கிழவன், ஒரு நீண்ட சோகப் பெருமூச்சு விட்டு விட்டுச் சொல்ல ஆரம்பித்தார்.

''இப்பொழுது நான் சொல்வது தோல்வியடைந்த ஒரு போர் வீரனின் பெரும் சோக வரலாறு. இன்றைக்கு இருபத்தைந்து வருஷங்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சி இது. அப்பொழுது அவன் ஒரு சர்க்கார் வக்கீலாக இருந்தான். அந்தக் காலத்தில் அவனுக்கு நல்ல புகழ்; ஏராளமான வருமானம் வந்தது. திடீரென்று ஏற்பட்ட காலரா நோய் அவன் அன்பு மனைவியை அவனிடமிருந்து பறித்துச் சென்றது. அவன் மகன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். அவன் நல்ல புத்திசாலி.

அவன் தந்தை அவனுக்குப் பன்னிரண்டே வயது நிரம்பிய ஓர் அழகிய பெண்ணைத் திருமணம் செய்து வைத்தார். திருமணம் பெண் வீட்டிலேயே மிக விமரிசையாக நடந்து முடிந்தது. பெண் இன்னும் புக்ககம் போக வில்லை. அப்பொழுதுதான் அந்த வாலிபனின் வாழ்க்கையில், என்றுமே மறக்க முடியாத அந்த 1942ம் வருஷம் வந்தது. தேச பக்தி மிகுந்த இளம் வாலிபர்கள் வெள்ளை அரசாங்கத்தை எதிர்த்துப் போர்க்கொடி உயர்த்தினர். அதிகார வர்க்கம் துப்பாக்கிகளைக்கொண்டு கலவரத்தை அடக்க முற்பட்டது. புரட்சிக்காரர்கள் பலர் இறந்தனர். அந்தப் புரட்சிக்காரர்களின் கூட்டத்தில் அந்த வக்கீலுடைய மகனும் போய்ச் சேர்ந்தான். அப்பொழுது அவன் அந்த மனிதக் குவியலில் மறைந்துவிட்டான்.... ஆனால் எல்லா விஷயங்களும் சில தினங்களுக்குள் தெரிந்துவிட்டன. உடனே அவன் தகப்பனாருடைய 'சர்க்கார் வக்கீல்' என்கிற வேலையும் பறிக்கப்பட்டு விட்டது.

அதே கிராமத்தில் ஒரு ஜமீன்தார் இருந்தார். அவருடைய வீட்டில் ஒரு வெள்ளைக்கார அதிகாரியும் சில கூர்க்காப் படை வீரர்களும் தங்கி யிருந்தார்கள். தினந்தோறும் ஏதாவதொரு கிராமத்தில் தீ வைப்பதும், கட்டுப் பொசுக்குவதும்தான் அவர்களுடைய வேலை. இந்தக் காரியங்களுக்கெல்லாம் அந்தச் சிப்பாய்களுக்கு உதவி செய்வதை அந்த ஜமீன்தார் மிகவும் புனிதமான கடமை யென்று கருதினார். இதே ஜமீன்தார்தான் அந்த வாலிபனைப் பிடித்துக்

கைது செய்யவும் உதவி செய்தார். வெள்ளை அரசாங்கம் அந்த வாலிபனைத் தூக்கி லிட்டுக் கொன்று விட்டது. அபாக்கியசாலி யான அவன் தந்தையும் அந்தப் போராட்டத்தில் தீவிரமாகக் குதித்தான். சில நாட்களுக்குள்ளாகவே அவனும் கைது செய்யப்பட்டு, சிறையில் தள்ளப்பட்டான். சிறையில் எண்ணற்ற கொடுமைகளையும், இன்னல்களையும் அவன் அனுபவித்தான். அவனது இரு கண்களும் பிடுங்கப்பட்டன. அதனால் அவன் கண்ணொளி அணைக்கப்பட்டது. ஆனால் அவன் உள்ளத்தில் என்றென்றும் கனன்று எரிந்த சுதந்திரத் தீயின் ஒளியை யாராலும் அணைக்க முடியவில்லை....''

இடீரென்று கதை நின்றுவிட்டது.

''அதன் பிறகு என்ன ஆயிற்று மாமா?''

கிழவர் மீண்டும் தம் கதையைத் தொடர்ந்து சொல்லவாரம்பித்தார். ''1947 ஆகஸ்ட் 15-ந் தேதி வந்தது. சூரியோதயத்துடனேயே சுதந்திரத் திருநாளும் மலர்ந்தது. அரசியல் கைதிகள் யாவரும் விடுதலை செய்யப்பட்டனர். சுதந்திர கீதங்களும், இசை வாத்தியங்களும் திக்கெல்லாம் இலட்சிய வெற்றியை முழக்கி ரீங்கார நாதம் எழுப்பிக் கொண்டிருந்தன. நமது அன்பின் சின்னமான மூவர்ணக் கொடி வானளாவ உயர்ந்து சிறகடித்துப் பறந்தது. ஆனால்.... ஆனால்... எந்த உன்னதமான உயரிய இலட்சியங்களுக்காக எண்ணிலடங்கா இளம் வீரர்கள் உயிர்ப் பலி செய்யப்பட்டார்களோ அந்த இலட்சியக் கனவுகள் மட்டும் இன்னும்... ஐயோ....!'' கிழவரின் கண்களிலிருந்து சோகக் கண்ணீர் பெருக்கெடுத்தது. இந்தக் கதை சுதயனுக்கு மேலும் மேலும் எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்ப்பது போல இருந்தது.

''நிஜமாகவே இது கதைதானா? அல்லது நீங்களே அனுபவித்த கதையா மாமா?'' என்றான் சுதயன் துயரத்தோடு.

''ஆமாம்மா, உன் மாமனாரே சொந்தமாக அனுபவித்துக் கழித்த சோகக் கதை தானம்மா இது. இப்படிப்பட்டவனைப் பார்த்துத்தான் இந்த ஊர் ஜனங்கள் கேலி செய்து சிரிக்கிறார்கள். ஒவ்வொரு வருஷமும் ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி வருகிறது. அன்று சுதந்திர கோஷங்களும், சப்தங்களும் இரைச்சலுமாய்க் கேட்கின்றன. ஆனால், என்ன பிரயோசனம்? அந்தக் கொடியவன் ஜமீன்தார் சௌந்தரி தன் வீட்டில் வருஷத்துக்கு ஒரு மெத்தை வைத்துக் கட்டிக் கொண்டிருக்கிறான்; அந்த மாளிகையில் மூவர்ணக் கொடியை ஏற்றி வைத்திருக்கிறான். அந்த ஜமீன்தார் மாளிகையில்தான் இன்று தலைவர்களும், மந்திரிகளும் வந்து கூடுகிறார்கள். விருந்தும், கேளிக்கைகளும் நடக்கின்றன. இவர்தான் இன்று எல்லோருடைய நிலங்களையெல்லாம் எடுத்துக் கூட்டுப் பண்ணை அமைத்து யந்திரங்களையும் கொண்டு சாகுபடி செய்கிறார், உற்பத்தியைப் பெருக்குகிறான் என்று நீதான் கூறினாய். ஆனால் நான் அந்தச் சௌந்தரியின் பெயரைக் கூடக் கேட்க விரும்பவில்லை. இவன்தான் அன்று போலவே இன்றும் நமது சுதந்திரத்துக்கும் முன்னேற்றத்துக்கும் குறுக்கே நிற்கிறான். இவனே நமது ஆசைக் கனவுகளையும், அபிலாஷைகளையும் கொலை செய்த பாதகன். இன்றுமட்டும் நான் வாலிபனாக இருந்தால்... என் மகன் மதுரையும், அவனுடன் இலட்சியத்துக்காக உயிர்ப்பலி வாங்கப்பட்ட எண்ணற்ற இளைஞர்களும், உயிருடன் இருந்தால்...'' என்று பொங்கியெழும் தம் உள்ளத்து உணர்ச்சிகளை அடக்க முடியாமல் கிழவர் தத்தளித்தார்.

அப்பொழுது வானொலியில் இசைத் தட்டின் பாட்டொலி கேட்டது...

'' தியாகிகளின் கல்லறை மேல் கூடுவோம்
நாம் ஆண்டுதோறும் கூடுவோம்—
நாட்டிற்காக
உயிர் கொடுத்த நல்ல வீரத்
தியாகிகளின் கல்லறை மேல்
கூடுவோம் என்றும்
அழியாத விழாவினைக் கொண்டாடுவோம்
இதுவே
வீரத் தியாகிகளின் நிலையான
சின்னமாகும்!''

கிழவர் இதைக் கேட்டதும் பேசாமல் தம் படுக்கையை விரித்துப் படுத்துக் கொண்டார்.



# தைக்கோல மகள்

திமிலைத்துமிலன்

கால்கடுக்க நின்றுநின்று கண்பனிக்கிறாள் — கோடி
கற்பனைக்கண் மூடிகொண்டு நெஞ்சினிக்கிறாள்.
வேல்விழித்து மின்னலாலே மேலும்நோக்கிறாள் — மேரு
வெற்பெனும்பொன் மார்புபொங்கப் பாணம்சேர்க்கிறாள்.
நூபுரம் கலீர்!கலீர்!செம் பாதம் தூக்கிறாள் — பட்டு
நூலிலேவின் மீதிலேறி எங்கும் நோக்கிறாள்.
கோபுரத் தெழும் சுடர்த்தேர்; கூர்ந்துபார்க்கிறாள்—தைக்
கோலநங்கை நெஞ்சுபொங்கக் கொஞ்ச நிற்கிறாள்.




நமது வீட்டுக்கு விருந்தினர்கள் என்று வந்தால் அவர்கள் போகும் போது நம்முடைய கைகள் நம்மையறியாமலேயே குங்குமம், வெற்றிலை, பாக்கு ஆகியவற்றை எடுத்துக் கொடுத்து விடும். கூட ஒரு வாழைப் பழமும் வைத்துக் கொடுத்தால் மனத்துக்குத் திருப்தியாக இருக்கும். பழங்கள் கொள்ளை கொள்ளை யென்று இருந்தால் ஒன்றுக்கு இரண்டாகவே கூடக் கொடுக்கத் தோன்றும்!

விசேஷ தினங்களிலும், பண்டிகைகளின் போதும், கடவுளுக்கு நைவேத்தியம் செய்வதற்காகவும் வாழைப் பழத்தை உபயோகிக்காமல் இருக்க மாட்டோம். அந்தச் சந்தர்ப்பங்களில் பழத்தையும் தின்று வைப்போம். ஆனால் அதைத் தின்ன வேண்டும், தினமும் தின்று வரவேண்டும் என்று திட்டம் போட்டுத் தின்று வரும் வழக்கம் சில வருஷங்களுக்கு முன்தான் ஆரம்பித்தது. இப்போது அது ஒரு 'பாஷனா'கப் போய் விட்டது.

இப்போது சாப்பாடு தொண்டை வரையில் நிரம்பி விருந்தால்கூட ஒரு பழத்தையும் திணித்து வைக்கிறோம்.

சாதாரணமாக, நாம் வாழைப் பழத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதில்லை; யோசனை செய்து பார்ப்பதுமில்லை. சில சமயம் பத்திரிகைகளில் ''ஒரு வாழை மரம் இரண்டு தார் போட்டது'' ''ஒரு வாழை மரத்தின் நடுப் பாகத்திலிருந்து தார் கிளம்பியிருக்கிறது'' என்பன போன்ற செய்திகள் வந்தால் அதைப் பற்றிப் பேசுவோம். இப்போது அதைப் பற்றிப் பேச வேறு ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது.

ரஷ்யாவில், மாஸ்கோ நகரத்தில் கம்யூனிஸ்டுகள் கடைகளில் க்யூ வரிசையில் நின்று வாழைப் பழம் வாங்கித் தின்கிறார்களாம். ரஷ்யப் பெண்மணிகளுக்கு மிகவும் பிடித்திருக்கிறதாம். பழங்கள் நமது தேசத்திலிருந்து போனவை. பழம் ஒன்று எண்பது நயா பைசா வீதம் விற்கிறார்கள். விலையைப் பற்றி நாம் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. அங்கே கால் செருப்புகளே ஐம்பது, அறுபது ரூபாய் என்று விலையாம்!

கம்யூனிஸ்டுகளான ரஷ்யர்களுக்கு வாழைப் பழம் புதிதே தவிர, மற்ற நாட்டு வெள்ளைக்காரர்கள் எத்தனையோ வருஷ காலமாக அதைத் தின்று அனுபவித்து வருகிறார்கள். அமெரிக்கர்களுக்கு வாழைப்பழம் மிகவும் பிடிக்கும். அங்கே ஒரு பழக் கம்பெனி சொந்தத்தில் நூறு கப்பல்களை வைத்துக் கொண்டு பழ இறக்குமதி செய்து வருகிறது. வாழைப் பழம், இந்தியா, மலேயா, ஆஸ்திரேலியா, அமெரிக்கா, தென் அமெரிக்கா முதலிய தேசங்களில் விளைகிறது.

ஆனால் இந்தியாதான் வாழைப் பழத்துக்குப் பிறந்தகம். ஸ்ரீ ராமர் வனவாசத்தின் போது தங்கியிருந்த சித்ரகூட ஆசிரமத்தைச் சுற்றி வாழை மரங்கள் இருந்ததாக ராமாயணத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. கிரேக்க மன்னன் அலெக்ஸாந்தர் இந்தியாவுக்கு வந்த போது வாழைப் பழத்தைப் பார்த்து ஆச்சரியப்பட்டானாம். ரிஷிகள் எல்லாரும் வாழைமர நிழலில் அமர்ந்து, வாழைப் பழங்களைத் தின்றே வேதாந்த ரகசியங்களைக் கண்டு பிடித்தனர் என்று அவர் நினைத்தார். அதனால் வாழைப் பழத்துக்கு அறிஞர்களின் பழம் என்று பெயர் வைத்து விட்டார்.

தமிழ் நாட்டில் தமிழ் தோன்றிய போதே வாழைப் பழம் தோன்றி விட்டது. ஆனால் அதன் துரதிர்ஷ்டம், அது தன் பெயரை எல்லாரும் சரியாகச் சொல்வதற்குக் கொடுத்து வைக்கவில்லை. தமிழ் பேசுபவர்கள் முக்கால்வாசிப் பேர்கள் 'வாளப்பளம்' என்கிறார்கள். சின்னஞ் சிறு குழந்தைகள் 'வாயைப் பயம்' என்கின்றன.

முதன் முதலில் தஞ்சை ஜில்லாவில் காவிரி நதிப் படுகைகளில் பூவன் வாழை மரம் தோன்றியது. பிறகு மெத்தென்ற ரஸ்தாளி, பேயன் வாழைகள் தலையெடுத்தன. நாளடைவில் மற்ற ஜில்லாக்களிலும் அந்த அந்த ஜில்லா மண்ணுக்கேற்ற வாழைகள் உற்பத்தியாயின. பச்சை நாடன், பச்சை வாழை, தோட்ட வாழை, மலை வாழை, இப்படி. மலையாளத்தில், மலையாளிகளுக்கு என்று உலகத்திலேயே தனிப்பட்ட ரகமான நேந்திரன் வாழையைக் கடவுள் சிருஷ்டித்துக் கொடுத்திருக்கிறார். மற்றப் பழங்களை அவற்றின் தோலை உரித்துத் தின்னலாம். ஆனால், இந்த நேந்திரனை வேக வைத்தே தின்பது வழக்கம்.

பழம் வைத்து நைவேத்தியம் செய்வதென்றால், பூவன் பழத்தைத்தான் குறிப்பிடுவது வழக்கம். ஆனால், இப்போது நாம் எல்லா விதமான வாழைப் பழங்களையும் உபயோகிக்கிறோம் — பிளாஸ்டிக் பழத்தைத் தவிர.

பெரியவர்கள் — பழைய காலத்தவர்களைப் பற்றிச் சொல்கிறேன் — சாதாரணமாக, ''எனக்கு என்று சமையல் செய்து கொண்டிருக்க வேண்டாம். இரண்டு வாழைப் பழத்தைத் தின்று விட்டுப் பாலைக் குடித்து விட்டு அக்கடா என்று படுத்துக் கொள்கிறேன்'' என்பார்கள். 'ஐயோ பாவம், முக்கால் பட்டினி' என்று நாம் பரிதாபப்படுவோம். விஷயம் என்னடா வென்று பார்த்தால், அவர்கள் நம்மைப் பரிகசித்து மனத்துக்குள் சிரித்துக் கொண்டேதான் அந்த 'அக்கடா'வைச் சொல்லியிருக்கிறார்கள் என்று தெரிகிறது.

ஏனென்றால் வாழைப் பழம் மற்றப் பழங்களைப் போல வெறும் சாறு மட்டும் அடங்கியதல்ல. அது வயிற்றை நன்றாக நிரப்பி விடும் உணவுப் பழம். உணவை ஜீரணிக்க உதவும். உடலுக்கு வலிமையை அளிக்கும் பலவிதமான சத்துக்கள் அதில் இருக்கின்றன.

கார்போ ஹைட்ரேட், புரோட்டீன், — கொழுப்பு, இரும்பு, ஸோடியம், பொட்டாஷியம், மக்னீஷியம், கந்தகம், பாஸ்பரஸ், வைட்டமின்கள்: ஏ, பி., ஸி. டி. இத்தனையும் அதில் அடங்கி யிருக்கின்றன. அதில் புரோட்டீன் சத்து குறைவு. அதைப் பூர்த்தி செய்யத்தான் அந்தச் சத்து நிறைந்துள்ள பாலைச் சேர்த்துக் கொள்கிறார்கள். ஆகவே 'பாலும், பழமும்' எல்லாச் சத்துக்களும் அடங்கிய, உடலை எந்த விதத்திலும் அசௌகரியப்படுத்தாத பரிபூரண உணவு ஆகும்.

வாழைப் பழத்தில் மிக அதிகமாக உள்ள கார்போ ஹைட்ரேட் சத்து உணவைச் சுலபமாக ஜீரணிக்க உதவி செய்து, உடலுக்கு ஊக்கத்தையும் அளிக்கிறது. வயிற்று வலி, மலச் சிக்கல், குடல் வலி, வயிற்றில் கடமுடா வென்றிருப்பது இவற்றுக்கெல்லாம் வாழைப் பழம் மிகவும் நல்லது.

ஆனால் வாழைப் பழம் தின்பதனால் நல்ல பலனேற்படுவதற்கு அது பழுத்துப் பக்குவமானதாக இருந்தாக வேண்டும். மற்றெல்லாப் பழங்களுக்கும் இதற்கும் ஒரு முக்கிய வித்தியாசம். மற்றவை போல் இது மரத்திலேயே பழுத்தால் நன்றாயிராது. அதன் முக்கியமான சத்துக்களும் குறைந்து விடும். அதற்காகத்தான் முக்கால் காயாக இருக்கும் போதே வாழைத் தாரை வெட்டி விடுகிறார்கள்; பிறகு பழுக்க விடுகிறார்கள். அல்லது கொடாப்புப் போட்டுப் பழுக்க வைக்கிறார்கள்.



பக்குவமான பழம் எப்படியிருக்கும்? மஞ்சள் வர்ண ரகப் பழத்தின் தோல் முழுதும் மஞ்சளாக மாற வேண்டும். அதன் நுனி கூடப் பச்சையாக இருக்கக் கூடாது. இந்த நிலைமையில் அது வாசனை அடித்துக் கொண்டு தின்பதற்கும் ஓரளவு ருசியுள்ளதாக இருக்கும். வயிற்றுக்குள் ஜீரணமாகி விடும்.

ஆனாலும் அது இன்னும் பக்குவப்பட்டிருக்க வில்லை. அதன் மீது பழுப்பு, கறுப்பு வர்ணப் புள்ளிகளும், கோடுகளும் தோன்ற ஆரம்பிக்கும். அப்போதுதான் அது நூற்றுக்கு நூறு வாழைப் பழமாகி விட்டிருக்கும். அப்படி முழுதும் பழுத்த பழம் நன்றாக மணம் வீசிக் கொண்டு அதிக இனிப்பாக இருக்கும். பழம் இந்த நிலைமைக்குமேல் சற்று அதிகம் பழுத்தாலும் கெடுதலில்லை. ஆனால் அத்தகைய பழங்களைக் கடையில் வாங்காதிருப்பது நல்லது. பலர் பக்குவமாகாத மஞ்சள் நிற வாழைக்காயைத் தின்றுவிட்டுப் பழம் தின்றேன், வயிற்றை வலிக்கிறது என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள்.

பழங்களுள் வாழைப்பழம் ஒன்றுதான் கிருமிகள் புகா இருக்கும்படி, அழகான, பலமான நாரினாலான தோல் உறைக்குள் இயற்கையாகப் 'பாக்' செய்யப்பட்டிருக்கிறது. அது மட்டுமா? உள்ளிருக்கும் பழத்தைத் தின்னப் போகிறவரின் கைதான் முதன் முதல் அதன் மீது படும். ஏனென்றால், அவர்தானே தோலை உரிக்கப் போகிறார்!

வாழைப் பழம் வருஷம் முழுதும் கிடைக்கக் கூடிய பழம். அதன் விலை எத்தனைதான் உயர்ந்தாலும் மற்றப் பழங்களின் விலையை விடக் குறைவாகவே இருக்கும். நாகத்தை மட்டும் அடக்கக்கூடிய பழமாயில்லாமல் உணவாகவும் டானிக்காகவும் அமைந்திருக்கும் ஒரே பழம் அது. இது எல்லாருமே வாங்கிச் சாப்பிடக் கூடிய பழமாதலால், 'ஜனதா பழம்' என்று அதற்குப் பட்டம் சூட்டலாம். இது உணவாக அமைந்திருப்பது மன்றிப் பல வியாதிகளைக் குணப்படுத்தும் மருந்துப் பழமாகவும் அமைந்திருக்கிறது.

"தினமும் ஓர் ஆப்பிள் தின்று வந்தால் வைத்தியர் நம் பக்கம் வரத் தேவையில்லை" என்பது ஆங்கிலப் பழமொழி. அந்த ஆப்பிள், நமது சுதேசி வாழைப் பழம் இரண்டிலும் ஒவ்வோர் அவுன்ஸ் எடுத்துக் கொண்டு அவற்றில் அடங்கியிருக்கும் சத்தின் அளவைப் பார்க்கலாம்:

| | வா. பழம் | ஆப்பிள் |
|---|---|---|
| கார்போ ஹைட்ரேட் | 10 கிராம் | 3½ கி. |
| பாஸ்பரஸ் | 14 மி.கிராம் | 6 மி. கி. |
| வைட்டமின் 'பி.' | 14 பங்கு | 11 பங்கு |
| கலோரி என்ற உஷ்ண அளவு | 43 | 16 |

எடைக்கு எடை எந்த விதமான சத்தும் வாழைப் பழத்தில் அதிகமாகவே யிருக்கிறது. ஒரு சிறிய ஆப்பிளின் விலைக்கு ஏழெட்டு வாழைப் பழங்களை வாங்கி விடலாம். விலை குறைவா யிருப்பதனாலேயே வாழைப் பழத்தை நாம் மட்டமாக மதித்து வருகிறோம் போலும்.



குழந்தைகளுக்கு வாழைப்பழம் கொடுக்கப் பலர் பயப்படுவார்கள். 'மப்பு' 'மந்தம்' எல்லாம் உண்டாகும் என்பார்கள். மலை வாழைப் பழத்தைக் குழந்தைகளுக்கு ஆறு மாதத்திலிருந்து கொடுத்து வரலாம். பழத்தை விரல்களால் நன்றாக அமுக்கி, அமுக்கிப் பக்குவமாக்கி விட்டுச் சிறிது சிறிதாகக் கொடுக்க வேண்டும். முதலில் கால் வாழைப்பழ அளவு கொடுக்கலாம். வயிறு சுத்தமாக ஆகிக் கொண்டு வரும். குழந்தைகளின் வயிறு சுத்தமா யிருந்தால் அப்புறம் வியாதி ஏது?

பழுத்த வாழைப்பழம் வயிற்றுக்குள் போன மாத்திரத்திலேயே அதிலுள்ள 'டெக்ஸ்ட்ரோஸ்' போன்ற

சர்க்கரைச் சத்துக்கள் இரத்தத்தோடு சேர்ந்து விடும். மற்றப் பாகம் ஜீரணமாக நேரம் பிடிக்கும். 'கார்போ ஹைட்ரேட்' என்ற உஷ்ண சக்தி சிறிது சிறிதாக வெளியாகிக் கொண்டிருக்குமாதலால் ஊக்கமும் சுறுசுறுப்பும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும்.

வாழைப்பழத்தைப் பெரியவர்கள் தின்பதைப்பற்றியோ தின்னாமல் இருப்பதைப் பற்றியோ நான் கவலைப்படவில்லை. குழந்தைகளுக்கும், படிக்கும் பெண்களுக்கும் தினமும் அவசியம் கொடுத்து வரவேண்டும் என்பதை வற்புறுத்துவதற்காகவே எழுதியிருக்கிறேன்.

மாணவிகள் இடைவேளைச் சிற்றுண்டியின் போது சாக்லேட்டும், சுவிங்கமும், பன் பாலும், பெப்பர்மிண்டும் தின்பதற்குப்பதில் தினமும் ஒரு வாழைப்பழமாவது தின்று வந்தால் சோர்வு ஏற்படாது.

பள்ளிக்கூடமோ, கல்லூரியோ விட்டு வீடு திரும்பும்போது முகம் சுண்டிப் போய் உடல் தள்ளாடிக் கொண்டிருக்க வேண்டியிராது. மத்தியான வேளைகளில் மலைப் பழம், பேயன்பழம் போன்ற இலேசான வகைப் பழங்களைச் சாப்பிட்டு வந்தால் உடலுக்கு மிகவும் ஆரோக்கியம்.

# தீவிர சாகுபடித் திட்டம்

நிஜமாகவே நிகழ்ந்ததோ, அல்லது நீண்ட கற்பனையின் விளைவோ தெரியாது. ''பாக்கேஜ் பிளான்'' (Package Plan) என்றால் என்ன என்று பொது அறிவுக்கான பரீட்சை ஒன்றில் தோன்றிய கேள்விக்குப் பதில் எழுதிய ஒரு நபர் 'வெள்ளத்தினால் பாதிக்கப்படும் பிரதேசங்களில் மக்கள் உணவுக்காகச் சிரமப் படும்போது சர்க்காரே மொத்தமாகச் சாம்பார் சாதம், தயிர் சாதம் தயாரித்துப் பொட்டலம், பொட்டலமாக விநியோகிக்கும் திட்டம்' என்று ஒரு போடு போட்டாராம்!

மேலெழுந்தவாரியாக இந்த நகைச்சுவையான பதிலை ஒதுக்கி விட்டாலும் அசல் பதிலின் சில அம்சங்கள் இந்தப் பதிலில் மறைந்திருக்கின்றன என்று கூடச் சொல்லலாம். விவசாயிகளுக்கான தேவைகள் அனைத்தையுமே சரியான நேரத்தில் தட்டில்லாமல், மொத்தமாகவும், சுலபமாகவும் அவர்களுக்குக் கிடைக்கச் செய்து, கவலை இல்லாமல் அவர்களைப் பயிர்த் தொழிலில் ஈடுபடச் செய்து அவ்வப்போது அவர்களுக்குத் தேவையான விவசாய நிபுணர்களின் யோசனை கிடைக்கச் செய்து, கண்டு முதலை மொத்தமாகக் கொள்வினை செய்யும் கொள்கைதான் இந்த பாக்கேஜ் பிளான் — அதாவது தீவிர சாகுபடித் திட்டத்தில் அடங்கியிருக்கிறது. அதிகரித்து வரும் ஜனத்தொகையின் தேவைக்கேற்ப அதிக தானியம் கிடைப்பதற்கான வழி என்று கூடச் சொல்லலாம்.

''பாரதத்தில் வளம் நிறைந்த விவசாய நிலத்துக்குப் பஞ்சமில்லை. அந்த நிலங்களிலேயே புதிய முறைகளைப் புகுத்தி உழவர்களுக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் ஒரே காலத்தில் கிடைக்க ஏற்பாடு செய்தால் அதிக உற்பத்திக்கு நிச்சயமாக வழி காணலாம்.''

1959ம் ஆண்டில் போர்ட் பவுண்டேஷன் (Ford Foundation) ஆதரவில் அமெரிக்காவிலிருந்து பாரதத்துக்கு விஜயம் செய்த பன்னிரண்டு விவசாய நிபுணர்கள் அடங்கிய கோஷ்டி ஒன்று மேலே கண்ட யோசனையை வெளியிட்டது. அந்த யோசனையின் அடிப்படையிலும் போர்ட் பவுண்டேஷன் உதவியுடனும் மத்திய சர்க்கார் 1960-61ம் ஆண்டில் ஏழு ராஜ்யங்களில் தலா ஒரு மாவட்டம் வீதம் தேர்ந்தெடுத்து இந்த அதிதீவிர மாவட்டச் சாகுபடித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். சென்னை ராஜ்யத்தில் தஞ்சை மாவட்டத்தைத் தேர்ந்தெடுத்தார்கள்.

அபிவிருத்தி செய்யப்பட்ட விதை நெல் ரகங்கள், நல்ல உரம், விவசாய சாதனங்கள், பூச்சி மருந்து வகைகள் எல்லாம் விவசாயிகளுக்கு எளிதில் கிடைக்க வழி செய்யப்பட்டிருக்கின்றன. விவசாய சாதனங்கள் பழுதடைந்தால், அவைகளை உடனுக்குடன் சரி செய்ய அருகிலேயே பட்டறைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

தேவையான பண வசதியை உடனுக்குடன் கடனாகக் கொடுத்து உதவ வசதி செய்யப் பட்டிருக்கிறது. நிலத்தின் பெறுமானத்துக்கும் கொடுக்கப்படும் கடன் தொகைக்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை. விவசாயியின் உற்சாகத்துக்கும் ஊக்கத்துக்கும் கொடுக்கப்படும் கடன் தொகைக்கும்தான் சம்பந்தம்.

இந்தத் திட்டத்தின் விளைவாக அதிக விளைச்சல் காணும் நல்ல ரக தானியங்களைச் சரியான விலைக்கு விற்றுக் கொடுத்து ஏற்கனவே கொடுக்கப்பட்டிருக்கும் கடன்களைச் சுலபமான தவணைகளில் கழித்து விவசாயிகளுக்கு நியாயமான லாபம் கிடைக்கவும் இந்தத் திட்டம் வழி வகுத்திருக்கிறது.

இப்போது ஏழு மாவட்டங்களில் அமுலில் இருக்கும் இந்த ஐந்து ஆண்டு தீவிர சாகுபடித் திட்டத்துக்கான செலவை 7.92 கோடி ரூபாய் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். இது விவசாயிகளுக்குத் தேவையான 29 கோடி ரூபாய் கடன் வசதித்தொகையைத் தவிர்த்து எடுக்கப்பட்ட கணக்கு.

இந்த 7.92 கோடி ரூபாயில் மத்திய சர்க்காரின் பகுதி 1.76 கோடி; ராஜ்ய சர்க்கார்களின் பங்கு 2.77 கோடி; மீதியை போர்டு பவுண்டேஷன் தந்துதவ முன்வந்திருக்கிறது.

கடன் வசதியான 29 கோடி ரூபாயையும் ரிசர்வ் பாங்க், கோவாபரேட்டிவ் பாங்குகள் மூலம் கொடுத்துத் திருப்பிப் பெற்றுக் கொள்ளும்.

இதனாலெல்லாம் அடிப்படை விளைச்சல் நாற்பதிலிருந்து அறுபது சதவிகிதம் வரை உயரக் கூடும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

திட்டத்தின் முடிவில் நிலம் மாத்திரம் வளம் பெற்றிருக்காது. கால் நடைகளின் நிலையும் வளம் பெறும். — **திருவேரகத்தான்.**





# வன இயல் கல்லூரி



மேலே: வன இயல் கல்லூரிக் கருகிலுள்ள மியூஸியத்தில் ஒரு காட்சி. கல்லூரி மாணவர்கள் காட்டுப் பிரதேசத்தில் காம்ப் போட்டிருக்கிறார்கள். வலது: கல்லூரி முதல்வர்.

விவசாயத் துறைக்கும் வனங்களின் பாதுகாப்புக்கும் இயற்கையாகவே உள்ள உறவை எடுத்துக் காட்டுவது போலத்தான் கோவை நகரில், விவசாயக் கல்லூரியும் வன இயல் கல்லூரியும் பக்கத்தில் பக்கத்தில் கூப்பிடுதூரத்திலேயே அமைந்திருக்கின்றன.

நகரத்தின் எல்லையிலே, சுமார் நூற்றி எழுபத்தைந்து ஏக்கரா நிலப் பரப்பின் நடுவே கம்பீரமாக எழுந்து நிற்கும் இந்தக் கல்லூரி பல்வேறு மாகாண அரசாங்கங்கள் அனுப்பிவைக்கும் சுமார் இருநூறு நபர்களை ஒவ்வொரு ஆண்டும் வன இயல் நிபுணர்களாக்கிப் பாரதத்தின் பல பகுதிகளிலும் பரவி நிற்கும் வனங்களைப் பாதுகாக்கும் பணிக்கு அனுப்பி வைக்கிறது. மற்றக் கல்லூரிகளில் படித்துத் தேர்ந்து வெளிவரும் மாணவர்கள், வேலை தேடும் போட்டியில் இறங்கி அவர்கள் அதிர்ஷ்டத்தைப் பரிசோதிக்க வேண்டும். இந்த அதிர்ஷ்டக் கல்லூரியிலோ, முன்பே தகுதியான விண்ணப்பதாரர்களைப் பரீட்சை மூலம் தேர்ந்தெடுத்து, பிறகு இந்தக் கல்லூரிக்கு அனுப்பிப் பயிற்சி பெறச் செய்து கையோடு வேலையையும் கொடுத்துவிடுகின்றன மாகாண அரசாங்கங்கள்.

வனப் பாதுகாப்பின் அருமையை, வனங்கள் தரும் வலிமை மிகுந்த மரங்களின் பலனை முதலில் உணர்ந்து, வன இயலுக்கு வித்திட்ட பெருமை முன்னாள் வைஸிராய் லார்டு டல்ஹௌஸியையே சேரும். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கப்பல் கட்டும் தொழிலுக்கும், இந்தியாவில் போட ஆரம்பிக்கப்பட்டிருந்த புதிய ரயில்பாதைகளின் நிர்மாணத்துக்கும் வலுவான மரங்கள் தேவை என்பதை உணர்ந்த அவர், இந்தத் துறையை அபிவிருத்தி செய்வதில் கவனத்தைச் செலுத்தினார். 1864ம் ஆண்டில் முதல் வனத் துறை இன்ஸ்பெக்டர் ஜெனரலாக நியமிக்கப்பட்ட பிராண்டிஸ் காட்டிலாகா அதிகாரிகளை ஜெர்மனியிலும் பிரான்ஸிலும் பயிற்சி பெறச் செய்தார். இந்தியாவில் முதல் வன இயல் பள்ளி 1878ம் ஆண்டில் டேராடூனில் தொடங்கப்பட்டது. 1906ம் ஆண்டில் அதற்குக் கல்லூரி அந்தஸ்து அளிக்கப்பட்டது. வன காவலர்களுக்குப் பயிற்சி அளிக்கும் கல்லூரி 1912ம் ஆண்டில் கோவையில் ஆரம்பிக்கப்பட்டது.

இந்தக் கல்லூரிக்கு முதல் பிரின்ஸிபாலாகப் பணியாற்றியவர் ஃபெனிஸ் பிரவுன். அவர் பெயரைக் கோவை வாசிகள் சுலபத்தில் மறக்க முடியாது. ஏனென்றால், இந்த வன காவலர் பயிற்சிக் கல்லூரி இருக்கும் தெருவுக்கே அவர் பெயரைக் கோவை நகர சபை சூட்டியிருக்கிறது. இப்போது கல்லூரி முதல்வராகப் பணியாற்றுபவர் திரு எம். பி. பீட்டர். இன்று மத்திய சர்க்காரே இந்தக் கல்லூரியின் நிர்வாகத்தை எடுத்து நடத்தி வருகிறது.

வனக் காவலர்களுக்கு இரண்டு ஆண்டுப் பயிற்சி இங்கு அளிக்கப்படுகிறது. பயிற்சி முடிந்ததும் அவர்களுக்கு ஒவ்வொரு வனப்

பிரதேசத்தை ஒதுக்கி அதற்கு அவர்கள் ரேஞ்சர்களாக அனுப்பப்படுகிறார்கள். அவர்கள் பணியாற்ற நுழையும் காடு அதிருஷ்டக் காடாக இருந்தால் அவர்கள் சீக்கிரமே உத்தியோகத்தில் முன்னேறி கெஜட் பதிவு அதிகாரிகளாக உயரலாம்.

பயிற்சியாளர்களுக்குத் தேவையான உடைகள், புத்தகங்கள், பரிசோதனைக் கருவிகள் எல்லாவற்றையுமே கல்லூரி நிர்வாகம் வழங்கி விடுகிறது. அதற்கான செலவைப் பயிற்சியாளர்களை அனுப்பி வைக்கும் வெவ்வேறு ராஜ்யங்கள் ஏற்றுக்கொள்கின்றன. சாப்பாட்டுச் செலவும் உட்படத்தான்.

இவர்களுக்கான ஹாஸ்டல் வசதியும் கல்லூரிக் கட்டடத்துக்குச் சமீபத்திலேயே அமைந்திருக்கிறது. விளையாட்டு வசதிகளும் நிறைய இருக்கின்றன. விதம் விதமான அபூர்வ மரம் செடி முதலியவற்றைப் பயிராக்கி அவைகளின் தன்மையை நேரடியாகத் தெரிந்து கொள்ளவும் விஸ்தாரமான இடம் போதுமான அளவுக்கு இருக்கிறது.

இந்தப் பயிற்சியாளர்கள் தாவர சாஸ்திரம், பூமி சாஸ்திரம், பலவிதப் பூச்சிகளைப் பற்றிய தகவல்கள், வன விலங்குகளின் இயல்புகள், ஓரளவு பொறியியல், எல்லாவற்றிலுமே அனுபவம் பெற வேண்டியிருக்கிறது. பெரிய பரிசோதனைச் சாலைகளும் இதற்காக அமைக்கப்பட்டிருக்கின்றன.

அவர்களுடைய பயிற்சிக் கால அளவில் பாதிக்கு மேலாகவே, அவர்கள் பாரதத்திலுள்ள பல் வேறு முக்கிய வனப் பிரதேசங்களுக்குச் சுற்றுலா போய் அங்குள்ளவற்றைப் பிரத்தியட்சமாகத் தெரிந்து கொண்டு வர வேண்டியிருக்கிறது.

இந்தக் கல்லூரி வட்டத்துக்குள்ளிருக்கும் 'வன'ப் பொருட் காட்சிச் சாலை வயதில் கல்லூரியைவிட முதிர்ந்தது. காஸ் என்னும் காட்டிலாகா அதிகாரியின் தீவிர முயற்சியால் 1902-ம் ஆண்டிலேயே தோற்றுவிக்கப்பட்டது. ஆனால் 'பெண் பிரசவிக்க டில்லியிருந்து வருகிறாள். உம் போர்ஷனைக் காலி பண்ணிக் கொடுத்தாக வேண்டும்' என்று வீட்டுச் சொந்தக்காரர், குடித்தனக்காரருக்கு ஏற்படுத்தும் நெருக்கடியை இரண்டாவது யுத்தம் இந்தப் பொருட்காட்சிச் சாலைக்கும் கல்லூரிக்கும் ஏற்படுத்தியது. வெளிநாட்டு அகதிகளுக்கு ஜாகை வசதி செய்து கொடுக்க, அவசரம் அவசரமாக இந்த மியூஸியத்தையும் கல்லூரியையும் காலி பண்ணினார்களாம். அநேக அபூர்வப் பொருள்கள் மலிவாக ஏலத்தில் விற்கப்பட்டனவாம். எஞ்சியதை ஓரிடத்தில் அடைத்துப் பூட்டி வைத்திருந்தார்கள். நல்ல வேளை! மீண்டும் சில வருடங்கள் கழித்துக் கல்லூரி திறக்கப்பட்ட போது, மியூஸியத்துக்கும் புத்துயிர் அளித்தார்கள்.

பொருட்காட்சிச் சாலைக்குள் நுழைந்த உடனேயே பார்ப்பவர்களைப் பிரமிக்க வைப்பது முன்னால் பஞ்சடைத்து நிறுத்தப்பட்டிருக்கும் முரட்டுக் காட்டு எருமை! மைசூர் கவர்னர் ஜெயசாம ராஜேந்திர வுடையார் அன்பளிப்பாகக் கொடுத்ததாம்.

நானூற்றி ஐம்பத்தி ஆறு ஆண்டுகளைக் கண்ட தேக்கு மரத்தின் பகுதியையும் காட்சிப் பொருளாக வைத்திருக்கிறார்கள். அந்த மரத்துக்கு ஐம்பதாவது வயது நடக்கும் போது வாஸ்கோடகாமா இந்தியாவுக்கு வந்தானாம்! அதன் முந்நூற்றி இருபதாவது வயதில் ஹைதராலி மைசூர் கத்தான் ஆனாராம்! அம் மரத்தின் குறுக்களவு ஏழடிக்குமதிகம்.

ஒன்றே முக்கால் டன் எடையுள்ள ஒரே சந்தன மரம் மற்றொரு காட்சிப் பொருள். அதன் இன்றைய மதிப்பு ரூபாய் இருபதினாயிரத்துக்கு மேலாகுமாம். இவைகளைத் தவிர பாம்பு வகைகள் பறவைகள் எல்லாம் விதம் விதமாக இருக்கின்றன. காட்சிச் சாலை நிர்வாகியாகப் பணியாற்றும் திரு சோமசுந்தரம், அலுப்படையாமல் உற்சாகத்துடன் ஒவ்வொரு 'அயிட்டத்'துக்கும் விளக்கம் கொடுக்கத் தயாராக இருக்கிறார்.

இன்று வளர்ந்து வரும் பல தொழில்களுக்குத் தேவையான பல மூலப் பொருள்களை நம் வனங்கள் அளிக்கின்றன. வனங்கள், வெள்ளத்தைத் தடுத்து நிறுத்தவும், நல்ல தண்ணீரை மக்களுக்குக் கொடுக்கவும் உதவுகின்றன. நில வெடிப்பு ஏற்படாமலும் அதனால் விவசாயத்துக்கான நிலங்கள் பாழாகாமலும் இருக்க வனங்கள், இயற்கையால் ஏற்படுத்தப்பட்ட காவலர்கள். ஆகவே, வனங்களை நல்ல முறையில் பராமரித்து அதன் வளங்களை அனுபவிப்பதன் மூலம் மறைமுகமாக நாட்டின் விவசாயம் அபிவிருத்தி அடையும்.



வன இயல் கல்லூரிக் கட்டிடமும் பாலம் அமைக்கப் பழகும் மாணவர்களும்





**வி**வசாயத்தில் விஞ்ஞான முன்னேற்றத்தைப் பற்றிப் பெருமையடித்துக் கொண்ட வாலிபன் விவசாயி ஒருவனிடம், ''கொஞ்ச நாளில் பாருங்க. ஓர் ஏக்கருக்கு வேண்டிய உரத்தை நம் கோட்டுப் பை ஒன்றில் நிரப்பிக் கொண்டு விடலாம்'' என்றான். அவன் விவசாயத்தைப் பற்றி நிறையப் படித்தவன்.

''ஆமாம்! ஆமாம்! அதில் விளையும் மாசூலையும் இன்னொரு கோட்டுப் பையில் நிரப்பிக் கொண்டு விடலாம்!'' என்று பதிலளித்தானாம் அந்த விவசாயி குத்தலாக.

அவன் விவசாயத்தில் ஈடுபட்டு உழைத்தவன். ஆகவே அவனுக்குத் தெரியும், விவசாயம் என்பது எவ்வளவு கடினமான காரியம் என்று.

ஆனால் உழைப்பு மட்டும் இருந்தால் போதுமா? விளைச்சல் பெருகி விடுமா? விவசாயிக்கு உதவியாகச் சிறப்பாகச் செயல்படக் கூடிய உபகரணங்களும் தேவைதான். அந்த உபகரணங்களைத் தயாரிப்பவன் விஞ்ஞானி. விவசாயியின் உழைப்பும் விஞ்ஞானியின் அறிவாற்றலும் ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டும் அதே சமயத்தில் ஒன்றுக்கொன்று அநுசரணையாகவும் தீவிரமாகச் செயலாற்றும் போதுதான் பயிர் செழிக்கும், நாடு நலமுறும்; மக்கள் இன்புறுவார்கள். ஆகவேதான் இந்த விவசாய இதழையொட்டி உழவனுக்கு உதவும் ஸ்தாபனங்கள் சிலவற்றுக்குக் கல்கி வாசகர்களை அழைத்துச் செல்வதெனத் தீர்மானித்தோம்.

**கோ**யமுத்தூரில் பாப்பாநாயக்கன் பாளையத்தில் தண்டாயுதபாணி பவுண்டரி இருக்கிறது. (இதற்கும் கிரிக்கெட் ஆட்டத்துக்கும் சம்பந்தமில்லை!) Foundary என்ற ஆங்கில வார்த்தைதான் 'பவுண்டரி' ஆகியிருக்கிறது. மின்சார விசையினால் இயங்கும் பம்ப் செட்டுகள் பலவிதத்தை இந்த வார்ப்படச் சாலையில் தயாரிக்கிறார்கள்.

இந்தத் தொழிற்சாலை 1924ம் வருடத்திலிருந்து மின்சார பம்புகளைத் தயாரித்து வருகிறது. இந்தத் தொழிற்சாலையை உருவாக்கியவர் காலஞ்சென்ற எஸ். நாராயணசாமி நாயுடு அவர்கள். இப்பொழுது அவரது குமாரர்களான திரு பாலகிருஷ்ணனும், திரு துரைசாமியும் இதை நிர்வகித்து வருகிறார்கள். 1933ம் வருடத்திலிருந்து கோயமுத்தூருக்கு அருகில் பைகாரா மின்சார விநியோகம் ஆரம்பமானதும் அந்த மின் சக்தியைப் பயன்படுத்திக் கொண்டு பம்பு செட்டுகளைப் பெருவாரியாக அளித்தனர். நீர் இறைக்கும் இயந்திரங்களை விற்பனை செய்வது அவ்வளவு இலேசான காரியமாயில்லை. அந்தக் காலத்தில் அயல்நாட்டுச் சரக்குகள்



# "வரப்புயர"

பி.எஸ்.மணி

வந்திறங்கியதால் போட்டி போடுவது மிகக் கஷ்டமாயிருந்தது. அதோடு விவசாயிகள் மாடுகள் கட்டிக் கவலை நீர் பாய்ச்சிப் பழக்கப்பட்டவர்களல்லவா? அவர்களது பழக்க வழக்கத்தை மாற்றிக் கொள்வது இலேசான செயலா? இதற்காக இந்தத் தொழிற்சாலையின் அதிபர்கள் விவசாயிகளின் வயல்களுக்குச் சென்று, குழாய்களையும் இயந்திரங்களையும் பொருத்தி விட்டு வந்து ஒரு வருடம் கழித்து அந்தப் பம்பு செட்டுகளுக்குரிய கிரயத்தை மெதுவாக வசூல் செய்தார்களாம். ஆனால் இன்று வருஷத்தில் 24,000 பம்ப் செட்களை உண்டாக்கி இந்தியா மட்டுமல்ல, ஆறு அயல் நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யக் கூடிய அளவுக்கு இத் தொழிலகம் உயர்ந்திருக்கிறது.

முதலில் நாம் அச்சு வார்ப்படச் சாலைக்குப் போகிறோம். இங்கேதான் இயந்திரக் குழாய்களின் ஆரம்ப கட்டம் தொடங்குகிறது. இந்தத் தொழிற்சாலைக்குப் பிரும்மாண்டமான வார்ப்படப் பிரிவு 1952ம் வருடத்திலிருந்து தனியாக இயங்குகிறது.

இந்த வார்ப்படச் சாலையில் பம்ப் செட்டுகளின் பாகங்கள் பலவற்றைத் தயாரிக்கிறார்கள். முதலில் குறிப்பிட்ட ஒரு பாகத்தின் மாதிரியை உயர்தர உலோகக் கலவையிலும் செய்து கொள்கிறார்கள். நன்றாகப் புளி போட்டுத் தேய்த்து வைக்கப்பட்ட செப்புப் பாத்திரம் போல் இது பளபளக்கிறது. இதை ஒரு பிரும்மாண்டமான இயந்திரத்தின் மையத்தில் பொருத்தி வைத்துச் சுற்றிலும் மண்ணைப் போட்டு நிரப்புகிறார்கள். இதற்கென்றே விசேஷமான மண் இந்தக் கோயமுத்தூர்ப் பகுதியில் கிடைக்கிறதாம்! இப்போது இயந்திரம் 'தட் தட் தட் தட்' என்று இயங்குகிறது. மண்ணைச் சமன் செய்வதுடன் அமுக்கிக் கெட்டிப்படுத்தவும் செய்கிறது.

உடனே மையத்திலுள்ள உலோக மாதிரியின் வடிவத்தில் மண்ணிலும் பிரதிமை கிடைத்து விடுகிறது. இந்த மண் பிரதிமையைத் தரையில் பரப்பி வைத்திருக்கிறார்கள். பிறகு இரும்பைக் காய்ச்சி இந்த மண் பிரதிமையில் விட்டு விடுவார்கள். உலோக மாதிரியைப் போலவே இரும்பிலும் கிடைத்து விடுகிறது. இரும்பை உருக்க மாபெரும் உலை இருக்கிறது. இரும்புக் கட்டிகள் ஒரு லிப்டில் உலைக்குப் போகின்றன. பிலாய் உருக்குச் சாலையிலிருந்து வரும் இரும்பு மட்டுமின்றி உடைந்து போன பழைய

---

1, 2. 'டெக்ஸ்மோ இண்டஸ்ட்ரீஸ்' தொழிற்சாலையும், கெஸ்ட்ரத் தோட்டமும். 3, 5, 6, 7, 8, 9 தண்டாயுதபாணி பவுண்டரியில். 4, 10. எல்ஜி தொழிலகமும், வலது கோடியில் எல்ஜி அதிபர்களும்.

இரும்புச் சாமான்களையும் துண்டுகளையும் உருக்கு உலையினுள் விட்டுக் கவிழ்க்கிறது.

மறுமுறை விப்டில் பழுப்பு நிலக்கரியும் சுண்ணாம்பும் கலந்த கலவை இரும்பு உலைக்குச் செல்கின்றன. இந்தக் கலவையில் சுண்ணாம்பு கலப்பதற்குக் காரணம் இரும்பிலுள்ள அசுத்தத்தை நீக்குவதற்குத்தான்.



நீர் இறைக்கும் இயந்திரத்தின் பல பகுதிகள் இப்படி வார்த்தெடுக்கப்பட்ட பிறகு தொழிற்சாலையின் மற்றொரு பகுதிக்கு அவை செல்கின்றன. இங்கே அவை டர்னிங் இயந்திரத்தில் கொடுத்து ஒழுங்காக்கப்படுகின்றன. பிறகு துளை போடப்பட்டு ஆணிகளால் இணைக்கப்படுகின்றன.

பம்ப் செட்டில் இரண்டு இரும்பு உறைகளுக்குள் இயங்கும் வட்ட வடிவமான சுழல் கருவிக்கு 'இம்பெல்லர்' என்று பெயர். இது சுழல்வதால் இரும்பு உறைகளுக்குள் சூன்யப் பிரதேசம் உண்டாக்கப்படுகிறது. கிணற்றில் நீர்மட்டத்திலோ காற்றின் அழுத்தம் அதிகமாக உள்ளது. ஆகவே சூன்யப் பிரதேசத்தில் தண்ணீர் இழுக்கப்படுகிறது. இம்பல்லர் சுழன்று சுழன்று தண்ணீரை இறைத்துக் கொட்டிவிடும்.

இந்தத் தண்டாயுதபாணி தொழிற்சாலையில் நானூறு பேர்களுக்கு மேல் பணி புரிகிறார்கள். மோட்டார் உற்பத்தியிலும் தண்டாயுதபாணி தொழிற்சாலை ஈடுபட்டிருக்கிறது. கிட்டத்தட்ட எழுபத்தைந்து மோட்டார்களைத் தயாரித்து, அவை பரிசீலிக்கப்பட்டுத் தயாராயிருந்ததைக் கண்டோம்.

'தெற்கு மாஞ்செஸ்டர்' என்று புகழ் பெற்ற பஞ்சாலைத் தொழில் நகரமான கோயமுத்தூரில் இந்தியாவின் முக்கிய தொழிலாகிய விவசாயத்துக்குரிய தொழிற்சாலைகளும் நிறைய இருக்கின்றன. இவற்றையும் இன்னும் பலதரப்பட்ட தொழிற்சாலைகளையும் பார்க்கும்போது 'மெத்த வளருது மேற்கே' என்னும் சொல்லை இத்தொழில் நகரம் விரைவில் பொய்யாக்கி விடும் என்ற எண்ணமே ஏற்படுகிறது.

கோவையில் விவசாயத்துக்கான உபகரணங்களைத் தயாரிக்கும் மற்றொரு தொழிற்சாலை எல் வி டி.

சின்னஞ் சிறு ஸ்தாபனமாக இரண்டரை வருஷங்களுக்கு முன்பு இருந்த எல்விடி மிகக் குறுகிய காலத்தில் மிகப் பெரிய ஸ்தாபனமாக வளர்ந்து இரண்டரை லட்சத்துக்கு மேல் வாணிபம் செய்யக்கூடிய நிலைக்கு வந்திருக்கிறது. இதன் உரிமையாளர்களில் ஒருவரான திரு லக்ஷ்மண செட்டியார் எங்களை வரவேற்று மற்றொருவரான திரு ராமசாமி நாயுடுவிடம் தள்ளி விட்டார், தொழிற்சாலையைச் சுற்றிக் காண்பிக்கும்படி.

இங்கே தயாரித்து வைக்கப்பட்டுள்ள மேழிகளில்தான் எத்தனை வகை! அகலமாகவும் ஆழமாகவும் உழவும், உழப்படும் போது அள்ளப்படும் மண்ணை இறகுகளினால் உடைத்துப் பொடியாக்கிப் புரட்டி வீச வல்லதுமான நவீன இரும்புக் கலப்பையை இந்த ஸ்தாபனத்தார் தயாரிக்கிறார்கள். உழும்பொழுது தன் இரண்டு இறகுகளினாலும் மண்ணைப் பக்கவாட்டில் ஒதுக்கவும், கூர்மையான கொழுமுனையால் ஆழமாக உழவும், உழவனின் வேலைக் களைப்பைக் குறைக்கவும் சாதாரண பார் ஓட்டும் கலப்பை இங்கே தயாராகிறது. உழுத நிலத்தில் மண்ணின் மேல் பகுதி இறுகியும், புல் பூண்டு முளைத்தும் இருக்கும்போது கத்திக் கலப்பையைக் கொண்டு உழுதால் இறுகிய மண் தூளாவதுடன், புல் பூண்டுகள் களையப்பட்டு மண்ணில் புதைந்து எருவாகவும் பயன்பட வழி செய்கிறது. வரப்பு கட்டுவதற்கு இயந்திரம் இருக்கிறது. இந்த இயந்திரத்தை இரண்டுமாடுகளுடன்இணைத்து இரண்டு ஆட்கள் வேலை செய்தால் ஆறு ஏக்கர்களில் வெகு சீக்கிரத்தில் பாத்தி கட்டி விடலாம். பன்னிரண்டு எக்குத் துடுப்புகளுள்ள சேறு கலக்கும் யந்திரத்தை மாடுகள் இழுத்துச் செல்லும்போது, நன்றாகச் சுழன்று மிருதுவானதும் நெருக்கம் குறைந்துள்ளதுமான மண் மேல் மட்டத்தில் தங்க வழி செய்கிறது. உரச்செடிகளைப் புதைக்கும் யந்திரத்தைக் கூட இந்த எல்விடி ஸ்தாபனத்தார் தயாரிக்கிறார்கள். களை பிடுங்கக் கொத்துக் கலப்பையும், மேடு பள்ளங்களைச் சமன் செய்யும் மண் வாரியும் இங்கே உற்பத்தி செய்யப்படுகின்றன.

''இந்த விவசாய உபகரணங்களைத் தயாரிக்க நீங்கள் உபயோகிக்கும் இயந்திரங்களெல்லாம் அயல்நாடுகளிலிருந்து வந்தவையா? இப்பொழுது அன்னியச் செலாவணி நெருக்கடி காரணமாகப் புதிய யந்திரங்கள் தருவிப்பது கஷ்டமாயிற்றே!'' என்று திரு ராமசாமியிடம் கேட்டோம்.

''எதற்கும் அன்னிய நாட்டையே எதிர் பார்த்துக் கொண்டிருக்கலாமா? கரும்புச் சாறு பிழிய டென்மார்க்கிலிருந்து இந்த இயந்திரத்தை வரவழைத்தோம். இப்பொழுது இதே போன்ற இயந்திரத்தை நாங்களே உற்பத்தி செய்யத் தொடங்கி விட்டோம்!'' என்றார் திரு ராமசாமி.

அதோடு மட்டுமல்ல. மரம் அறுக்கும் இயந்திரம், மரம் இழைக்கும் இயந்திரம் என்றெல்லாம் மேனாட்டுப் பாணியில் இவர்களே குறைந்த செலவில் தயாரித்து விடுகிறார்கள்! பெருமிதத்துடன் அவற்றை அவர் ஓட்டிக் காட்டியபோது, அவை போட்ட சத்தம் 'மனிதன் மனம்வைத்தால் நடக்காதது இல்லை' என்று அடித்துக் கூறுவது போலிருந்தது. இயந்திர நுணுக்கங்கள் பலவும் திரு ராமசாமிக்குத் தெரிந்திருப்பதால் அவரே 'கோதா'வில் இறங்கி விடுகிறார். உழைப்பாளிகள் அவரது செயல் திறனைக் கண்டு வியக்கிறார்கள். அவர்களும் உற்சாகத்துடன் உழைப்பில் அதிக கவனம் செலுத்தத் தொடங்கி விடுகிறார்கள். இந்தத் தொழிற்சாலை வெகு சீக்கிரம் உன்னத நிலைக்கு வந்ததற்கு இது ஒரு காரணமாகும்.

திரு ராமசாமியின் இயந்திர நுணுக்க அறிவால், தயிர் கடையும் இயந்திரம்,



# பாரெக்ஸ் புகட்டும் பருவம்

உங்கள் குழந்தைக்கு ஏறக்குறைய நான்கு மாதம் என்றால் அதுவே பாரெக்ஸ் புகட்டும் பருவம். பக்குவம் செய்து தயாரான கஞ்செய் தானிய உணவே பாரெக்ஸ்; வைட்டமின் Dயும் தாதுப் பொருள்களும் செறிந்தது. பற்களையும் எலும்பு களையும் வலுவாக்குவதற்கான எல்லாச் சத்துக் களும் உள்ளடக்கி, திடமான வளர்ச்சிக்கு உதவுவது பாரெக்ஸ். இதன் தயாரிப்பாளர்கள்: 'குழந்தை உணவுப் புகழ்' கிளாக்ஸோ.

பாரெக்ஸ்—ஓர் கிளாக்ஸோ தயாரிப்பு








இலவசம்! 'தி பாரெக்ஸ் கைடு'(ஆங்கிலம்) குழந்தைகளை ஊட்டி வளர்ப்பதுபற்றிய இந்நூலை வேண்டுவோர், தபால் செலவுக்காக 15 க. பைசா தபால் வில்லைகளை அனுப்பி, எழுதுக: பாரெக்ஸ், தபால் பெட்டி 202, பம்பாய்—1.

FA. 3-78 TM



# பீனிக்ஸ் ஆடைகள்
## நவ நாகரீகக் குறிப்புகளில்

முதலிடம் பெறுகின்றன



வாயில்கள்



பாப்ளின்கள்



ஸூட்டிங்குகள்



**பீனிக்ஸ் மில்ஸ்**





RPY-5-TAM

நிலக்கடலை தோல் உரிக்கும் இயந்திரம் முதலியவை உருவாகியிருக்கின்றன.

''ஸார்! தனியாக ஒரு விவசாயி வேர்க்கடலை உரித்தானானால் ஒரு படி உரிக்கலாம். எங்களிடமுள்ள இந்த இயந்திரத்தை உபயோகப்படுத்தினால் அரை மூட்டையை அவன் இலேசாக உரித்து விடுவான்!'' என்று விவசாயியின் வேலைச் சுமையைக் குறைத்த திருப்தியுடன் அவர் விளக்கினார்.

அவரும் மற்றத் தொழிலாளர்களும் இங்கே பயமின்றிச் சர்வ சாதாரணமாக நடந்து சென்றது எங்களுக்கு மிகுந்த வியப்பை அளித்தது. ஏனெனில், எல்லிடி தொழிற்சாலைக்குள் நுழைந்தவுடன் கால் வைக்க இடமில்லாமல் இயந்திரங்களும், தயாரான பொருள்களும் குவிந்துள்ளன. தலைக்கு மேலே பல இயந்திரங்கள் ஓடுகின்றன. கீழேயும் பல இயந்திரங்கள். இப்படி இடைஞ்சலான இடத்தில் நாங்கள் பயந்து நடுங்கிக் கொண்டே நடந்து போனோம். பழக்கம் காரணமாக மற்றவர்கள் பதறாமல் சென்ற போதிலும் எங்களுக்குச் சற்றுத் தயக்கமாகவே இருந்தது.

''இவர்கள் தயாரித்துள்ள இத்தனை அபாரமான விவசாயத் தொழிற் கருவிகளையும், புதிய இயந்திரங்களையும் பார்க்கையிலேயே இவர்களது திறமையை எடை போட்டு விடலாம்!'' என்றார் கூட வந்த நண்பர்.

''ஸார்! எடை போடும் இயந்திரமும் நாங்கள் தயாரித்தளிக்கிறோம். எங்கள் விசேஷத் தயாரிப்பு அது!'' என்று திரு ராமசாமி சொன்னபோது நாங்கள் திகைத்து விட்டோம். 'இவர்கள் பலே கைகாரர்கள்' என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டே அவர்களிடம் விடைபெற்றோம்.

இவ்விரண்டு ஸ்தாபனங்களையும் தவிர, பண்ணைத் தொழிலகம் (Farm Industries) ஒன்றும் கோவைக்கருகிலேயே பெரியநாயக்கன் பாளையத்தில் இருக்கிறது. கோவை மாவட்டம் தொழில் துறையைப் போலவே விவசாயத் துறையிலும் வெகு வேகமாக முன்னேறி வந்தபோதிலும் இங்குள்ள விவசாயிகள் மழையையே அதிகமாக நம்பி இருந்து வந்தார்கள். 1947-48ல் மழையேயில்லாமல் போனதால் கிணறுகள் வற்றி விட்டன. விவசாயிகளது துயரத்தைப் பார்த்து மனம் நெகிழ்ந்த பார்த்தசாரதி, துரைசாமி ஆகிய இருவரும் மானம் பார்த்த பூமியையும் வேலை இன்றிக் குடியானவர்கள் உழுது பயிரிட உதவும் வகையில் ஏதேனும் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தார்கள். பூமியைப் பல அடி ஆழம் வரை குடைந்து சென்று நீர் இருக்கும் இடத்தை அடைந்து அந்நீரை நில மட்டத்துக்குக் கொண்டுவரும் சாதனங்களை உற்பத்தி செய்ய வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார்கள். உடனேயே 1948லேயே மேற்கூறிய பண்ணைத் தொழிலகம் செயல் புரிய ஆரம்பித்துவிட்டது.

ஐம்பதடி ஆழம் வரை பூமியைக் குடையும் இயந்திரங்களில் தொடங்கியவர்கள், இன்று ஐந்நூறு அடி ஆழம் வரை பூமியினுள் ஊடுருவிச் செல்லும் இயந்திரங்களைத் தயாரிக்கிறார்கள். நாட்டின் பல பாகங்களிலும் மிகப் பெரிய அளவில் கட்டப்படும் குந்தா, சபரிகிரி, சரவதி போன்ற பலப்பல நீர் மின்நிலையத் திட்டங்களில் இவர்களது போரிங் மிஷின்கள் பெரிதும் பயன்பட்டு வருகின்றன. நம் நாட்டில் போரிங் மிஷின்களைத் தயாரிக்கும் ஐந்தே நிறுவனங்களுள் இதுவும் ஒன்று என்பது குறிப்பிடத் தக்கது.

திரு பார்த்தசாரதி நீண்ட நாளைய கல்கி அன்பர். பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயருக்குத் தெரியாமல் தாம் 'பார்த்திபன் கன'வைப் படித்த நாளிலிருந்து தொடங்கிப் பேச ஆரம்பித்த அவர் 'விவசாய இதழ்' என்று கேள்விப்பட்டதும் உற்சாகமாகத் தமது தொழிற்சாலையைச் சுற்றிக் காண்பித்ததுடன், ''இந்தப் பக்கம் வாருங்கள் ஸார்! ஓர் அதிசயம் காத்திருக்கிறது உங்களுக்கு'' என்று தொழிலகத்தின் பின்புறத்துக்கு அழைத்துப்போனார்.



## காளைச் செல்வம்

தி. சு. பாலசுப்பிரமணியம்

சேற்றிடைக் குளம்பு சிக்கச்
செங்கதிர் எழுச்சி தொட்டு,
நாற்றினைப் பறித்து வைக்க
நல்லதோர் உழவைச் செய்து,
சாற்றிய கதிரின் தாளைச்
சத்தென வுண்டு யிர்க்கும்,
போற்றிட வல்ல தெய்வம்,
பொலிவுறுங் காளைச் செல்வம்!

அங்கே நாங்கள் கண்ட காட்சி எங்கள் கண்களை அகல விரியச் செய்தது. நாவில் நீர் சுரந்து சொட்ட ஆரம்பித்தது.

''சவுக்குத் தோப்பு, தென்னந்தோப்பு என்றெல்லாம் பார்த்திருக்கலாம். கொய்யாத் தோப்பைக் கண்டதுண்டா?'' என்று கேட்டார் அவர்.



அதுவும் எப்படிப்பட்ட கொய்யா? ஆரஞ்சுப் பழத்தை விட அளவில் பெரியதாய், தளதளத்துப் பளபளக்கும் ரசம் மிக்க கொய்யாக் கனிகள்! எங்கள் கைகள் பரபரத்தன, கொத்துக் கொத்தாய்த் தொங்கும் கனிகளைப் பறிக்கத்தான்!

''தொடாதீர்கள், ஸார்!'' என்று கூச்சல் போட்டார் பார்த்தசாரதி. ஷாக் அடித்தது போல் துள்ளிக் குதித்துப் பின்வாங்கினோம்.

''இதிலே பூச்சி மருந்து அடிக்கப்பட்டிருக்கலாம், ஜாக்கிரதை! போர்டு தொங்குகிறதா, பாருங்கள்'' என்ற பார்த்தசாரதி தொடர்ந்தார்: ''ஒரு சமயம் நான் சென்னையில் இருக்கும்போது நடிகவேள் எம். ஆர். ராதா காரிலே கோவைப் பக்கம் போயிருப்பதாகக் கேள்விப்பட்டேன். உடனே அலறிப் புடைத்துக் கொண்டு இங்கே நம் வீட்டுக்குப் போன் செய்து, வாசலிலேயே காவலிருங்கள்; அவர் வந்தால் கொய்யாத் தோட்டம் பக்கம் போக விடாதீர்கள் என்று உஷார்ப்படுத்தி வைத்தேன். இல்லையானால் மனுஷன் காரை ரோட்டில் நிறுத்திவிட்டு இறங்கி விடுவிடு வென்று நேராகத் தோப்புப் பக்கம் போய் மருந்தடிக்கப்பட்ட கொய்யாக்களை ஒரு கை பார்த்திருப்பார். கொய்யாவென்றால் அவருக்குக் கொள்ளை ஆசை!'' திரை உலகுக்கு நடிகவேளைத் தாம் காப்பாற்றிக் கொடுத்த மகிமையைக் கூறி முடித்தார் பார்த்தசாரதி.

இதற்கெல்லாம் நாங்கள் பயந்துவிடுவோமா என்ன? ஒருடஜன் பழங்களை நன்றாகக் கழுவித் தரச் சொல்லி வாங்கிக்கொண்டு தான் அங்கிருந்து கிளம்பினோம்!

ஜப்பானில் சமீப காலமாகத் தொழிற்சாலைகள் ஏராளமாகப் பெருகிவிட, ஜப்பானிய விவசாயிகள் பலர் தொழிலகங்களில் வேலை செய்யச் சென்று விட்டனர். குடும்பத்தில் உள்ள நாலைந்து பேர் உழைத்த நிலத்தில் இன்று பாடுபட ஒருவனே மிஞ்சியிருக்கும் நிலை. அப்போது பூதாகாரமான புல்டோஸர்களையும் ராட்சத டிராக்டர்களையும் கொணர்ந்து எல்லோருடைய நிலத்தையும் ஒரே மடியாக உழுதுவிட்டார்களா? இல்லவே இல்லை! ஏன்? உலகமே வியக்கும் அளவுக்குத் தொழில் வளம் பெருகியுள்ள ஜப்பானிய நாட்டில் இது சாத்தியமில்லாமலா போய்விட்டது?

அதுவல்ல காரணம்; அவர்கள் மனிதனுடைய குண இயல்புகளுக்கும் நியாயமான அபிலாஷைகளுக்கும் மதிப்புக் கொடுத்தார்கள். குடும்பத்தில் மீதமிருந்த அந்த ஒருவன் தனது துண்டு நிலத்தைத் தானே உழுது பயிரிட வசதியாக அவனுக்குச் சிறு டிராக்டரைச் செய்தளித்தார்கள். அதைக் கரங்களால் பிடித்துக் கொண்டு அதன் பின்னாலேயே நடந்து போவான் விவசாயி. இது போன்ற எண்ணற்ற டிராக்டர்கள் குடியானவர்களுக்குப் புதிய உற்சாகமூட்டின; விளைச்சலும் பெருகியது.

ஆனால் நம் நாட்டிலோ வரப்புகளை எடுத்துவிட்டுக் கூட்டுப்பண்ணை அமைத்துச் சகலத்தையும் இயந்திர மயமாக்கிவிடலாம் என எண்ணிச் சட்டம் இயற்றி வருகிறார்கள். பிற நாடுகளைக் காப்பி அடிப்பதில் தவறில்லை. ஆனால் விடைகள் தெரியாதவனைப் பார்த்துக் காப்பியடிக்கும் மாணவன் தானும் கோழி முட்டைதானே வாங்க நேரிடும்?

விவசாயிகளுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் உதவலாம். ஆனால் அவன் உரிமைகளைப் பறிக்கலாகாது. அவன் உற்சாகமாக இருந்தால் நாடே உயரும். அவன் துயருற்றாலோ கேட்கவே வேண்டாம். இதையெல்லாம் உணர்ந்துதானே ஔவைப் பாட்டியும், 'வரப்புயர' என்ற சொல்லிலே நாட்டின் வளமனைத்தும் அடக்கிக் கூறி, உழவனுக்கு ஏற்ற மளித்திருக்கிறார்.

**மேழிபிடிக்குங்கை வேல்வேந்தர் நோக்குங்-**
**கை**

**ஆழிதரித்தே அருளுங்கை — சூழ்வினையை**
**நீக்குங்கையென்றும் நிலைக்குங்கை நீடூழி**
**காக்குங்கை காராளர்கை!**

## உற்பத்தி குறைகிறது

நிகழும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதல் இரண்டு வருஷங்களில் உணவு உற்பத்தி சரியாக இல்லை என்பது கவலையைத் தருகிறது. இரண்டாம் திட்டத்தின் இறுதியில் 81 மில்லியன் டன்னாக இருந்த உணவு உற்பத்தி மூன்றாம் திட்டத்தின் முதல் ஆண்டில் 79 மில்லியன் டன்களாகவும், இரண்டாம் ஆண்டில் 77.5 மில்லியன் டன்களாகவும் குறைந்து விட்டது. அரிசி உற்பத்தி மட்டும் மூன்றாம் திட்டத்தின் முதல் ஆண்டில் 1.5 மில்லியன் டன் குறையும் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் உண்மையில் 2.8 மில்லியன் டன் குறைந்து விட்டது. விவசாயிகளுக்கு வசதிகளை எத்தனையோ மடங்கு பெருக்கிக் கொடுத்தும் இந்த உற்பத்திக் குறைவு ஏற்படக் காரணம் என்ன? நிலச் சீர்திருத்தம் என்ற பெயரால் ஏற்பட்டுவிட்ட ஒரு நிச்சயமற்ற நிலைதான்! கூட்டுப் பண்ணைகளையே அரசியல் ஜீவநாடியாகக் கொண்ட ருஷ்யாவே அமெரிக்காவிடம் கோதுமை வாங்கும்போது நம் நாட்டில் கூட்டுறவுப் பண்ணைகள் அமைப்பதில் அரசாங்கம் தீவிர ஆர்வம் காட்டி வருவதுதான்! விவசாயத்தில் அனாவசிய அரசியலைப் புகுத்தினால் வார்த்தைகள்தான் விளையும், உழவனுக்கு ஊக்கம் குன்றும் என்பதைத்தான் இது காட்டுகிறது.

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது. ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்.



**இளமையில் வழுக்கை**

இக்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.




**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது




'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-2 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1

# Silvikrin

**சில்விக்ரீன்— கேச ஆரோக்கியத்துக்கான வழி**

SP/1/P/7/64

# அறிவுக் கனலே, அருட் புனலே!



ரா. கணபதி

49

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் குரு முகமாக ஸ்ரீராம மந்திரம் உபதேசிக்கப் பெற்றவர் அல்லவா? தம் அருமை நரேந்திரருக்கு ஒரு நன்னாளில் அந்த அமிருத மந்திரத்தை உபதேசித்தார் பரமஹம்ஸர். ஆதியில் பரமேசுவரன் ஜகன் மாதாவுக்கு ஸ்ரீ ராம மந்திரத்தை உபதேசித்தான். இப்போது அதற்கு ஈடாக, ஈசுவராம்சமாகிய நரேந்திரருக்குச் சக்தியம்சமான பரமஹம்ஸர் உபதேசித்தார் போலும்!

பிள்ளைப் பிராயத்திலே பெற்றிருந்த ராமப் பிரேமை மீண்டும் பொத்துக் கொண்டு வந்து விட்டது நரேந்திரருக்கு. அன்னையின் மடியில் ராம காதை கேட்டது. சீதாராமப் பதுமையைப் பூஜித்தது. பிறகு உடைத்தெறிந்தது. அப்படியும் அன்பு உடையாமல் ராமாயண படனங்களுக்குத் தவறாமல் சென்றது இவ்வளவையும் இப்போது நினைவு கொண்டார் நரேந்திரர். ராம லாலாவைப் பாராட்டிச் சீராட்டிய பரமஹம்ஸர் மந்திரோபதேசம் செய்தார் என்றால் கல்லும் கூடக் கரைந்துவிடாதோ?

மாலைவேளையி லிருந்து ஸ்ரீ ராமபிரானைக் கூவிக் கூவி அழைத்தபடி காளிப் பூர் வீட்டைச் சுற்றிச்சுற்றிப் பிரதட்சிணம் செய்யலானார் நரேந்திரர். 'ராமனாகவும் கிருஷ்ணனாகவும் வந்தவன் இதோ ராம கிருஷ்ணனாக வந்திருக்கிறான்' என்று குருநாதர் சொல்லப் போவதை முன்னதாகவே அறிந்து, அந்த வீட்டில் படுத்திருந்த ராமரைத்தான் அவர் அப்படிப் பிரதட்சிணம் செய்தாரோ? தரிசன ஆர்வம் பற்றி எரிய நரேந்திரர் பிரதட்சிணம் செய்தது அக்கினி ஜ்வாலை ஒன்று அவ்வீட்டைச் சுற்றி வருவதாகவே இருந்தது.

குருநாதருக்கு நரேந்திரரின் கட்டுக்கடங்காத பக்தி வெறி — வெறிதானா?—அறிவிக்கப்பட்டது. அவர் கலங்கவில்லை. "இருக்கட்டுமே! சிறிது போதில் — சரியாவான்" என்றார் குளிர்ந்து.

"ராமா, ராமா" என்று இதயம் பிளக்கக் கதறியபடி நரேந்திரர் அதிகாலைவரையில் சுற்றி வந்தார். பரமஹம்ஸர் அவரைத் தம் அருகே அழைத்துக் கொண்டார். "குழந்தாய் நரேந்தர், நீ இப்படிப் பொறுமை இழக்கலாமா? இதோ என்னைப் பார்! நீ இப்போது படும் பிரிவுத் துயரை நான் பன்னிரண்டாண்டுகள் பட்டிருக்கிறேன். பன்னிரண்டாண்டுகள் என் மனதில் புயல் வீசியிருக்கிறது, பிறகுதான் தெய்வ தரிசனம் பெற்றேன். அதை நீ ஓர் இரவில் பெற முடியுமா?" என்று அன்பொழுகக் கேட்டார்.

நரேந்திரருள் வீசிய புயல் ஓய்ந்தது. பரமஹம்ஸர் பல்லாண்டுகள் பாடு

பட்டிருக்கலாம். நரேந்திரருக்குப் பரமஹம்ஸர் போல் அந்தப் பரமஹம்ஸருக்கு ஒரு கருணைக் குரு இல்லாததால் அவர் அவ்வளவு பாடுபட்டார். ஆனால் நரேந்திரரோ தாம் எதிர்பாராமலே, சில சமயங்களில் தாம் விரும்பாமலும் கூட, குருநாதரின் கிருபையால் பெரு நிலைகளைப் பெற்றவராயிற்றே!

ஒருநாள் நரேன் தியானம் செய்து கொண்டிருந்த போது திடீரென்று மார்பில் ஏதோ ஒன்று குறுகுறுத்துப் படரும் உணர்ச்சி ஏற்பட்டது. குண்டலினிசக்தி விழிப்புற்று மேலேறிச் செல்லத் தொடங்கியதுதான் காரணம். மருத்துவக் கூற்றுக்கு வராத இடை பிங்கலை என்ற நாடிகளையும் நரேன் அப்போது தெளிவாக உணர்ந்தார்.

தமக்கு தந்திர மார்க்க அநுபவம் கிட்ட குரு மஹராஜ் அநுக்கிரகித்து விட்டார் என்று நரேந்திரர் புரிந்து கொண்டார். அதைத் தொடர்ந்து முந்தைய தினம் நடைபெற்ற நிகழ்ச்சி நினைவுக்கு வந்தது.

ஆம், முதல் நாள் நரேன் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் மனத்தாங்கலுடன் கூறினார்: 'ஒவ்வொருவருக்கும் ஏதோ ஒரு விதமான ஸித்தி கிடைக்க அருளியிருக்கிறீர்கள். எனக்கும் ஏதோ கொஞ்சம் கிட்ட அருள் செய்யுங்களேன்! நான் மட்டும் தனியாக விடப்படலாமா?' என்று. பரமஹம்ஸர், 'உன் வீட்டினருக்கு ஏதேனும் ஓர் ஏற்பாட்டைச் செய்து முடி. உனக்கு எல்லாம் கிட்டும். ஏண்டா பயலே, உனக்கு என்னதான் வேண்டும் என்கிறாய்?' என்று கேட்டார். 'மூன்று அல்லது நாலு நாட்களுக்கு நான் சமாதியிலேயே ஆழ்ந்திருக்க வேண்டுமென விரும்புகிறேன்' என்றார் நரேன். உடனே குருநாதர் 'நீ ஒரு முட்டாள். அதைவிட உயர்ந்த நிலை ஒன்று உண்டு. **உள்ளவை யாவும் நீயே** என்று நீ ஒரு பாட்டுப் பாடவில்லை?... வீட்டுக்கு ஏதாவது ஒரு வழி ஏற்படுத்தி விட்டு இங்கே வா. சமாதிக்கு மேற்பட்ட ஒரு நிலையைப் பெறுவாய்' என்றார்.

'தியாகத்தினால்தான் அமரத்வம் கிட்டும்' என்பது வேதம். அதற்கு முதற் படியாகவே நரேந்திரர் தம் வீட்டுக்காகச் சாதனைகளையும் கைவிட வேண்டுமென்று பரமஹம்ஸர் விதித்தார் போலும்! 'பெற்ற தாய் பிச்சை புகுந்துண்ணும் போது தனயன் உலகுக்கெல்லாம் தானம் செய்து கொண்டிருந்தாலும்' என்ற அபக்யாதி நரேந்திரருக்கு ஏற்பட வேண்டாம் என்றும் குருமஹராஜ் கருதியிருக்கக்கூடும்.

மறு நாள் காலை நரேன் வீட்டுக்குப் போனார். பரீக்ஷைக்கு மும்முரமாகத் தயார் செய்ய வேண்டிய சமயத்தில் படிப்பில் அசிரத்தையாக இருப்பதாக அவரை எல்லோரும் கடிந்துகொண்டார்கள். பாட்டியின் வீட்டுக்குப் போனார். படிக்கத் தொடங்கும் சமயத்தில் சொல்லி முடியாத ஒரு பீதி அவரைக் கவ்விக் கொண்டது. படிப்பதுதான் உலகத்தில் மிகவும் பயங்கரமான காரியம் என்பது போலத் தோன்றியது. அவரது இதயத்தில் ஒரு போர் மூண்டது. அதுபோல் அவர் ஒருநாளும் விம்மி அழுததில்லை என்னும்படியாகக் கதறத் தொடங்கிவிட்டார் நரேன். புத்தகம், நோட்டு, இத்தியாதியை அப்படியே போட்டு விட்டுக் காஸிப்பூருக்கு ஓடலானார். செருப்புக்கள் எங்கோ கழன்று ஓடின. வழியில் ஒரு வைக்கோல் போர். ஓடிய வேகத்தில் வைக்கோல் துண்டுகள் அவர்மேல் ஒட்டிக்கொண்டன. இதொன்றையும் பொருள் செய்யாமல் ஆவேசமாக ஓடிக்கொண்டே வந்து ராமகிருஷ்ணரின் திருமுன்னரை அடைந்த பின்தான் அவர் நிம்மதி கண்டார்.

''நரேன், நீ ஏன் உன் படிப்பைத் தொடரக் கூடாது?'' என்று சிஷ்யரைக் கேட்டார் பரமஹம்ஸர்.

''படிப்புதா? இத்தனை நாளும் படித்ததை யெல்லாம் மறப்பதற்கு ஒரு குளிகை கிடைக்காதா என்று ஏங்கிக் கொண்டிருக்கிறேன்'' என்றார் விழுந்து விழுந்து கல்வி கற்ற நரேந்திரன்.

'படித்ததை யெல்லாம் மறக்கவேண்டிய ஒரு காலமுமுண்டு' என்று மஹரிஷி ரமணர் கூறுவதுண்டு. 'கல்லாதபேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்' என்று தாயுமான சுவாமிகளும் பாடினாரே!

இன்னொரு சமயமும் இப்படியேதான், தமக்குச் சமாதி அநுபவம் வேண்டும் என்று குருமஹாராஜிடம் பிடிவாதம் பிடித்திருக்கிறார் நரேந்திரர். அப்போது பரமஹம்ஸர், ''உனக்கு வெட்கமாக இல்லை? இவ்வளவு அற்பமான விஷயத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறாயே! நீ பெரிய ஆல விருக்ஷம்போலிருப்பாய். ஆயிரக் கணக்கானவர்களுக்கு நிழல் அளிப்பாய் என்று நான் நினைத்தேன். நீயோ உன்னுடைய சுய மோக்ஷத்தை மட்டும் நாடுகிறாய்!'' என்றார்.

பிறருக்கு நிழலளிக்கும் ஆலவிருக்ஷம் தான் வெயிலில் காயவேண்டியது தானே?

'இளம் துறவிகளின் ஞான பரம்பரையொன்று தோன்ற வேண்டும். அதற்கு நரேந்திரர் தலைமை தாங்கவேண்

டும்' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் திருவுளம் கொண்டுவிட்டார். ஒரு நாள் அவர் நரேந்திரரிடம், ''மற்றவர்களை உன் மேல் பார்வையில்தான் விட்டுப் போகிறேன். நான் போன பின்பும் அவர்கள் சாதனைகள் செய்யுமாறும், வீட்டுக்குத் திரும்பி விடாதவாறும் பார்த்துக் கொள்'' என்றார்.

நரேந்திரர் வீட்டுக் காரியங்களை ஒழுங்குபடுத்த வேண்டும் என்று விதித்த அதே பரமஹம்ஸர் மற்றவர்களின் விஷயத்தில் இப்படிக் கூறினார். சிஷ்யர்களின் உள்ளப் போக்குகளில் இருந்த தாரதம்மியத்தை உணர்ந்திருந்ததால் இப்படிக் கூறினாரோ? அல்லது 'வீடு வீடு' என்று ஞாபகமூட்டினாலும் நரேந்திரர் சபலமடையா திருக்கிறாரா என்று பார்க்கத்தான் அவரை மட்டும் சோதித்தாரோ? 'படகு தண்ணீரில் இருக்கலாம்; ஆனால் படகில் தண்ணீர் இருக்கக் கூடாது. ஒருவன் இல்லறத்தில் இருக்கலாம். ஆனால் இல்லற உணர்வு அவனுள் புகக் கூடாது' என்று கூறிய குருமஹராஜ் அந்தக் கடினமான சாதனையை நரேந்திரர் மட்டுமே சாதிக்க முடியும் என்று எண்ணினாரா?

'துறவிகள் சங்கம் ஒன்றைத் தோற்றுவிக்க வேண்டும்' என்ற எண்ணம் குருநாதருக்கு வலுத்து வந்தது. சந்நியாசத்துக்கு முன்னோடியாக ஒருநாள் அவர் தம் சிஷ்யப் பிள்ளைகளை பிக்ஷை எடுத்து வரச் சொன்னார். மானாபிமானம் அற்ற அந்த உத்தமச் சிறுவர்கள் உற்சாகத்தோடு பிக்ஷை எடுக்கச் சென்றனர். கல்வியுடன் சேர்ந்து வளர்வது செருக்கு. ஆனபடியால், கல்வி கற்கும்போதே அந்தச் செருக்கைத் தலையெடுக்க வொட்டாமல் செய்யத்தான் குருகுல வாசத்தில் பிக்ஷை எடுத்துண்ண வேண்டும் என்று விதித்தனர் ஆன்றோர். 'நாம் இப்படி கல்வி கற்கும் காலத்தில் சுகமாக உண்டு மகிழுவதற்கு மற்றவர்கள்தான் உதவி புரிகிறார்கள்' என்று உணர்வதற்காக அந்த மற்றவர்களிடம் பிச்சை எடுக்க விதித்தனர்.

பகவன் நாமத்தைப் பஜித்தவாறு சீடப்பிள்ளைகள் பிக்ஷைக்குப் புறப்பட்டனர். நானாவிதமான 'அநுபவங்கள் அவர்களுக்குக் கிட்டின. படிப்பு என்ற கடமையை விட்டதாகச் சிலர் அவர்களை நிந்தித்தார்கள். சிலர் அவர்களின் பணிவை மதித்து மனமிரங்கினார்கள். அவர்களில் சிலரின் தாய்மாரே தம் பிள்ளைகள் பிச்சை எடுப்பதைக் காண நேர்ந்து கண்ணீர் பெருக்கினார்கள்.

தாங்கள் யாசகம் பெற்ற பொருட்களைக் கொண்டு காசிப்பூர் தோட்டத்தில் சமைத்தார்கள் அந்தச் சீடர்கள். உணவைப் பெருமையுடனும், மரியாதையுடனும் குரு மஹராஜுக்கு நிவேதித்தனர். அவருடைய உள்ளம் உவகை பூத்தது. ஒரே ஒரு பருக்கையை எடுத்துப் புண்ணுண்ட தொண்டையில் விழுங்கினார். ''பேஷாயிருக்கிறது! இதைப் போல் சுத்தமான உணவு வேறுண்டா?'' என்று மகிழ்ந்து கூறினார். உணவு பக்குவமானாற் போலவே சிஷ்யர்கள் சந்நியாசத்துக்குப் பக்குவமாகிவிட்டார்கள் என்று நிச்சயம் பெற்றார்.

## ஈ 605

அறுநூற்றி ஐந்து ஈக்கள் என்று எண்ண வேண்டாம்! சமீபத்தில் மேற்கு ஜெர்மன் ஆராய்ச்சிக் கோஷ்டியினர் தங்கள் ஆராய்ச்சிகள் மூலம் தாவரங்களைப் புழு பூச்சிகளிலிருந்து காப்பாற்றும் ஒரு வித மருந்தைக் கண்டுபிடித்திருக்கின்றனர். இம் மருந்து செடிகளுக்குள் பிரவேசித்து எல்லாப் புழு பூச்சிகளையும் கொன்று விடுகிறது. ஆனால் இதனால் மனிதர்களுக்கு எவ்வித தீங்கும் ஏற்படுவதில்லை. இந்தப் பிரபலமான ரசாயனப் பொருளின் பெயர்தான் 'ஈ 605.'

தானியங்களைப் புழு, பூச்சி, வெட்டுக்கிளி போன்ற இவைகளிடமிருந்து காப்பாற்றுவதற்காகப் பயிர் மீது தெளிக்கப்படும் ரசாயனப் பொருள்கள், மருந்துகள் மூலம் உணவுப் பொருள்களை கூடச் சில சமயங்களில் உபயோகிக்க லாயக்கில்லாத படி போய்விடுகின்றன. தெரியாத்தனமாக அந்தத் தானியத்தை மனிதனோ, பட்சிகளோ உட்கொண்டால் சங்கடம்தான்! ஆனால் ஈ 605-ஐ வயலில் தெளித்த பின் பாஸ்பாரிக் அமிலமாக மாறி விடுகிறது. இது மனிதர்களுக்கு ஆபத்து விளைவிக்காத தன்மையுடையது. தானியங்கள், காய்கறிகள், பழங்கள் எல்லாவற்றின் மீதும் இதைத் தெளிக்கலாம்.

அத்துடன் கரும்புக்கு வரும் நோய்கள், உருளைக் கிழங்குக்கு வரும் நோய்கள் ஏற்படா வண்ணம் இப் புது மருந்து தடுக்கக்கூடியது. இம் மருந்தை விதையில் தெளித்து நட்டாலே கூடப் போதுமாம்!

# அமிர்தாஞ்சனம்

## தடவி தசைவலியைப் போக்குங்கள்

10 மருந்துகள் கலந்த அமிர்தாஞ்சனம் துரிதமாகவும் பூரணமாகவும் குணமளிக்கிறது. ஒவ்வொரு முறையும் சிறிதளவே தேவைப்படுவதால் ஒரு பாட்டில் பல மாதங்களுக்கு வரும். 70 வருடங்களாகப் புகழ் பெற்ற அமிர்தாஞ்சனம், சுளுக்கு, தலைவலி, மார்பில் ஜலதோஷம் மற்றும் எல்லா வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் கைகண்ட நிவாரணமாகும்.

சீதோஷ்ண நிலையில் ஏற்படும் மாறுதல்களாலும் அன்றாட அலுவல்களினால் மனதுக்கும் உடலுக்கும் ஏற்படும் சோர்வினாலும் வலிகளும் ஜலதோஷமும் ஏற்படுகின்றன. ஆகையால் எப்போதும் ஒரு பாட்டில் அமிர்தாஞ்சனம் வைத்திருப்பது நலம்.

அமிர்தாஞ்சனம் இப்போது புதிய அட்டைப் பெட்டியில் வருகிறது. சீசாவின் உள்ளே இருக்கும் அமிர்தாஞ்சனத்தின் இரட்டிப்பு பாதுகாப்புக்காக 'அலு-காப்' வில் வைக்கப்பட்டுள்ளது.




**10 மருந்துகள் ஒருங்கே சேர்ந்தது அமிர்தாஞ்சனம்**

அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ்
பம்பாய் - கல்கத்தா - புது டெல்லி

உள்ளத்தால் குருவைச் சீடர்கள் நெருங்கி வந்தாலும் உடலால் அவரை நெருங்கச் சிலர் அஞ்சியதுமுண்டு. அவருடைய புற்றுநோய் தொற்று நோயோ என்று அரண்டவர்கள் சிலர். இவர்களது தயக்கத்தைக் கண்ட நரேந்திரர் ஒருநாள் குருநாதர் ஒரு கோப்பையில் துப்பியிருந்த கஞ்சி வண்டலையெல்லாம் தாமே எடுத்துக் கரகரவென்று குடித்து விழுங்கினார். சிஷ்யர்களின் பயம் தெளிந்தது.

**ப**ண்டித சசிதர தர்க்க சூடாமணி ஒரு நாள் காஸிப்பூருக்கு வந்திருந்தார்.

குருமஹராஜிடம் ஏதேதோ பேசிக் கொண்டிருக்கையில், அவர் "ஐயனே, தங்களைப் போன்ற நிர்மல ஆத்மாக்கள் இச்சா மாத்திரத்திலேயே தங்கள் உடல் உபாதைகளை நீக்கிக் கொண்டு விடலாம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றனவே! தங்கள் சித்தத்தைச் சிறிது போது நோயுண்ட உடற்பகுதியில் செலுத்தினால் வியாதி சொஸ்தமாகி விடுமே!" என்றார்.

"மகாபண்டிதரான நீங்கள்தானா இப்படிப் பேசுகிறீர்கள்?" என்று வியந்தார் பரமஹம்ஸர். "எவ்வளவு அர்த்தமற்ற யோசனை சொல்கிறீர்கள்! என்னுடைய சித்தத்தை ஈசுவரனிடத்திலேயே என்றைக்கும் மீளாமல் வைத்து விட்டவன் நான். அங்கிருந்து அதனைத் திருப்பி, அழுகிய மாமிசமும் ரத்தமும் கொண்ட இந்தக் கூண்டின் மீது எப்படிச் செலுத்த இயலும்?" என்றார் சித்தத்தைச் சிவன் பாலே வைத்த சித்தர்.

பண்டிதர் மௌனியானார்.

அவர் சென்ற பின் நரேந்திரரும், மற்ற சிஷ்யர்களும் அதே வேண்டுகோளைக் குருநாதரிடம் வலியுறுத்தினர். "எங்களுக்காகவேனும் நீங்கள் இந்த உபாதையிலிருந்து விடுபட்டுத்தான் ஆகவேண்டும்" என்று பிடிவாதம் பிடித்தனர்.

பிறருக்காக உடலை விடுவதை விடப் பிறருக்காக உடலை வைத்துக் கொண்டிருப்பதே ஞானிகளுக்குக் கடினமான காரியம். அந்தக் கடினமான காரியத்தைக் கருணையினால்தான் சாதிக்க முடியும். கருணை மிகுந்த ராமகிருஷ்ணர் சொன்னார் :

"அப்படியானால் நான் என்ன, வேண்டுமென்றே என் இச்சையாக இந்த வேதனையைத் தாங்கி வருகிறேன் என்று நினைக்கிறீர்களா? அது சரியாய்ப் போனால் எனக்கும் ஆட்சேபனை இல்லை. என்றாலும் இது இப்படி இருக்கிறது. எதுவும் சர்வேசுவரியின் மதுரமான சங்கல்பத்தில் தான் இருக்கிறது."

"அப்படியானால், அம்பிகையிடம் உங்கள் உடலைக் குணப்படுத்துமாறு கேட்டுக்கொள்ளுங்கள். உங்கள் பிரார்த்தனைக்கு அவளால் செவி சாய்க்காமல் இருக்க முடியாது" என்று நரேந்திரர் விடாப்பிடியாகக் கூறினார்.

"என் குழந்தையே! நீ அப்படிச் சுலபமாகப் பேசிவிடலாம். இவ்விடத்தால் அது மாதிரி வேண்டிக் கொள்வது ஒருநாளும் முடியாது" என்று பதிலிறுத்தார் குரு.

"முடியாது என்றால் யார் விட்டார்கள்? எங்கள் பொருட்டு நீங்கள் அம்பாளிடம் தெரிவித்துத்தான் ஆக வேண்டும்" என்று வீம்பு செய்தார் நரேந்திரர்.

"சரி, என்ன செய்ய முடிகிறதோ பார்க்கிறேன்" என்று ஒருவாறு சம்மதித்தார் அருளாளர்.

சில மணிகளுக்குப் பின் நரேன் குருவிடம் திரும்பி வந்தார். "அன்னையிடம் கேட்டீர்களா? என்ன சொன்னாள்?" என்று ஆவலுடன் கேட்டார்.

குருநாதரின் முகத்தில் சாந்தமும், நாணமும் மாறி மாறித் தோன்றின. "என் தொண்டையை அவளிடம் காட்டிக் காட்டினேன். 'இந்த ரணம் இருப்பதால்தான் நான் ஏதும் உண்ண முடியவில்லை. நான் ஏதோ கொஞ்சம் உண்ணவாவது நீ தயை செய்யலாகாதா?' என்று கேட்டேன். உடனே சர்வேசுவரி உங்களையெல்லாம் எனக்குக் காட்டினாள். 'ஏன் இவ்வளவு வாய்களால் தான் நீ உண்டு வருகிறாயே! போதவில்லையா?' என்று கேட்டாள். எனக்கு ஒரே வெட்கமாகப் போச்சு. ஒரு வார்த்தை பேசவில்லை நான்" என்றார்.

அன்பினால் தமது 'என்பும் உரியர் பிறர்க்கு' என்று வாழ்ந்தவர் அதே அன்பு காரணமாகப் பிறரது உடலும் உயிரும் தமதாக வாழ்ந்தும் இருக்கிறார்!

**1886**-ம் ஆண்டு சிவராத்திரி நாள். நரேனும், இதர சீடர்களும் உபவாசமிருந்தனர். வெறும் பட்டினி மட்டும் உபவாசம் ஆகிவிடுமா? ஆண்டவனுடன் வசிப்பதல்லவா உண்மையான உப-வாசம்? வெறும் வயிற்றோடும் நிரம்பிய உள்ளத்தோடும் பிறவா யாக்கைப் பெரியோனாகிய பரமேசுவரனை ஏத்திக் கொண்டிருந்தனர் அந்த யுவர்கள்.

காஸிப்பூர் தோட்டம் முழுவதிலும் சிவத்தின் சாந்தம் செறிந்திருந்தது. அன்று மாலை பூஞ்சிதறலாக மழை

பெய்திருந்தபடியால் எங்கும் மண் மணம் நிரம்பி இருந்தது. மேலுலகில் பெரியதொரு பஞ்சுமலையில் பால முருகன் ஏறித் துவைத்து, அதிலிருந்து தும்புகள் கிளம்பிப் பறப்பது போல் சிறு சிறு மேகக் குப்பல்கள் வானத்தில் சிதறிக் கொண்டிருந்தன.

உயர்ந்த பல விஷயங்களை எடுத்துரைக்கலானார் நரேந்திரர். பின்னர் அவரவரும் தியானத்துக்குச் சென்றனர். காளி என்ற சீடர் மட்டுமே நரேந்திரருடன் இருந்தார். நரேந்திரருக்குத் தம்மில் பொங்கும் சிவரஸத்தை வெளிப்படுத்த வேண்டுமென ஓர் ஆசை எழுந்தது. வெளிப்படுத்த முடியுமா என்று பரிசோதித்துப் பார்க்கவும் அவா உண்டாயிற்று. ''சில நிமிஷங்களுக்குப் பிறகு என்னைத் தொட்டுப் பார்'' என்று காளியிடம் கூறிவிட்டு அவர் தியானத்தில் ஆழ்ந்தார். காளியும் தியானம் புரியலானார்.

சில நிமிஷங்களுக்குப் பிறகு காளி நரேனின் வலது முழங்காலைத் தொட்டார். ஓரிரு விநாடிகள் சென்றன.

''சரி, என்னைத் தொட்டபோது எப்படி உணர்ந்தாய்?'' என்று காளியைக் கேட்டார் நரேந்திரர்.

''ஏதோ மின்சார 'பாட்டரி'யைத் தொட்டு 'ஷாக்' அடிப்பது போலிருந்தது'' என்றார் காளி.

அர்த்தஜாமத்தில் ஈசுவரனுக்கு வழிபாடு நடத்திவிட்டு, இளைஞர்கள் மீண்டும் தியானிக்க அமர்ந்தனர். இம்முறை காளி வெகு எளிதிலேயே உடலுணர்வை மறந்து தியானத்தில் ஆழ்ந்து விட்டார். நரேந்திரரைத் தொட்டதால்தான் இது சாத்தியமாயிற்று என்று எல்லோருக்குமே புரிந்து விட்டது.

பூஜை எல்லாம் முடிந்த பின் குருநாதரைப் பார்க்கக் கிளம்பினார் நரேந்திரர். அவரது அறைக்குள் பிரவேசித்தவுடனே குருநாதரின் குரல் வழக்கத்துக்கு விரோதமாக வெகு கண்டிப்புடன் எழுந்தது.

''நரேன், போதிய அளவு சேமித்துக் கொள்ளு முன்பே நீ வீண் செலவு செய்யத் தொடங்கி விட்டாய். நிறையச் சேமித்துக் கொள். அதன் பின்தான் அதை எப்படிச் செலவிடுவது என்பதை அறிவாய். அம்பிகையே அறிவிப்பாள். உன்னுடைய பாவத்தை அந்தப் பையனுக்குள் புகுத்தியதால் நீ அவனுக்கு எவ்வளவு தீங்கிழைத்திருக்கிறாய் என்பது உனக்குத் தெரியுமா? அவன் ஒரு குறிப்பிட்ட மார்க்கத்தை நீண்ட நாளாக அநுசரித்து வந்தான். அதெல்லாம் இப்போது பாழாயிற்று.''

குருநாதரின் கண்டிப்பு இளகிற்று. ''சரி, போனதெல்லாம் போகட்டும். இனி இது போல் செய்யாதே'' என்றவர் பெருமித முறுவலுடன், ''எப்படியாயினும் அந்தப் பையன் அதிருஷ்டக்காரன்தான்'' என்று கூறி முடித்தார்.

அவருக்கு எப்படி அந்தச் சம்பவம் தெரிந்தது என்று நரேன் அதிசயிக்கவில்லை.

**ஸ்ரீ** ராமகிருஷ்ணரின் உடல் நிலை சீர்கேடுற்றுக் கொண்டே வந்தது. வீடு வாசல் எல்லாவற்றையும் மறந்து எதிர்ப்புக்களையெல்லாம் திருணமாகக் கருதிக் காஸிப்பூர் தோட்ட மாளிகையிலேயே ஐக்கியமாகி விட்டனர் சீடர்கள். கண்ணை இமை காப்பது போல் குருநாதரைக் காத்து வந்தனர்.

குருநாதருடைய நோக்காடே உயரியதொரு கல்வியை நரேந்திரருக்குப் புகட்டி விட்டது. 'உடம்பு வேறு, அதனுள் உறையும் ஆத்மா வேறு' என்று முறைசெய்து பிரித்து, உடம்பை ஒதுக்கி ஆத்மாவில் வாழ முடியும் என்பதைக் கண்ணுக்கு மெய்யாகக் கண்டுவந்தார் நரேந்திரர். சாதனை மார்க்கங்கள் யாவற்றையும் அநுசரித்து நமது சாஸ்திரங்கள் கூறுவதெல்லாம் சத்தியம், பரம சத்தியம் என்று மெய்ப்பித்த பரமஹம்ஸர் உடல், ஆத்மா இவற்றின் தொடர்பை — அதாவது தொடர்பின்மையைப் — பற்றி சாஸ்திரங்கள் கூறுவதையும் நிதரிசனமாக்கவே இந்தக் கொடு நோயைத் தாங்கியதாகத் தோன்றியது.

ராமகிருஷ்ணரின் திருவாய் ரத்தம் கக்கும்போது சிஷ்யர்கள் அலமலந்து போவார்கள். அவர் என்னவோ ஏதும் நடக்காதது போல விச்ராந்தியாக இருப்பார். அவர் துடிக்கும் சமயங்களும் உண்டு. அதுவும், எத்தகைய நோவை அவர் அநுபவிக்கிறார் என்பதைப் பிறருக்கு அறிவிப்பதற்காகத்தானோ என்னவோ? நோவு பொறுக்க முடியாமல் போகும் சமயங்களில் அவர், ''உடலும் நோவும் ஒன்றையொன்று கவனித்துக் கொள்ளட்டும். மனமே, நீ ஆனந்தத்தில் தோய்ந்து வாழ்'' என்பார்.

''வியாதி என்பது இந்த ஓர் உடம்புக்குத்தான். பகவானுக்கு எத்தனையோ உடம்புகள் இருப்பதைக் காண்கிறேன். இவ்விடம் அவற்றி லொன்றுதானே?'' என்பார்.

(தொடரும்)

# இன்பமான
# இளம் உலகத்தில்

தன் கனவுகளில் லயித்திருக்கும் இந்தச் சிறுமி இயல்பாகக் குழந்தைகளிடம் காணப்படும் கவர்ச்சியோடே விளங்குகிறாள். அவள் கட்வால் பிராந்தியத்தைச் சேர்ந்தவள். எனினும் அவளது ஆசைகளும், கனவுகளும், வேடிக்கையும் விளையாட்டும் ஓர் எல்லைக்கு உட்பட்டன அல்ல; அவை இன்பமான குழந்தை உலகத்தைச் சார்ந்தவை.

இந்தியக் குழந்தைகள் பலவகை அணிமணிகளை பல வண்ணங்களில் அணிகின்றனர். என்றாலும் அவர்கள் அனைவரும் நம் வாழ்வில் அன்பையும் களிப்பையும் கூட்டுகிறார்கள். நம்முடைய நாட்டின் வருங்காலம்—ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா திடமாக எதிர்நோக்கும் வளமான வருங்காலம் — அவர்கள் கைகளில்தான் அடங்கி இருக்கிறது. நாடு நெடுகிலும் பரவிக் கிடக்கும் கிளைகளின் மூலம் ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா இன்று போல் என்றும் பணி புரியும்.



# இந்தக் காலத்துப் பிள்ளை

ரா. வீ.

"அப்பா!"

உற்சாகக் குரலில் உரக்கக் கூவிக்கொண்டு குதித்தோடி வந்தாள் குழந்தை கமலினி.

அன்று போகிப் பண்டிகை. அப்பொழுது தான் உணவை முடித்துக் கொண்டு கை அலம்பி எழுந்த பரசுராமன், "என்னம்மா! சந்தோஷம் தலைகால் தெரியலியே உனக்கு!" என்று அன்புடன் கேட்டார்.

"தெருக் கோடியிலே பக்கிரிசாமி வர்றான் அப்பா! கையிலே கரும்பும் தலையிலே பெரிய கூடையும் எடுத்துக்கொண்டு வர்றான் அப்பா! நம்ம வீட்டுக்குத்தானே வருவான்?" என்று கேட்டாள் கமலினி ஆவலுடன்.

"ஆமாம், அம்மா! அவன் நம்ம வீட்டுக்குத்தான் வருவான்!" என்றவர் கையலம்பி விட்டு ஓட்டுத் திண்ணைக்கு வந்தார். அதை ஒட்டிய மாடத்தில் பளபளவென்று பொன்னென மின்னிக் கொண்டிருந்தது வெற்றிலைப் பெட்டி ஒன்று. அதைத் திறந்து பாக்கு வெட்டியையும் கொட்டைப் பாக்கையும் எடுத்துச் சன்னமாகவும் வெகு லாகவமாகவும் சீவலானார்.

தேவையான சீவல் சீவிக் கொண்டதும் வாயில் போட்டுக் கொண்டு வெற்றிலைக்காகப் பெட்டியில் கை வைத்தார். அதில் வெற்றிலை இல்லாமல் போகவே, "அடியே! குழந்தை கையில் இரண்டு வெற்றிலை கொடுத்தனுப்பு!" என்று குரல் கொடுத்தார்.

இதே நேரம் ஓர் ஆள் சுமை கறிகாயும், கரும்புமாகப் பக்கிரிசாமி உள்ளே நுழைந்தான். "வெத்திலைதானுங்களே! வரும்போது கொடிக்கால் வழியே வந்துகொண்டிருந்தேன். ராவுத்தர் வெத்திலை கிள்ளிக்கிட்டிருந்தாரு. துளிரா ஒரு கவுளி வாங்கியாந்திருக்கிறேனுங்க! அதைப் போட்டுப் பாருங்க!" என்று கூறிக் கரும்பையும் கறிகாய்க் கூடையையும் இறக்கி வைத்துவிட்டு மடியில் கட்டி வைத்திருந்த வெற்றிலைக் கவுளியை எடுத்துப் பரசுராமனுக்கு எதிரே வைத்தான்.



பரசுராமன் வெற்றிலையில் சுண்ணாம்பு தடவிப் போட்டுக் கொண்டே, "ஏன் பக்கிரி! காலையிலேயே வந்திருக்கக் கூடாது? இந்த வெய்யிலிலே இத்தனை தூரம் நடந்து வந்திருக்கிறயே!" என்றார்.

"பொங்கலுக்காகப் பசுமையாய்க் காய்கறி கொண்டு வரலாம்னு காலையிலே எழுந்து போய்ப் பறிச்சு வந்தேனுங்க. தோட்டத்திலேருந்து புறப்பட நேரமாயிடுச்சு!" என்று கூறிய வண்ணம் பக்கிரிசாமி கறிகாய்களை அவிழ்த்து எடுத்து ஓர் ஓரமாக வைக்கலானான்.

அவன் எடுத்து வைக்கும் கறிகாய்களைப் பார்த்துக் கொண்டே தந்தையின் மடியில் அமர்ந்திருந்த கமலினி, "எத்தனை பெரிய பூசணிக்காய்! எத்தனை பெரிய பரங்கிக்காய்! பாத்தியா அப்பா?" என்றாள்.

"கமலுக் கண்ணுக்குக் கண்ணாலம் வரட்டும், அப்போ இன்னும் பெரிய பூசணிக்காயும் பரங்கிக்காயும் கொண்டு வந்து குவிச்சுவிடறேன்!" என்றான் பக்கிரிசாமி.

கல்யாணப் பேச்சு வந்ததும் பரசுராமன் கேட்டார்: "ஏன் பக்கிரி, உன் மகள் பாக்கியத்துக்கு எப்ப கல்யாணம் பண்ணுவதாயிருக்கே?"

"இந்தத் தை பிறந்ததும் செய்துடவேண்டியதுதானுங்க. ஆறு போன வருசம் வாய்க்கால் வெட்டுத் தகிராறுக்கப்புறம் அவரு என்னோட முகம் கொடுத்துப் பேசறதில்லிங்களே!"

"எவரு?"

"அவருதானுங்க. பாகசாலையாரு!"

"பேசாட்டி வேண்டாமே! அதுக்கும் உன் மகள் கல்யாணத்துக்கும் என்ன சம்பந்தம்?"

"எசமானுக்குத் தெரியாதுங்களா? அவரு மகனுக்குத்தானே நம்ம பாக்கியத்தைக் கொடுக்கிறதாப் பிள்ளைப் பிராயத்திலேருந்தே தீர்மானிச்சிருக்கோம்!"

"இன்னும் உனக்கு அதே அபிப்பிராயம் தான் இருக்குதா? போன வருசம் குத்துப் பழி, வெட்டுப் பழி விழுந்திடும்போலப் பேசிக்கிட்டீங்களே இரண்டு பேரும்!"

"அதுக்காவ? கண்ணாலமோ ஆயிரங் காலத்துப் பயிரு. குழந்தைங்க மனசைக் கெடுத்து நம்ம சண்டையைப் பெரிசு பண்ணிக்கணுமான்னு தோணுது. எசமான்தான் மனசு வச்சு ஏதாவது வழி சொல்லணும்!" என்றான் பக்கிரிசாமி.

"சொல்லுவதென்ன? நானே பேசி முடிச்சுடறேன். போ! நீ போய்க் கல்யாணத்துக்குத் தேதியை வச்சிட்டு என்கிட்ட வா! பாக்கியத்தின் கூறைச் செலவு தாலிச் செலவு என்னுது போ!" என்றார் பரசுராமன்.

பக்கிரிக்கு வாயெல்லாம் பல். கொட்டிலுக்குச் சென்று மாடு கன்றுகளுக்குத் தண்ணீர் காட்டிப் போரிலிருந்து வைக்கோல் பிடுங்கி வந்து வைத்தான்.

இதற்குள் நுனி இலையாகப் போட்டுப் போகிக்காகச் செய்திருந்த விருந்தைப் பரி

மாறிக் கைகால்களைக் கழுவிக்கொண்டு வருமாறு பக்கிரிக்குப் பணித்தாள் பரகராமனின் மனைவி பார்வதி அம்மாள்.

அவன் உணவருந்திவிட்டு எழுந்து வருவதற்குள்ளாக இரண்டு படி அரிசி, பழம், பருப்பு, வெல்லம் ஆகியவற்றோடு இரண்டு ரூபாய் வெள்ளிப் பணமும் எடுத்து வைத்திருந்தாள்.

பெண் வீட்டார் செய்யும் சீருக்குப் பிள்ளை வீட்டார் எதிர்ச் சீர் செய்வார்களே, அது போலத் தங்கள் வீட்டுக் குடியானவன் பொங்கலுக்காகக் காய்கறி கரும்பு கொண்டு வந்ததற்குப் பிரதியாகக் கொடுத்த பொருள்கள் அவை. அவன் கொண்டு வந்ததைவிடப் பெறுமானமுள்ளவை.

“வெல்லம் வாங்கலியா, வெல்லம்?” என்று தெருவில் குரல் கேட்கவே, பரகராமன் எழுந்து வாசலுக்குச் சென்றார். கீற்று வேய்ந்த மூழுப் பார வண்டி ஒன்றில் அச்சு வெல்லமும் உருண்டை வெல்லமும் கொட்டிக்கிடந்தன. 'உருண்டை வெல்லம் ஒன்னேகால் ரூபாய், அச்சு வெல்லம் ஒன்னரை ரூபாய்' என்று கூவிக் கொண்டிருந்தான் வண்டிக்காரன். வீசைக்கோ அல்ல; மணுவுக்கு. பேரம் பேசி ஒன்னும் ஒன்னேகாலுமாக விலை தீர்த்து வருஷாந்தரத்துக்கு வேண்டிய வெல்லத்தை நிறுத்து எடுத்து வரச் சொன்னார் பரகராமன்.

பக்கிரிசாமி வெல்லத்தைக் காமிரா உள்ளுக்குள் கொண்டு வைத்துவிட்டுப் பரகராமனிடம் விடை வேண்டி நின்றான். “பொங்கல் முடிஞ்சதும் ஒரு நாள் வந்து வயலைப் புள்ளி பார்த்துவிட்டீங்கன்னு சடபுடன்னு அறுப்புத் தொடங்கிவிடலாம். அந்தக் கையோடு நம்ம பாக்கியத்தின் கல்யாணத்தையும் முடிச்சிடலாம்!” என்று ஒரு கல்லில் இரண்டு மாங்காய் அடிக்கும் தோரணையில் பேசினான்.

“போன வாரம் வந்திருந்தபோது வயலைப் பார்த்துட்டேன் பக்கிரி! நீதான் சொல்லேன், என்ன காணும்?” என்று கேட்டார் பரகராமன்.

“மாவுக்குப் பதினாறு கலம் காணலாமுங்க.”

“உன் புள்ளிக்கும் என் புள்ளிக்கும் மூணு கலம் வித்தியாசப்படுறதே!”

“பதினேழு காணுங்களா? காணவே காணாதுங்க!”

“அப்போ என்னதான் காணும்?”

“உங்களுக்கு எதுக்குங்க சந்தேகம்? ஒரு மா இரண்டு மாவைக் கண்டுமுதல் செய்து பார்த்துக்கங்களேன்!”

“இதோ பார் பக்கிரி உன் பேச்சை நம்பறேன். நீ கண்டதைச் சொல்லு. என் புள்ளி இன்றுவரை தவறியதில்லை. நீயே எத்தனையோ தடவை அனுபவப்பட்டிருக்கே, சொல்லியிருக்கே! உன்னை நம்பாவிட்டால் அல்லவா நான் நேரில் வந்து கண்டுமுதல் செய்யணும்? சாமி சத்தியமா கண்டதைச் சொல்லிவிட்டுக் கொண்டு வந்து எனக்குள்ள வீதத்தை அளந்துவிட்டுப் போ!”

“சரிங்க!” என்றான் பக்கிரி.

“நான் பாகசாலையானைப் பார்த்துப் பாக்கியத்தின் கல்யாண விஷயத்தை முடிச்சுடறேன். நீ கவலைப்படாமல் போய் வா!”

பக்கிரிசாமி என்னும் குடியானவன் மூன்று வேலி மிராசுதார் பரகராமனிடம் இப்படிப் பேசி விடை பெற்றுக் கொண்டது இந்தக் காலம் அல்ல. அந்தக் காலம். அதாவது முப்பது வருஷங்களுக்கு முந்திய காலம். குடியானவனும், மிராசுதாரும் 'அன்பின் வழியது உயிர்நிலை' என்னும் வள்ளுவரது தத்துவத்தைக் கடைப்பிடித்து ஒழுகிய காலம். விவசாயத்தைப் பிரதான தொழிலாகக் கொண்டு உலகம் உண்டு களித்திருக்க ரூபாய்க்குப் பட்டணம் படி பத்துக்குக் கிட்டத்தட்ட அரிசி விற்று வந்த காலம்.

அந்த ஆண்டின் தை மாத இறுதியில் பக்கிரிசாமியின் மகள் பாக்கியத்துக்கு மட்டும் பரகராமன் கல்யாணம் செய்து வைக்கவில்லை. அவன் மகன் பொன்னுரங்கத்துக்கும் பெண் தேடி தாம் தூமென்று திருமணத்தை முடித்து வைத்தார்.

பக்கிரிசாமியும் அறுவடை விஷயத்தில் கண்டதைச் சொல்லி மிராசுதாருக்குக் கிடைக்க வேண்டிய பங்கைக் கொடுத்துத் தனக்குக் கிடைக்க வேண்டிய பங்கைமட்டும் எடுத்துக் கொண்டு திருப்தி யடைந்தான்.

விவசாயம் என்னும் வண்டி குடியானவன் மிராசுதார் என்னும் இரு சகடங்களும் இசைந்து இயங்க ஓடி மக்கள் நலனுக்காக உழைத்த காலமாயிற்றே! ஓரிரண்டு உதிரிகள் அந்தக் காலத்தில் என்ன, எந்தக் காலத்திலும் இருப்பது இயல்புதானே?

அடுத்த பத்தாண்டுகளுக்கெல்லாம் மிராசுதார் பரகராமனின் பெண் கமலினிக்குக் கல்யாணம் வந்தது.



பக்கிரிசாமி மூளைக் காய்ச்சலில் படுத்தவன் ஆள் எலும்பும் தோலுமானான். நடமாடும் சக்தியைக் கூட இழந்திருந்தான். அப்பொழுதுதான் மருந்து பிடிபட்டுக் கொஞ்சம் தேறத் தொடங்கியிருந்தான்.

கமலினிக்குக் கல்யாணம் என்னும் செய்தி காதில் பட்டதும் அவனுக்கு மீண்டும் கால் முளைத்து விட்டது. மெதுவாகப் பரசுராமனின் வீட்டுக்குப் போய் இட்ட வேலைகளைச் செய்ய முயன்றான். தனது குழந்தைகளின் கல்யாணத்தை முடித்து வைத்த புண்ணியவானுக்கு உதவாத உடம்பு என்ன உடம்பு என்ற எண்ணத்தில்.

பரசுராமனோ, ''இந்தப் பலஹீனமான உடம்போடு நீ எதற்கு வந்தாய்?'' என்று கடிந்துகொண்டார். அவனுக்குப் பத்தியமான உணவு தயாரிக்கச் சொல்லி அவனை உட்கார்ந்த இடத்தில் இருந்த வண்ணமே அலுவல்களை மேற்பார்வை பார்க்கச் சொன்னார். அவனோ அவர் பாராத நேரங்களில் ஏதாவது வேலை செய்து, ராமனுக்கு உதவிய அணிற்குஞ்சாகத் தன்னை நினைந்து அகமகிழ்ந்தான்..

சட்டங்களும் திட்டங்களும் அவர்களைப் பிரித்து வைக்காத காலம். குடியானவர்களும் மிராசுதார்களும் தங்களை ஒரு குடும்பமாகப் பாவித்து, ஊர் நலனில் அக்கறை கொண்ட காலம். கமலினியின் திருமணம் அதிவிமரிசையாக நடந்தது. பரசுராமன் குடியானவர்களுக்கெல்லாம் வேட்டி எடுத்துக் கொடுத்து விருந்து வைத்து மகிழ்ந்தார்.

அந்த வருஷம் சீக்காகப் படுத்த பக்கிரிசாமி அப்புறம் உடல் தேறி வயல் வேலைக்குப் போகவில்லை. அவன் மகன் பொன்னுரங்கம் தலையெடுத்து வயல்களைக் கவனிக்கலானான்.

பக்கிரிசாமியின் காலத்தில் அவனுக்கென்று சொந்தமாக ஒரு 'தூச்சக்கரக்குழி' கூட நிலம் கிடையாது. ஆயினும் வளமாகத்தான் வாழ்க்கை நடத்தி வந்தான்.

காலம் செல்லச் செல்ல உலகில் மாற்றம் ஏற்பட்டது. பொன்னுரங்கத்தின் மனத்திலும் மாறுதல் ஏற்பட்டது.

பையன் படிப்புக்காக வேண்டிப் பரசுராமனே நகரவாசியாகி விட்டார். ஆடிக்கு ஒரு முறை ஆவணிக்கு ஒரு முறை என்பது போல் அறுவடைக் காலங்களில் மட்டும் ஊருக்கு வந்து தங்கிப் போவார்.

பரசுராமன் ஊருக்கு வந்திருக்கிறார் என்று கேள்விப்பட்டாலே பொன்னுரங்கத்துக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வரும். 'நம்ம மிராசுதாரன் வந்திருக்கானுமில்லே! கழுகுக்கு மூக்கிலே வேர்த்த கதையாயில்லே இருக்குது! இங்கே வயலிலே இறங்கி நாள் முச்சூடும் உழைக்கிறவங்க நாம். மழை வெய்யிலைப் பார்க்காமல், சேத்திலும் சகதியிலும் இறங்கிப்பாடுபடுகிறவங்க நாம். வேட்டியை வெள்ளையாகக் கட்டிக்கிட்டுக் கை நகத்திலே அழுக்குப் படாமல் சொகுசாக மெத்தையிலே உட்கார்ந்திருந்துட்டு, நெல்லு வெளஞ்சிருக்குன்னு கேள்விப்பட்டு ஊருக்கு ஓடியாறுறாக. இவங்களுக்கு நெல் அளக்கணுமாம் நெல்லு!' என்று மனம்போனபடி பொரிந்து தள்ளுவான்.

பரசுராமன் புள்ளி பார்த்துவிட்டுப் போனாலும் படிக்குப் பாதியாகக் குறைத்துச் சொல்லுவான். அது மட்டுமா? 'உனக்கு நம்பிக்கை இல்லைன்னு கண்டுமுதல் பண்ணிக்கிட்டுப் போயேன்!' என்று ஏக வசனத்தில் கூறுவான். 'உன் அப்பன் இப்படியெல்லாம் நடந்துகொண்டதில்லையே' என்றால் 'அவன் ஏமாந்த சோணகிரி. நீ ஏமாத்திப் பிழைச்சே!' என்பான். அந்தண்டை போய், 'மிராசுதார் கண்டுமுதல்னு வந்தான்னு காலை முறிச்சுப் போட்டுடுவேன்' என்பான். அப்படியும் மீறிப் பரசுராமன் தைரியமாகக் 'கண்டுமுதல்' என்று இறங்கினாலும் போரில் பாதி, களத்தில் பாதி என்று நெல்லைக் கைக்கு வரவொட்டாமலே செய்துவிடுவான். 'காலம் மாறிப் போச்சு' என்று எண்ணிப் பரசுராமனும் வந்ததை வரப்பற்றிக் கொண்டு சண்டைக்கும் சச்சரவுக்கும் இடம் கொடாமல் தாலுக்காகப் போய் வந்தார்.

இப்படியே பக்கிரிசாமியின்மகன் பொன்னுரங்கம் நாளடைவில் பன்னிரண்டு மா நிலத்துக்குச் சொந்தக்காரனே ஆனான். பரசுராமனுக்கோ பையனின் படிப்புக்கென்றும், நில வருமானத்தில் குறைவென்றும் பொன்னுரங்கம் சொந்தமாக்கிக் கொண்டிருந்த நிலத்தைக் காட்டிலும் இரண்டு மடங்கு கையை விட்டுப் போய்விட்டது.

நிலச்சுவான்தாரனுக்கும் குடியானவனுக்கும் உள்ள உறவு குன்றிப் பொருமையும் பகைமையும் மூளவே, அரசியல் கட்சிகளும் அரசியலாரும் தங்கள் தன்னலத்துக்காக விவசாயத்தையும் விவசாயிகளையும் பயன்படுத்திக் கொள்ளவே, மக்களுக்கு விவசாயத்தில் உள்ள ஈடுபாடு குறைந்து விட்டதாகத் தோன்றியது. பூசலைக் கிளப்பி அந்தப் பூசலை ஒடுக்கப் பல சட்டங்களும் திட்டங்களும் நாளுக்கு நாள் நில உச்சவரம்பு, பண்ணையாள் சட்டம் என்று தோன்றவே, பரசுராமனுக்கு இருக்கிற நிலத்தைப் பண்ணையாக வைத்துக் கொண்டாவது வாழ்நாளை ஓட்டலாம் என்ற எண்ணம் வந்தது. அதோடு பையனைப் படிக்க வைத்ததில் பெரிய உத்தியோகமாகக் கிடைத்திருந்தாலாவது தேவலை. நூற்றிப் பத்து ரூபாய் தாலுக்கா ஆபீஸ் குமாஸ்தா. அதுவும் ஒரு நகரத்தில் என்றால் எத்தனைதான் சின்னக் குடும்பமாக இருந்தாலும் நரகமாகத்தானே இருக்கும்?

எனவே, கிராமத்துக்கு வந்து பொன்னுரங்கத்துக்குச் சொல்லி அனுப்பினார். தமது எஞ்சியிருக்கும் பதினைந்து மா நிலத்தைச் சொந்தப் பண்ணையாக்கிக் கொள்ள விரும்புவதாகவும் விட்டுக் கொடுத்துவிடுமாறும் கேட்டார்.

'இத்தனை நாள் பட்டணத்திலிருந்துவிட்டு வந்திருக்கீங்களே! உழுபவனுக்கே நிலம் சொந்தம்கிற கதை உங்களுக்குத் தெரியாதுங்களா?' என்று எதிர்க் கேள்வி போட்டுவிட்டுப் போய்விட்டான் அவன்.

பரசுராமனுக்கு இதயத்தில் யாரோ சாட்டையைக் கொண்டு சொடுக்கினாற் போலிருந்தது. 'இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின் நிலமென்னும் நல்லாள் நகும்' என்னும் வள்ளுவர் வாக்கு நினைவுக்கு வந்தது. மிராசுதார் என்று பெயர்

சூட்டிக்கொண்டு, நிலம் இருக்கும் பக்கமே போகாமல் இருந்ததால்தானே இந்த நிலை ஏற்பட்டது? குடியானவன் தோளோடு தோள் நின்று உழைத்தால், இந்த நிலை ஏற்படுமா? நகரத்தில் அழுக்குப் படாமல் நிழலில் உட்கார்ந்து உண்ண வேண்டும் என்ற எண்ணம் கூடாது. பண்ணையென்று நாமே சொந்தமாகச் சாகுபடி செய்ய வேண்டும் என்னும் தீர்மானம் மேலும் உறுதியாகியது.

எனவே, அவன் தகப்பன் பக்கிரிசாமியைப் பார்த்து, வாய் வார்த்தையாகச் சொல்லிச் செய்து சௌஜன்யமாக நிலத்தை வாங்கிக் கொண்டு பண்ணையாக்கிக் கொள்ளலாம் என்று போனார்.

கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்த கிழப் பக்கிரிசாமி, "எசமான் என் வீடு தேடி வந்திருக்கிறது என் பாக்கியம்!" என்று சொல்லி வரவேற்றான்.

"உன் பாக்கியமா? பரம்பரை பரம்பரையாச் சாகுபடி செய்துக்கிட்டு வர்றோமே, அந்த நிலத்தைப் பண்ணைக்குக் கேக்கிறாரு!" என்று சீறினான் பொன்னுரங்கம்.

"அப்படியா? எசமான் கேட்டா கொடுக்க வேண்டியதுதானே?"

"அது உங்க காலத்திலே! எங்க காலத்திலே நிலம் எங்களுக்குத்தான் சொந்தம். கேட்டாக் கூடக் கொடுக்க முடியாது."

"அப்படிச் சொல்லாதே, பொன்னு! அவாலேதான் நம்ம குடும்பம் இந்த நிலையில் இருக்குது. நம்ம பாக்கியத்துக்கு கண்ணாலம் கட்டி வச்சாரு அவரு. உனக்கும் நல்ல பொண்ணாப் பார்த்து வச்சாரு. ஏதோ கல்யாணம் கார்த்திகை பண்ணி, பிள்ளையைப் படிக்க வச்சுச் சளைக்கப் போயிட்டாரு. கேட்கிறாரு. பண்ணையா வச்சிட்டா ஐயாவுக்கு நாலு கலம் கூடக் கிடைக்கும். உனக்கும்தான் பத்து மா நிலம் சொந்தமாயிருக்குது. கொடுத்திடு தம்பி! ஐயா மனசு சந்தோஷமா இருந்தால், நாமும் நல்லா இருப்போம். ஒரு குறையும் உனக்கு வராது."

"நீ ராமாயணம் படிச்சது போதும். பேசாமல் உன் வேலையைப் பார்த்துக்கிட்டுப் போ. ஏதாவது வீண் பேச்சுப் பேசினே, கஞ்சித் தண்ணியை நிறுத்திப்பிடுவேன்!" என்று கடிந்தான் பொன்னுரங்கம்.

"பார்த்தீங்களா சாமி! இந்தக் காலத்துப் பிள்ளைங்களை!" கண் கலங்கினான் பக்கிரிசாமி.

பரசுராமனுக்கு என்ன பண்ணுவதென்று புரியவில்லை. "பொன்னுரங்கம்! நீயாக் கொடுக்கலேன்னு, நான் கோர்ட்டின் உதவியை நாட வேண்டியதுதான்!" என்றார்.

"தாராளமாக வாங்கிக்கோவேன். சட்டம் எனக்கும் தெரியும். யாரு பக்கம் ஜயிக்கும்ன்னுறதும் தெரியும். உனக்குச் சொந்தப் பண்ணைக்கு நிலம் வேணுமானா ஒண்ணு செய். எனக்குக் குழிக்கு மூணு ரூவா வீதம் கொடுத்துடு. நான் பெரிய மனசு பண்ணி உனக்கு விட்டுக் கொடுத்துடறேன்!" என்றான் பொன்னுரங்கம்.

"குழிக்கு மூணு ரூபாயா? — இது எந்தச் சட்டத்திலே அப்பா இருக்குது?"

"எதுக்கு வீணு வெட்டிப் பேச்சுப் பேசறே? சம்மதமானாச் சொல்லு. இல்லாட்டி கோர்ட்டுக்குப் போ!" — பொன்னுரங்கம் விடுவிடு வென்று அங்கிருந்து போய்விட்டான்.

ஆண்டவன் நிலத்துக்கு இப்படி ஒரு சட்டமா?—கிழவன் பக்கிரிசாமிக்கு வேடிக்கையாக இருந்தது.

"காலத்தின் கோலம் பக்கிரி, காலத்தின் கோலம்! அன்பு நீர் பாய்ச்சிச் செய்யவேண்டிய காரியங்களைச் சட்டம் என்னும் மடையால் தடுப்பதென்றால் இப்படித்தான். என்ன செய்வது? இனி உன் காலமும் என் காலமும் திரும்பி வரப்போவதில்லை. அவர்கள் சட்டமாவது நேர்மைக்கு நீதி வழுக்கிறதா, பார்ப்போம்! நிலம் எனக்குக் கிடைத்துவிட்டால் நிசமாகவே நான் ஏர் பிடித்து உழுவேன். உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் என்னும் தெய்வப் புலவர் வாக்கின்படி வாழ முயல்வேன்" என்று சொல்லி எழுந்த பரசுராமன் பக்கிரிசாமியின் கையில் ஓர் ஐந்து ரூபாய் நோட்டைத் திணித்தார். 'உன் மகன் உதவாவிட்டால் இதுவாவது உனக்குச் சிறு உதவி புரியட்டும். நீ என் வீட்டுக்கு வந்துவிடு. நான் சாப்பிடும் கஞ்சி உனக்கும் கிடைக்கும்' என்று சொல்வது போலிருந்தது அவரது செயல்.

பக்கிரிசாமி கையெடுத்துக் கும்பிட்டான் ஆண்டவனை. அந்தப் பழங்காலமே மீண்டும் வரவேண்டும் என்று வேண்டுவது போலிருந்தது அவனது அந்தச் செய்கை.

# பொன் விலங்கு




## ஐம்பத்துமூன்றாவது அத்தியாயம்

கல்லூரிமாணவர்கள் வேலைநிறுத்தம் செய்திருக்கிறார்கள் என்பதையும், அதற்குக் காரணமாக இருந்தவர் அதே கல்லூரியில் வேலை பார்க்கும் ஓர் இளம் விரிவுரையாளர் என்பதையும் பாரதி கூறக் கேட்டதும் மோகினி தானாகவே மனத்தில் எதை எதையோ கற்பனை செய்து கொண்டு கலங்கினாள்.

'ஐயோ! என்உயிரினும் மேலான தெய்வம் துன்பப்படுவதை நான் அருகில் இருந்தே காணும்படி விதி என்னையும் இங்கே கொண்டு வந்து தள்ளிவிட்டதே' என்று 'அப்படி இருக்குமோ?' என்பதை அநுமானிக்கும் போதே மோகினி நடுங்கினாள். இந்த வேளையில் முன்புறம் போர்டிகோவில் மறுபடியும் கார் வந்து நிற்கும் ஓசையைக் கேட்டுப் பாரதி மோகினியோடு பேசிக் கொண்டிருந்த பேச்சை அப்படியே பாதியில் விட்டு விட்டு எழுந்து போய்ப் பார்த்தாள். காரில் ஜமீன்தாரும் கண்ணாயிரமும், புதிதாகப் பிரின்ஸிபாலும் திரும்பி வந்திருந்தார்கள். கணக்குப் பிள்ளைக் கிழவரை மட்டும் காணவில்லை. அவர்கள் போன இடத்தில் அந்தக் கிழவரை மட்டும் எங்கேயோ விட்டு விட்டுக் கண்ணாயிரத்தை அழைத்துக் கொண்டு வந்திருக்க வேண்டுமென்று தோன்றியது. வந்தவர்கள் மூவரும் காரிலிருந்து கீழேஇறங்கி உள்ளே முன்பக்கத்து அறைக்குள் நுழைந்தவுடன் தோட்டத்துப் பக்கமாகப் பின்புறம் வந்து தன்னைப் பார்க்குமாறு டிரைவர் முத்தையாவுக்கு ஜாடை காட்டினாள் பாரதி. வண்டியை ஷெட்டில் கொண்டு போய் விட்டு விட்டு உடனே வருவதாக அவனும் பதிலுக்கு ஜாடை காட்டிச் சென்றான்.

பின்புறம் தோட்டத்து வராந்தாவின் கிராதியைப் பிடித்தவாறே டிரைவர் முத்தையாவின் வரவை எதிர்பார்த்துக் காத்திருக்கும் போது அப்படிக் காத்திருந்த ஒவ்வொரு விநாடியும் ஒரு தனி யுகமாய் நகருவதாகத் தோன்றியது பாரதிக்கு. அவள் எதை அறிந்து கொள்வதற்காகக் காத்திருந்தாளோ அதை அறிந்து கொள்ள விரும்பியதற்கும் அறிந்து கொண்டு முடிப்பதற்கும் இடையிலுள்ள காலம் ஒவ்வொரு கணமும் கனமாகவும் மெதுவாகவும் தயங்கி நின்றது. அந்த வராந்தாவின் இரும்பு அளிக்கு அப்பால் அளவாகக் கத்தரித்து விடப்பட்ட தோட்டத்து மரங்களின் மறுகோடியில் டிரைவர் முத்தையாவின் தலைதெரிவதை எதிர்பார்த்து அவளுடைய கண்கள் அந்தத் திசையிலேயே இமையாமல் பார்த்துக் கொண்டிருந்தன. கடைசியாக அவனும் ஒரு வழியாக வந்து சேர்ந்தான். கார்ச் சாவிக் கொத்தை வலது கை ஆள்காட்டி விரலில் கொடுத்துச் சுழற்றிக் கொண்டே டிரைவர் முத்தையா விரைவாக நடந்து வந்து கொண்டிருப்பதைப் பார்க்கும் போதே அவள் இதயம் படபடவென்று வேகமாக அடித்துக் கொண்டது. அவன் அருகில் வந்து வராந்தா மேடையின் இரும்பு அளிக்குக் கீழே தனக்கு எதிரில் நின்றதும், ''சிறிது நேரத்துக்கு முன்பு காரில் அந்த மதுரைக் கணக்குப்பிள்ளைக் கிழவரை அழைத்துக்கொண்டு ஜமீன்தாரும், கண்ணாயிரமும் எங்கோ புறப்பட்டுப் போனார்களே? அவரை எங்கே கொண்டு போய் விட்டு விட்டு வந்தார்கள் என்று உனக்குத் தெரியுமா?'' என்று கேட்பதற்குத் துடிதுடித்துக் கொண்டிருந்தாள் பாரதி. ஆனால் டிரைவர் முத்தையாவோ அவள் கேள்வி கேட்பதற்கு இடமே வைக்கா

மல் என்ன என்ன சொல்ல வேண்டுமோ அதையெல்லாம்தானாகவே சொல்லத் தொடங்கிவிட்டான். அடுத்தவர்கள் தங்களிடம் எப்போது எதை எதிர்பார்த்துத் தயங்கி நிற்பார்கள் என்று குறிப்பறிந்து நடந்து கொள்கிற சாமர்த்தியம் படித்துப் பட்டம் பெற்ற பலரிடம் கூட இல்லாமல் போகிற அதே வேளையில் படிப்பறிவில்லாத வெறும் அநுபவசாலிகள் சிலரிடம் அந்தச் சாமர்த்தியம் அளவற்றிருப்பதைச் சில சமயங்களில் நாம் கண்டு வியக்க நேரிடும். டிரைவர் முத்தையா தானும் அத்தகைய அநுபவசாலிகளில் ஒருவன் என்பதை அப்போது நிரூபித்தான்.

"பாரதி அம்மா! உங்களுக்குத் தெரியுமா சேதி? காரியங்களெல்லாம் ரொம்பத் தந்திரமாயில்லே நடக்



குது? நேத்திக்கிப் பொழுது சாயறப்போ மதுரையிலேருந்து கார்லே டான்ஸ்கார அம்மாளைக் கூட்டிக்கிட்டு வந்தாரே ஒரு கணக்குப்பிள்ளைக் கிழவரு — அவருதான் நம்ப சத்தியமூர்த்தி சாரோட தகப்பனாராம். தகப்பனாரு ஜமீன்தார் ஐயாவுக்கும், கண்ணாயிரத்துக்கும் ரொம்பப் பயந்து கட்டுப்படறாரு. அதுனாலே அவரை அனுப்பியே சத்தியமூர்த்தி சாரை அடக்கிடலாமின்னு ஜமீன்தார் ஐயாவும், கண்ணாயிரமும் கனாக் காண்றாங்க... பிரின்ஸிபால் வீட்டுக்குக் கூட்டிகிட்டுப் போயி ஏதோ டைப் அடிச்ச கடுதாசியை அந்தக் கிழவரு கையிலே திணிச்சு லேக் அவென்யூவிலே சத்தியமூர்த்தி சாரோட ரூம் பக்கத்திலே கொண்டு போய் 'அவரை இறக்கி விட்டுப்பிட்டு வந்திருக்காங்க.. மேலே என்ன நடக்கப் போவுதோ? ஒண்ணும் தெரியலே....''

இதைக் கேட்டுப் பாரதியின் திகைப்பு அடங்கவே சில விநாடிகள் பிடித்தன. ஏழ்மையில் நைந்த கோலமும் அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டுக் கட்டுப்பட்டுப் பயந்த சுபாவமும் உள்ளவராகத் தோன்றிய அந்தக் கணக்குப்பிள்ளைக் கிழவருடைய முகத்தை இப்போது நினைவுக்குக் கொண்டுவர முயன்றாள் அவள். எதிரே வந்து கம்பீரமாக நிமிர்ந்து நிற்கும்போது அப்படி நிற்கிற நிலையிலேயே 'நான் ஒரு தீரன்' என்று நிரூபித்துக் கொண்டு — வாய் திறந்து பேசினால் எதிரே நின்று கேட்கிறவர்களைப் பிணிக்கும் கணீரென்ற குரலுடன் பேசும் சத்தியமூர்த்தியையும் இந்தக் கணக்குப்பிள்ளைக் கிழவரையும் சேர்த்துத் தந்தை மகன் என்ற உறவு கற்பித்து நினைக்கவும் முடியாமல் தயங்கியது அவள் மனம். இந்தக் கிழவர்தான் தன்னுடைய தந்தை என்பதைத் தானும் தன் தந்தையும் முன்பு மதுரை மஞ்சள்பட்டி அரண்மனையில் போய்த் தங்கியிருந்தபோது அங்கு தன் தந்தையைச் சந்திக்க வந்த வேளையில் அவரிடம் கூடச் சத்தியமூர்த்தி தெரிவிக்கவில்லை என்பதையும் பாரதி இப்போது நினைவு கூர்ந்தாள். தாங்கள் மதுரையிலுள்ள மஞ்சள்பட்டி பங்களாவில் தங்கியிருந்த சமயத்தில் இந்தக் கிழவரை அங்கே அடிக்கடி பார்க்க நேர்ந்தும் கூட இவர்தான் சத்தியமூர்த்தியின் தந்தை என்பதைத் தெரிந்துகொள்ள நேரிடாமல் போனதை நினைத்து இப்போது அவளுக்கு ஆச்சரியமாகத்தான் இருந்தது. திகைப்பிலிருந்து விடுபட்டுத் தன் நிலையடைந்த பின்பே டிரைவர் முத்தையாவுக்கு விடை கொடுத்தாள் அவள்.

''அந்தக் கிழவரை அழைத்துக் கொண்டு அவர்கள் வெளியே புறப்படும்போதே சந்தேகமாக இருந்தது. அரை குறையாகக் காதில் விழுந்ததிலிருந்து ஒன்றும் புரிந்து கொள்ள முடியவில்லை. அதுதான் உன்னைக் கேட்கலாமென்று கூப்பிட்டேன் முத்தையா! நான் கேட்காமல் நீயே எல்லாம் சொல்லி விட்டாய்.''

''அப்புறம் வந்து பார்க்கிறேனம்மா! ஒரு மணிக் கூறு கழிச்சு மறுபடியும் போயி விட்ட இடத்திலேருந்து அந்தக் கிழவரை இங்கே அழைச்சிக்கிட்டு வரணுமின்னு ஜமீன்தார் ஐயாவோட உத்தரவு....'' என்று சொல்லிப் பாரதியிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றான் டிரைவர் முத்தையா. உள்ளே மோகினி தனியாயிருந்தும், அங்கே போய் அவளோடு எதிரே உட்காரத் தோன்றாமல், 'சத்தியமூர்த்தியை அவருடைய தந்தை என்ன சொல்லி அடக்க முயல்வார்? அதற்கு அவர் எப்படி எப்படி மறுத்துக் கூறுவார்?' என்று அங்கேயே வராந்தாவிலிருந்த நாற்காலியில் அமர்ந்து சிந்திக்கத் தொடங்கி விட்டாள் பாரதி. நியாயத்தைக் காற்றில் பறக்க விட்டுவிட்டு அவர் தம்முடைய தகப்பனாரது வற்புறுத்தலுக்காக இணங்கிவிடுவார் என்று அவளால் கற்பனை செய்து பார்க்கவும் கூட முடியவில்லை.

அவள் இப்படி இங்கே தன் வீட்டில் உட்கார்ந்து வெறும் கற்பனையில் தந்தையும் மகனுமாகச் சந்திக்கும் அவர்களுடைய சந்திப்பைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்த அதே வேளையில் அங்கே லேக் அவென்யூவில் உள்ள சத்தியமூர்த்தியின் அறையில் அவனுக்கும் அவனுடைய தந்தைக்கும் கடுமையான விவாதம் நிகழ்ந்து கொண்டிருந்தது.

குமரப்பன் அவனுடைய கடையைக் கவனிப்பதற்காகக் கீழே இறங்கிப் போன பின் சத்தியமூர்த்தி பலவிதமான சிந்தனைகளுடன் மாடியறையின் வெளி வராந்தாவில் உலாவிக் கொண்டிருந்தான். உலாவிக் கொண்டிருந்தவனுடைய பார்வை தற்செயலாகக் கீழ்ப்பக்கம் திரும்பியபோது சாலையில் ஏதோ ஒரு பெரிய கார் வந்து நின்றதையும் அதிலிருந்து தன் தந்தை இறங்கிப் படியேறுவதற்காக மாடியை நோக்கி வருவதையும் பார்த்து வியப்படைந்து. 'இவர் எப்போது மல்லிகைப் பந்தலுக்கு வந்தார்? எதற்காக வந்தார்? மாணவர்களின் வேலை நிறுத்தத்தைப் பற்றியோ, எனக்கும் கல்லூரி நிர்வாகத்திற்கும் நடுவேயுள்ள வேறுபாடு பற்றியோ தகவல் தெரிந்து அல்லது


உஷ்... ஷ்...
தெரியுமா சேதி...
அம்மா

# அவரிடம் உங்கள் ஆசையைக் காட்ட...



**அம்பீஸ்**

**காண்டிமெண்ட்ஸில்**

**தயாரித்த**

**உணவு**

**கொடுங்கள்**

- சாம்பார் பொடி
- ரசப் பொடி
- கறிப் பொடி

தயாரிப்பாளர்:—

**அம்பீஸ் கபே** 6. பிராட்வே, சென்னை—1

---

வாடிக்கையாளர்களுக்கும், ஆதரவாளர்களுக்கும் எமது பொங்கல் வாழ்த்துக்கள்!

---



# ஸ்பார்ட்டன் ஆட்டோ-லாக்கர்கள்

**5 முக்கிய அம்சங்களுக்கு உத்திரவாதம் அளிக்கிறது**

- ★ வர்ணத்தின் திடம்
- ★ உபயோகிப்பதின் எளிமை
- ★ நீண்டகால ஈரபிதம்
- ★ நீடித்த பளபளப்பு
- ★ சீரான தர மேன்மை



இந்தியாவில் முதலில் தயாரித்து
இன்னும் முன்னணியில் இருப்பவர்கள்



அடிஸன்ஸ் பெயின்ட்ஸ் & கெமிகல்ஸ் லிட்.
செம்பியம் - - சென்னை-11

மெம்பர்: இந்தியன் பெயின்ட் அஸோசியேஷன்



பத்திரிக்கைகளில் நான் கைது செய்யப்பட்டதாகச் செய்தி வெளியானதைப் பார்த்துப் பதறிப் போய் உடனே புறப்பட்டு வந்துவிட்டாரோ?" – என்றுதான் அவரைப் பார்த்ததும் நினைக்கத் தோன்றியது சத்தியமூர்த்திக்கு. உடனே கீழே படியிறங்கிப் போய், "வாருங்கள்!" என்று தந்தையை வரவேற்றவனுக்குப் பதில்கூடச் சொல்லாமல் உள்ளடங்கிய ஆத்திரத்தோடு மேலே படியேறி வந்தார் அவர். மிகவும் கோபமும் கொதிப்பும் அடைந்து வெறுப்போடு வந்திருக்கிறார் என்பது அவர் பதில் சொல்லாமல் படியேறி வந்ததிலிருந்தே தெரிந்தது.

"பிழைக்க வந்த இடத்திலே அதிகாரமுள்ளவங்க யாரோ அவங்க தயவைச் சம்பாதிக்கவிட்டு, வேலையை ஒழுங்காகப் பார்த்து மாதம் முடிஞ்சாச் சம்பளத்தை எண்ணி வாங்கறதை விட்டுப்பிட்டு இதெல்லாம் என்னடா அசிங்கம்? நீ செய்யறது உனக்கே நல்லாயிருக்கா?" என்று அறைக்குள் நுழைந்ததும் நுழையாததுமாகச் சத்தியமூர்த்தியின் முகத்தை நேருக்கு நேர் பார்க்காமல் எங்கோ மேல் விட்டத்தைப் பார்த்துக் கொண்டே இரைந்தார் அவனுடைய தந்தை.

"என்ன நடந்திருக்கிறது என்பதை விவரமாகத் தெரிந்துகொண்டு பேசுங்கள் அப்பா! ஒருத்தருடைய தயவைச் சம்பாதிக்கணும் என்பதற்காக நியாயத்தை விட்டுவிட முடியாது. முறை தவறி நான் எதையும் செய்யவில்லை...."

"மகா நியாயத்தைக் கண்டுப்பிட்டே நீ... என்னமோ... இதெல்லாம் சிறுபிள்ளைத்தனம்! பொடிப் பசங்க கைதட்டறாங்கன்னு இன்னிக்குச் சந்தோஷப்பட்டுக்கலாம். நாளைக்கு வேலை போனப்புறம் தெருவிலே நின்னு வயிறு காய்ந்தால் அப்போ அதிகாரம் யாரிட்ட இருக்கோ அந்தப், பெரிய மனுசங்க தயவுதான் வேண்டியிருக்கும்..."

"எதைப் பற்றிச் சொல்கிறீர்கள் அப்பா?"

"அதான் பேப்பர்லே எல்லாம் வந்திருக்குதாமே. எனக்கு ஒரு மழவும் தெரியாது. ஜமீன்தாரு இங்கே ஒரு காரியமா ஒருத்தரைக் காரிலே மதுரை வேர்ந்து அழைச்சிக்கிட்டு வான்னாரு. வந்தேன். வந்தா இங்கே நீ பண்ணியிருக்கிற கூத்தையெல்லாம் சொன்னாங்க. ஏதுடா ஏழைக் குடும்பமே... கலியாணத்துக்கு ரெண்டு தங்கச்சி நிக்கிறதே? ஒண்ணையுக் நீ உணர்ந்ததாத் தெரியலே.... ஜமீன்தார் ரொம்பப் பொல்லாதவரு. மனசிலே வைரம் வைச்சார்னு அவ்வளவுதான்..."

"ஆனால் நியாயம் அவரை விடப் பொல்லாதது அப்பா..."

"இந்தா பாருடா...! உன்னையெத்தானே? உன்னோட வாதாடறத்துக்கு நான் இங்கே வரலே... நான் சொல்றதைக் கேளு... 'ஏதோ தெரியாத்தனமாகப் பையன்களை ஸ்டிரைக்குக்குத் தூண்டிப்பிட்டேன். நான் ஹாஸ்டல் ஷெட்டுக்குத் தீவைக்கத் தூண்டினதும் தப்புத்தான். இந்த ஒரு தடவை மட்டும் என்னைப் பெரிய மனசு பண்ணி மன்னித்துத் தொடர்ந்து வேலை பார்க்க வழி செய்யணும்னு...' இதிலே நீயே வேண்டிக்கிறாப்பலே அவங்களே டைப் அடிச்சுக் கொடுத்திருக்காங்க... மூச்சு விடாமே இதிலே ஒரு கையெழுத்துப் போடு...ஜமீன்தார் காலேஜ் நிர்வாகி என்கிற முறையிலே இதை வாங்கி இரகசியமா பையிலே போட்டுப்பிட்டு உன்னை மன்னிச்சிடுவாரு. அதுக்குத்தான் நான் வந்திருக்கேன். ஜமீன்தாரும் கண்ணாயிரமும் நமக்கு ரொம்ப வேண்டியவங்க...... கண்ணாயிரத்திடம் கடன் வேறே பட்டிருக்கோம். வீணா அவங்களை முகத்தை முறிச்சுக்கப்படாது. சொல்றதைக் கேளு!" என்று தந்தை நீட்டிய டைப் செய்த காகிதத்தை வாங்கி அவரே எதிர்பார்த்திராதபடி கோபத்தோடு சுக்கல் சுக்கலாகக் கிழித்தெறிந்தான் சத்தியமூர்த்தி.




"மன்னிக்க வேண்டும். அப்பா! உங்கள் ஜமீன்தாரிடம் போய் 'என் மகன் அடங்காப்பிடாரி... அவன் நான் புத்திமதி கூறியும் கேட்கவில்லை' என்று சொல்லி விடுங்கள். என்னை விழ்த்திவிட வேண்டுமென்று அவர்களே ஹாஸ்டல் ஷெட்டிற்கு நெருப்பு வைத்துவிட்டுப் போலீஸ் ஸ்டேஷன் வரை என்னை இழுத்தடித்திருக்கிறார்கள். நான் நியாயம் கிடைக்கிற வரை சும்மா விடமாட்டேன்..." என்று அந்த டைப் செய்த தாளைக் கிழித்தெறிந்த கையோடு அவன் கைகட்டி நிமிர்ந்து நின்று கொண்டு பதில் சொல்லிய போது தந்தையின் முகம் கோபத்தினால் சிவந்து

உதடுகள் துடித்தன. மீசை ஆடியது. அவனை நோக்கி ஆவேசமாகக் கூப்பாடு போட்டுக் கொண்டே அவர் திரும்பினார்.

''இனிமே உனக்கும் எனக்கும் என்னடா இருக்கு? மகனாவது ஒண்ணாவது? ஒரு வார்த்தைக்குக் கட்டுப்படலேன்னு நீ என்னடா மனிசன்? உன் முகத்திலே முழிக்கிறதே பாவம்! மானம் மரியாதை இருந்தா இனிமே ஊர்ப்பக்கம் வீட்டுப் பக்கம் என்னைப் பார்க்க வராதே! உன்னைப் பெத்த தகப்பனின்னு நானும் வேலையத்துப் போயி இங்கே தேடி வந்தேனே?'' என்று காறித் துப்பிவிட்டு அதே வேகத்தோடு படி யிறங்கினார் அவனுடைய தந்தை. சத்தியமூர்த்தி அப்போது அவரைத் தடுக்கவில்லை. அவர் நின்று நிதானித்துப் பேசுகிற சுய புத்தியோடு வரவில்லை என்று அவனுக்குப் புரிந்து விட்டது. நியாயம் அவன் பக்கம் இருந்தாலும் அதை விட்டு விட்டு ஜமீன்தாருக்கே அடிபணிய வேண்டுமென்ற தந்தையின் பயத்தை அவன் வெறுத்தான். தந்தை தன்னுடைய பக்கத்திலிருந்த நியாயத்தை அறியாமலோ அறிய விரும்பாமலோ அல்லது அறிய மனம் இல்லாமலோ—பிடிவாதம் பிடித்ததைக் கண்டு அவனால் பொறுமையோடு இருக்க முடியவில்லை. 'அறியாமை அவ்வளவு இழிவு அன்று. அறிய மனம் இல்லாமைதான் மிக மிக இழிவு' என்று ஒரு தத்துவ ஞானி சொல்லியிருப்பதை இப்போது நினைத்தான் அவன். தந்தை தன் பக்கத்து நியாயத்தை அறிய மனமில்லாமலே புறக்கணித்துத் தனக்கே குழி பறிக்கத் துணையாகவும், சான்றாகவும் ஆகிற ஒரு நாளில் தன்னைக் கையொப்பமிடத் தூண்டிப் பிடிவாதம் பிடித்ததைக் கண்டு பொறுமை இழந்த அவன் அதைச் சுக்குநூறாகக் கிழித்தெறிந்ததைக் கண்டு அவர் ஆத்திரப்பட்டுவிட்டார். அந்த ஆத்திரத்தில் என்ன பேசுவதென்று தெரியாமல் பேசிவிட்டுப் போய்விட்டார். அதற்காகவும் சத்தியமூர்த்தி கவலைப்படவில்லை. ஒரு நிலைமைக்கு மேல் போய்விட்டால் அப்புறம் கவலைகள்தான் மெய்யான நண்பர்களாகி விடுகின்றன. அவற்றைப்போல் சிந்தனைக்குச் சக்தியூட்டுவதற்கு வேறு வற்றாலும் முடிவதில்லை. நூற்றுக் கணக்கான மாணவர்களை ஏமாற்றி விட்டு அவன் தான் மட்டும் பிழைக்க ஆசைப்படவில்லை. மறுநாள் கலெக்டரும் மாவட்டப் போலீஸ் அதிகாரியும் மல்லிகைப் பந்தலுக்கு வந்து முகாம் செய்து விசாரிப்பதாக இருந்தது. அதற்குள் இப்படி ஒரு கடிதத்தில் கையெழுத்து வாங்கித் தன்னை அடக்கி வீழ்த்திவிட முயலும் அவர்களுடைய சூழ்ச்சியைப் புரிந்து கொள்ளாமல் ஓரளவு படிப்பும் பகுத்தறிவும் உள்ள தந்தையே ஏமாந்ததை எண்ணி அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை அவனுக்கு. 'அவரைச் சொல்லி என்ன குற்றம்? பணமும் செல்வாக்கும் இருப்பதனால் ஜமீன்தாரும் கண்ணாயிரமும் தான் இந்த உலகத்தின் அதி தேவதைகள் என்று நினைத்துச் சதாகாலமும் அவர்களைச் சுற்றிக் கொண்டு திரிகிறவரிடம் வேறென்ன எதிர்பார்க்க முடியும்?'' என்றெண்ணி வருந்தினான் அவன். தந்தை போன பின்பு சிறிது நேரத்துக்கெல்லாம் குமரப்பன் கீழே கடையிலிருந்து மேலே மாடிக்குப் படியேறி வந்து விசாரித்தான். (தொடரும்)



## மாண்புறு நிலமே!

சித்ரா

காய்தரும் மரில் வாய்தரும் அரசியே!
கதிர்முதிர் பயனைக் காட்டும் இறைவியே!
எல்லாம் வல்லாய் இருநிலச் செல்வியே!
எமக்குணை வருளும் இன்பால் முலையாய்!
எம்பொருள் பிறக்கும் எழில்வயிற் றன்னையே!
எம்முளத் தன்பும் எம்நிறை மாலையும்
நினக்கே தருவோம் நிறையநீ யருளிய
எழில்வளச் செல்வம் ஏந்தியே வருவோம்
பலநிற மகிழ்ச்சியின் பண்ணையே! நின்னை
வாழ்த்துவம் புகழ்வம் மாண்புறு நிலமே!
கஞ்சமும் முரசும் கைமுழக் குவமே.

[கவிக்குயில் சரோஜினி தேவியின் பாடல் ஒன்றைத் தழுவியது.]

# பத்தினிக் கோட்டம்

ஜெகசிற்பியன்

### அத்தியாயம் நாற்பத்தொன்று

## தந்தையும் மகளும்

அடுத்தநாள். மாலை மயங்கும் நேரம்.

அந்தச் சிறிய இல்லத்தின் படுக்கை அறையில் பிரமை பிடித்தவர்போல் உட்கார்ந்திருந்தார் பழையாறைச் சோழர். அவருக்கு எதிரிலிருந்த கட்டிலைச் சுற்றி மருத்துவத்தில் கைதேர்ந்த சமண கௌந்திமார் மூவர் நின்றிருந்தனர். அவர்களுக்குச் சற்று அப்பால் சாந்தமே வடிவாகச் சிந்தனையில் ஆழ்ந்து நின்று கொண்டிருந்தார் சமந்தபத்திரர். இவர்கள் அனைவருடைய பார்வைக்கும் இலக்கான நிலையில் அந்தக் கட்டிலின்மேல் பிரக்ஞையிழந்து படுத்துக் கிடந்தாள் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி !

அறையில் மெல்ல மெல்ல இருள் சூழ்வதை அறிந்த சமந்தபத்திரர் ஓசைப்படாமல் எழுந்து போய் விளக்கேற்றினார்.

இவ்வளவு நேரம் அறுத்துப் போட்ட பூங்கொடியென அசைவின்றிப் படுத்துக் கிடந்த இளங்கோப்பிச்சியின் உடல் இலேசாக நெளிந்து புரண்டது. இதைக் கண்ட கௌந்திகள் முகம் மலர்ந்தவர்களாய்ச் சற்று விலகி நின்றனர்.

''கவலைப்படுவதற்கு இனி ஒன்றுமில்லை, ஐயா! முன்னெச்சரிக்கையாகத் தாங்கள் நேற்றிரவே என்னிடம் விவரம் சொல்லி அழைத்து வந்து உடனடியாகச் சிகிச்சையை மேற்கொண்டதால்தான் தங்கள் குமாரி இப்போது உயிர் பிழைத்திருக்கிறார் ! இல்லையென்றால் நிலைமை வேறு விதமாக முடிந்து விட்டிருக்கும்!'' என்று தணிந்த குரலில் சொன்னார் சமந்தபத்திரர்.

நன்றியுடன் அவரைப் பார்த்துத் தலையசைத்துக்கொண்ட பழையாறைச் சோழர் தம் மகளை ஆவலோடு கூர்ந்து நோக்கினார்.

இளங்கோப்பிச்சி மெல்லக் கண் திறந்தாள். தன்னைச் சுற்றி நின்றிருந்தவர்களை மிரள மிரளப் பார்த்து விழித்தாள். பழையாறைச் சோழர் இதைக் கண்டு மகிழ்ச்சி மேலிட்டவராய், ''இளங்கோப்பிச்சி!.........'' என்று அன்பாவேசத்துடன் அழைத்துக் கொண்டே அவளருகில் எழுந்தோடினார்.

இளங்கோப்பிச்சி தன் முழங்கைகளை ஊன்றிக்கொண்டு தலையை மட்டும் மேலே தூக்கினாள். அடுத்த கணம் அவள் முகத்தில் ஒருவித கோபாக்கினி சுடர் விட்டது. ''யார் ஐயா, நீங்கள்?'' என்று சற்றே அதட்டலான குரலில் கேட்டாள்.

பழையாறைச் சோழரின் உடல் குப்பென்று வியர்த்துக் கொட்டியது. அவளைப் பார்க்க அச்சமும் கூச்சமும் அடைந்தவராய்க் கைகளைப் பிசைந்த வண்ணம், ''நான்தான் மகளே ! என்னை உனக்குத் தெரியவில்லையா?'' என்று அடைத்த குரலில் குழறினார்.

ஏதோ ஓர் ஆவேசத்தால் தெம்பி திமிர்த்தப்பட்டவள்போல் திடுமென்று எழுந்து உட்கார்ந்த இளங்கோப்பிச்சி அவரைச் சுட்டெரித்துவிடுபவள் மாதிரி வெறித்துப் பார்த்துக் கலகலவெனச் சிரித்தாள். ''ஓ..... பழம் பெருமை வாய்ந்த சென்னி குலச் செல்வரம் பழையாறைச் சோழர் அல்லவா நீங்கள்? வணக்கம், ஐயா! நலம்தானே?''

பழையாறைச் சோழரின் உள்ளம் அதிர்ந்தது. அவர் தம் மகளைத் திருதிருவென விழித்துப் பார்த்தார்.

''ஆமாம்; நீங்கள் ஏன் இங்கு வந்தீர்கள்? உங்களுக்கு எவ்வளவோ அதி முக்கியமான அலுவல்களெல்லாம் இருக்குமே! பல்லவ நாட்டின் எதிர்கால நலன்களைக் கட்டிக் காப்பதற்காகவும், சைவ சமயத்துக்கு ஏற்பட்டு விட்ட ஆபத்தைத் தடுத்து நிறுத்துவதற்காகவுமே அவதாரம் செய்திருக்கும் மகா புருஷரான நீங்கள், அந்தப் பெரும் பணிகளுக்காக ஊர் ஊராகப் போய்ப் பிரசாரம் செய்து மக்களைத் தட்டியெழுப்ப வேண்டியதை விட்டுவிட்டு உங்கள் பொன்னான நேரத்தை வீண் படுத்திக்கொண்டு என்னை ஏன் பார்க்க வந்திருக்கிறீர்கள்?'' என்று மீண்டும் அதே குத்தல் சிரிப்புடன் கேட்டாள் இளங்கோப்பிச்சி.

பழையாறைச் சோழரின் முகம் பாறையாக இறுகிக் கறுத்தது. தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு மௌனமாக நின்றார் அவர்.

''நல்ல வேடிக்கைதான்! மாபெரும் வீரரான பழையாறைச் சிற்றரசர் ஓர் எளிய பேதைப் பெண்ணின் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் மௌனம் சாதிப்பது விந்தையிலும் விந்தையே! அப்படியானால் நான் இன்னும் சில கேள்விகளையும் கேட்கலாமா? கேட்டுத்தான் ஆக வேண்டும்: சளுக்கியரிடம் அடிமைப்பட்டுக் கிடந்த பல்லவ நாட்டை மீட்பதற்காகக் கொஞ்ச காலம் அவர்களுடன் கூட்டுச் சேர்ந்து நாடகம் ஆடியதாகச் சொன்னீர்களே, அது எவ்வளவு தூரம் உண்மை? பல்லவ நாட்டுக்குக் கதிமோட்சம் இல்லை என்ற நிலைமை இருந்த வரை எதிரிகளோடு கூடிக் குலாவிவிட்டுப் பிறகு நிலைமை மாறும்போல் தெரிந்ததும் அந்தத் துரோகச் செயலுக்கு இராஜ தந்திர மூலாம் பூசிக் காட்டிக்கொண்டு திரும்பி வந்து விட்டீர்கள் என்று நான் சொல்கிறேன், இதை உங்களால் மறுக்க முடியுமா?''



> ஒரு குடியானவன் மரணப் படுக்கையில் கிடந்தான். அவன் தன்னைப் போலவே பிள்ளைகளும் நிலத்தை நன்ருகக் கவனித்து வரவேண்டும் என்று எண்ணினுன். அதனுல் அவன் தன் பிள்ளைகளை அருகில் அழைத்தான். ''மக்களே! என்னுடைய திராக்ஷைத் தோட்டம் ஒன்றில் புதையல் இருக்கிறது!'' என்று குடியானவன் சொன்னுன். அவன் இறந்த பிறகு பிள்ளைகள் கையில் மண் வெட்டி கடப்பாறை ஆகியவற்றை எடுத்துக் கொண்டு புறப்பட்டார்கள். மிக உன்னிப்பாகத் திராக்ஷைத் தோட்டங்களை யெல்லாம் நன்ருகத் தோண்டிப் பார்த்தார்கள். அவர்களுக்கு எங்கும் எதுவும் கிடைக்கவில்லை. ஆனுல் அந்த ஆண்டு அவர்களுடைய கஷ்டம் வீண் போகாமல் ஏராளமாக விளைந்தது. — ஈசாப்

அடிபட்ட வேங்கைபோல் சினந்து நிமிர்ந்த பழையாறைச் சோழர், ''இளங்கோப்பிச்சி..!'' எனக் கூவினுர்.

''அநியாயமாகப் பழி சுமத்துகிறேனே என்று ஆத்திரப்படுகிறீர்களா? அப்படியானுல் பல்லவ மாமன்னர் தம் சுய முயற்சியால் பெற்ற வெற்றியை நீங்கள் ஏன் ஒப்புக் கொள்ள மறுத்து அவருக்கு எதிராகக் கலகக் கொடியைத் தூக்கிக்கொண்டு புறப்பட்டிருக்கிறீர்களாம்? பல்லவ நாட்டின் வெற்றிக்குரிய முழுப் பெருமையும் உங்கள் ஒருவரையே சார்ந்திருக்க வேண்டும் என்றும், அதைக் கொண்டு பரமேசுவர வர்மரை உங்கள் கைப் பாவையாக ஆட்டிப் படைக்க வேண்டும் என்றும் ஆசைக் கனவு கண்டிருக்கிறீர்கள்; அந்தப் பேராசைக் கனவைப் பல்லவ மன்னர் தகர்த்து விட்ட தோடல்லாமல் அவரது வெற்றிப் பெருமையில் ஆந்திர இளவரசியும், மூத்தரையரும் பங்கு பெறும்படி செய்து விட்டார்; இந்த எதிர்பாராத ஏமாற்றத்தை உங்களால் பொறுக்க முடியவில்லை; அதனுல் மனக் காய்ச்சலடைந்து தகாத திசையில் திரும்பி விட்டீர்கள்— அப்படித்தானே ?''

கடு சரங்களால் துளைக்கப்பட்டவர் போல் தம் உடம்பை நெளித்துக் கொண்டு விழிகளை உருட்டிப் புரட்டினுர் பழையாறைச் சோழர்.

''அப்பா! உங்கள் நெஞ்சிலே கை வைத்துச் சொல்லுங்கள்: ஆந்திர இளவரசி உத்தமசீலியைப் பரமேசுவர வர்மர் மணப்பதால் நம் சைவ சமயத்துக்கு ஆபத்து ஏற்படும் என்று நீங்கள் நிஜமாகவே நினைக்கிறீர்களா? அவன் இந்த நாட்டின் விடுதலைக்காகச் செய்த உதவிகளெல்லாம் வெறும் அரசியல் சதி நோக்கம் கொண்டவைதாம் என்றும் நம்புகிறீர்களா? அப்படியானுல் பரமேசுவரவர்மரைவிட நீங்கள் சைவ சமயத்தில் அதிகப் பற்றும் பக்தியும் கொண்டவர் என்று உங்களால் சொல்லிக் கொள்ள முடியுமா? இந்த நாட்டின் சுயாதிக்க உரிமையிலும், மக்களின் அகப்புற வாழ்க்கை நலன்களிலும் அவரைவிட உங்களுக்கு அதிக அக்கறையும் பொறுப்பும் உண்டு என்ருவது உங்களால் கூற முடியுமா? உண்மையில் நீங்கள் ஒரு மாசற்ற தேசபக்தராகவும், சைவ சமயத்தில் தூய பற்றுள்ளவராகவும் இருந்தால் உங்களுடைய மனத்தில் இத்தகைய தாழ்மை யுணர்ச்சியோ, பொருமையோ சிறிதளவும் தோன்றியிருக்காதே! சிவநேசச் செல்வமணியாக விளங்கும் மங்கையர்க்கரசியாரின் சகோதரர் என்பதற்கு அருகதையுள்ளவராகவா நீங்கள் இப்போது நடந்து கொள்கிறீர்கள்? உங்களுடைய தவருன நடவடிக்கைகளை நான் எப்படித் தெளிவாகத் தெரிந்துகொண்டு பேசுகிறேன் என்று திகைக்கிறீர்களா? அன்றொரு நாள் வேகவதி ஆற்றங்கரையில் நீங்களும் கோவிந்தவர்மரும் பேசிக் கொண்டிருந்ததை யெல்லாம் ஒரு பெண் மறைந்திருந்து கேட்டு விட்டு ஆற்றில் குதித்து நீந்தி ஓடி மறைந்தாளே, அந்தப் பெண் வேறு யாருமல்ல; நானேதான் அப்பா!''

அதிகாயபாகுவான பழையாறைச் சோழர் கூனிக் குறுகி நின்ருர்.

''இன்னென்றையும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும், அப்பா! உங்களுடைய தடம் தவறிய நடத்தையாலும் போக்காலும் உங்களுக்கு மட்டுமல்ல, எனது இன்ப வாழ்க்கைக்கும் இடர் தேடி விட்டீர்கள் என்பதை அறிவீர்களா? சூது வாது அறியாத வெகுளி மனம் படைத்த சுத்த வீரரான பல்லவ இளவரசர் கோவிந்தவர்மரை ஏமாற்றி, அவரையும் தவருன வழிக்கு அழைத்துச் சென்று விட்டீர்களே, இது உங்களுக்கு நியாயமா, அப்பா? உண்மையில் அவர் உங்களுடைய கருத்துக்களை ஒப்புக்கொண்டு, உங்கள் பேச்சுக்குக் கட்டுப்பட்டுப் பல்லவ மன்னருக்கு விரோதமாக நடக்கிருர் என்று நீங்கள் நம்புகிறீர்களா? நான் அவ்வாறு நம்பவே மாட்டேன். என் மீது கொண்ட எல்லையற்ற காதலின் அறிவு மயக்கத்தினுல்தான் அவர் உங்களுடைய இழுப்புக்கெல்லாம் இழுபட்டுக் கொண்டிருக்கிருர். என்ருவது ஒரு நாள் தம் சகோதரரை நேரில்

சந்தித்து விட்டாலோ, அவருடைய போக்கு அடியோடு மாறி விடும். அப்போது உங்களுக்கு மட்டுமல்ல, எனக்கும் அவரே எமனாகி விடுவார்.''

பழையாறைச் சோழரின் முகம் சவமாக வெளுத்துச் சிறுத்தது. கசப்பான மருந்தைக் கொஞ்சம் கொஞ்சமாக உட்கொள்கிறவர்போல் உடலை முறுக்கிக்கொண்டு நின்றார் அவர்.

இளங்கோப்பிச்சியின் கண்கள் புதுப் புனலென நீர் சொரிந்தன. அவமானமும் வேதனையும் செறிந்த குரலில் அழுதுகொண்டே மேலும் சொன்னாள்: ''அப்பா! பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரை நீங்கள் பணிய வைக்க முயன்று வருகிறீர்கள்; ஆனால் அவரோ உங்கள் இருவரின் தலை மீதுமே ஒரு பெரிய பாறையைத் தூக்கிப் போடத் தீர்மானித்துவிட்டார்! பல்லவ சாம்ராஜ்யத்தின் மணிமுடி மீது கோவிந்தவர்மர் ஆசைப்படுகிறார் என்றும், அந்த ஆசையை அவருக்கு நீங்கள்தான் தூண்டி விட்டிருக்கிறீர்கள் என்றும், அதனாலேயே நாட்டில் குழப்பத்தை உண்டுபண்ணுகிறீர்கள் என்றும் கூறி, உங்களின் பேராசைப்படியே தம் அரசுக் கட்டிலைக் கோவிந்தவர்மரிடம் ஒப்படைத்துவிட்டுத் தாம் இந்நாட்டை விட்டே வெளியேறிவிடப் போவதாக அவர் முடிவு செய்து விட்டாராம்....''

இதைக் கேட்டு நெஞ்சில் வேல் பாய்ந்தவர்போல் துடித்துப் பதறிய பழையாறைச் சோழர், ''என்ன? இதெல்லாம் உண்மைதானா, இளங்கோப்பிச்சி?'' என்று வினவினார்.

''ஊம்! இந்த மாபெரும் நாட்டையே உலுக்கிக் குலுக்கிக்கொண்டிருக்கும் அந்தச் செய்தி உங்களுக்குத் தெரியாமல் இருப்பதுபற்றி நான் வியப்படையவில்லை! ஏனென்றால், கேவலம் ஒரு பெண்ணைக் கொலை செய்ய நினைக்கும் அளவுக்கு உங்கள் வீரமும் விவேகமும் இப்போது மழுங்கிப் போய் விட்டிருக்கின்றன! என்னுடன் இங்கே ஆந்திர இளவரசி உத்தமசீலியும் தங்கியிருக்கிறாள் என நினைத்துக் கோழைத்தனமாக அவளைக் கொலை செய்யத்தானே நேற்றிரவு வாளேந்தி வந்தீர்கள்? ஆனால் அதிர்ஷ்டவசமாக அந்தச் சீலமிகு ஞானமங்கை, கூரத்தில் சேதியக் கலைஞரின் புதிய கிருகத்துக்குப் போய் விட்டாள்! அதனால் உங்கள் வீரமும் மானமும் தப்பிப் பிழைத்து விட்டன!'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே பிரக்ஞை இழந்து அப்படியே படுக்கையில் சுருண்டு சாய்ந்தாள் இளங்கோப்பிச்சி.

''ஐயோ! பாதகம் செய்து விட்டேனே! இந்நேரம் அந்த அநியாயம் நடந்து விட்டிருக்குமே!'' என்று பைத்தியம் பிடித்தவர்போல் உளறிக் கூவிக் கொண்டே வெளியில் பாய்ந்தோடிய பழையாறைச் சோழர் சடாரென்று திரும்பி வந்து, ''அடிகளே! என் அருமை மகள்......'' என்று குழறினார்.

''நீங்கள் ஏதோ ஓர் அக்கிரமச் செயலைத் தடுக்கப் போவதாக நினைக்கிறேன்; உடனே புறப்படுங்கள், ஐயா! உங்கள் செல்வக் குமாரிக்கு எவ்வித ஆபத்தும் நேர்ந்து விடாமல் நான் காப்பாற்றுகிறேன்!'' என்று அமைதியாகப் பதிலிறுத்தார் சமந்தபத்திரர்.

அடுத்த கணம், பழையாறைச் சோழரின் புரவி கூரம் கிராமத்தை நோக்கி வளியென விரைந்து சென்று மறைந்தது.

### அத்தியாயம் நாற்பத்திரண்டு

## மன்னிப்பு ஏன்?

காஞ்சி அரண்மனையில் அரச குடும்பத்தினரின் வழிபாட்டறையிலிருந்து இறைவனைச் சேவித்த மனச்சாந்தியுடன் வெளியே வந்த பரமேசுவரவர்மன் தன் வரவுக்காகக் காத்திருந்த சேதியக் கலைஞர் பரவாதிமல்லரைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தவனாய், ''வாருங்கள், கலைஞரே! நலம்தானே?'' என்று அன்புடன் வினவியவாறு அவர் அருகில் சென்றான்.

மகத்தான காரியம் ஒன்றைச் சாதித்துவிட்டு வந்திருப்பது போன்ற பெருமிதம் முகத்தில் பொங்க அவனைப் பார்த்து, ''மன்னரவர்களின் கருணையன்பால் நன்னலமே!'' என்று தலை தாழ்த்தினார் பரவாதிமல்லர்.

''கலைஞரைச் சந்தித்து நீண்ட நாட்களாகி விட்டன!.... கூரத்திலிருந்துதானே வருகிறீர்கள்?''

''இல்லை, அரசே! மாமல்லபுரத்துக்குப் போய் அங்கிருந்து திருப்பருத்திக்குன்றம் வழியாகக் காஞ்சிக்கு வந்திருக்கிறேன்.''

திருப்பருத்திக்குன்றத்தில் உத்தமசீலி இன்னமும் தங்கியிருக்கிறாள் என்றே எண்ணிக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன், அங்கிருந்து வந்திருக்கும் பரவாதிமல்லரிடம் அவள் ஏதேனும் செய்தி அனுப்பியிருப்பாள் என்று உள்ளூறப் பரபரப்படைந்தான். ஆனால் பரவாதிமல்லரோ, ஆந்திர

> நமது நாடு குடிசைகளில்தான் வாழ்கிறது என்பதை மறவாதீர்கள்! ஆனா! அந்தக் கிராம மக்களுக்கு உதவுபவர் யாருமில்லையே! விதவா விவாகம் பற்றியே நமது சீர்திருத்தவாதிகள் ரொம்பவும் முனைப்பாக இருக்கிறார்கள். சீர்திருத்தங்களை நான் அநுதாபத்தோடு நோக்குகிறேன். என்றாலும் நம் நாட்டின் விதி விதவைகளுக்கு எத்தனை கணவர்கள் கிடைக்கக் கூடும் என்பதைச் சார்ந்திருக்கவில்லை. பொது மக்களின் சூழ்நிலையையே அது சார்ந்திருக்கிறது. அவர்களை உங்களால் உயர்த்த முடியுமா? அவர்கள் இன்று இழந்து நிற்கும் தங்களின் தனித் தன்மையை மீண்டும் பெற்றுத் தரவும், அதே சமயத்தில் தமது உள்ளார்ந்த ஆத்மீக இயல்பை அவர்கள் இழக்காமல் இருக்கவும் நீங்கள் உதவ முடியுமா?
>
> — ஸ்வாமி விவேகானந்தர்

இளவரசி கூரத்துக்குச் சென்றிருப்பதைப் பல்லவ மன்னன் அறிந்திருப்பான் என்று நினைத்து, அதுபற்றித் தன்னிடம் ஏதோ சொல்லப் போகிறான் என்று அவன் முகத்தை 'ஆவலுடன் ஏறிட்டு நோக்கினார்.

தான் எதிர்பார்த்ததுபோல் சேதியக் கலைஞர் ஏதும் சொல்லாதிருக்கவே தன் உணர்ச்சிகளை மறைக்க இளநகை பூத்தவாறு, ''கூரத்தில் கலைஞர் தமது மாளிகையைக் கட்டி முடித்திருப்பார் என்று நினைக்கிறேன். புதுமனை புகுவிழா எப்போது நடத்துவதாக உத்தேசம்?'' என்று கேட்டுக்கொண்டே வழிபாட்டறைக்கு வலப் பக்கவாட்டிலிருந்த ஒரு குருந்த மரத்தை நோக்கி நடந்தான் பரமேசுவரவர்மன்.

''அது சம்பந்தமாக மன்னரவர்களைக் கண்டு பேசவே இங்கு வந்திருக்கிறேன்'' என்று தம்மை மீறிய குதூகலக் குழைவுடன் கூறிய பரவாதிமல்லர் அவனைப் பின்தொடர்ந்தார்.

குருந்த மரத்தின் காலை நேரத்து நீண்ட நிழலில் போய் நின்ற பரமேசுவரவர்மன், ''கலைஞர் என்ன பேச விரும்புகிறார்?'' என்று அமைதியாகக் கேட்டான்.

''பல்லவ அரசாங்கத்தின் பேராதரவைக் கொண்டு கூரத்தில் நான் உருவாக்கியிருக்கும் புதிய கிருகத்தை மாமன்னரவர்கள் நேரில் வந்து பார்வையிட வேண்டுமென்றும், அதன் பிரவேச விழாவை அவரே முன்னின்று நடத்தி வைக்க வேண்டுமென்றும் பெரிதும். விரும்புகிறேன்!''

''இன்றையச் சூழ்நிலையில் கலைஞரும் நானும் அந்தச் சந்தோஷத்தைப் பகிர்ந்துகொள்ள முடியுமா என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்!''

சட்டென்று நிமிர்ந்த பரவாதிமல்லர் எதையோ புரிந்து கொண்டவர்போல் தம் வெண் தாடியை நீவியவாறு சொன்னார்: ''என்னைப் பற்றியும் கூரத்தில் கட்டி முடித்துள்ள அந்தப் புதிய கிருகத்தைப் பற்றியும் நாட்டு மக்களிடையே எத்தகைய அபிப்பிராயம் நிலவுகிறது என்பதை அறியாமல் இப்படி வந்து அழைப்பு விடுக்கிறேனே என்று அரசரவர்கள் நினைத்துச் சங்கடப்படுவதாகத் தோன்றுகிறது. ஆனால்....''

வேகமாகத் தலையசைத்த பரமேசுவரவர்மன் உறுதியான குரலில், ''அதைப் பற்றியெல்லாம் சிறிதும் கவலைப்படவில்லை, கலைஞரே! பல்லவ நாட்டின் விலைமதிப்பற்ற பொக்கிஷமென நான் மதித்துப் போற்றும் மகா சேதியக் கலைஞரான தங்களுக்குக் கூரத்தில் கட்டப் பெற்றிருப்பது போன்ற பல மாளிகைகளைக் கட்டிக்கொள்ள எல்லா விதமான உதவிகளைச் செய்யவும் சித்தமாயிருக்கிறேன்'' என்றான்.

பரவாதிமல்லர் இதைக் கேட்டுச் சிறுபிள்ளைபோல் கலகலவென்று சிரித்தார். ''கூரத்தில் எனக்காக மாளிகை கட்டிக்கொண்டு விட்டேனா? யார் அப்படிச் சொன்னது?''

திடுக்குற்ற பரமேசுவரவர்மன் அவரை வியப்புடன் கூர்ந்து நோக்கினான்.

''ஆம், அரசே! எனக்காக, அந்தக் கிருகம் கட்டப் பெறவில்லை; வேறொருவருக்காக, வேறொன்றுக்காகவே அதை நிர்மாணித்திருக்கிறேன்!''

பரமேசுவரவர்மனின் மனம் குழம்பிக் கலங்கியது. அந்தக் கூரம் இல்லத்தைப் பற்றிப் பழையாறைச் சோழர் சொல்லி வரும் குற்றச்சாட்டுகளெல்லாம் இப்போது அவன் நினைவில் அக்கினிக் கணைகளைப் பாய்ந்து வந்து தைத்தன. தன் செவிகளால் தீண்ட விரும்பாத கசப்பான சேதி ஒன்றைக் கேட்டுக் கசப்படையத் தயாராவதுபோல் அவரை வெறித்து நோக்கினான் அவன்.

பரவாதிமல்லர் மீண்டும் அதே குறும்புச் சிரிப்புடன் கூறினார்: ''அந்த விஷயத்தை அரசரிடம் தெரிவிக்கு முன் வேறொரு சேதியைத் தெரிவித்தாக வேண்டும். அதாவது... எனக்காக மன்னரவர்கள் மனமுவந்து அளித்த முற்றூட்டுச் சாசனத்தைத் தங்களது அநுமதியின்றி மற்றொன்றுக்காகப் பயன்படுத்தி விட்டேன் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொண்டு அதற்காக மன்னிப்பும் கோருகிறேன்.''

(அடுத்த இதழில் முடியும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




வெளுக்கும் துணிகளெல்லாம் வெண்மை மயம், துப்புரவான தூய்மை மயம்: வெல்வது ஸர்ப் சலவையின் எல்லைமீறிய வல்லமை! கரைகடந்த நுரைவளம்! கேட்பானேன். சேலை, சிற்றுடை முதல் சிறுவரின் ஆடைவரை ... எதற்கும் நிகரிலாத வெண்மை, சிகரமான தூய்மை! கைப்பட வீட்டிலே துணி வெளுக்க ஒரே வழி: கைகண்ட ஸர்ப்!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

SU. 38-140 TM